## எவ்வளவு தூய்மையானது பாருங்கள்!




பியர்ஸ் சோப்புக் கட்டியை வெளிச்சத்துக்கு எதிரே பிடித்துப் பாருங்கள்—நேரடியாக அதன் மூலம் உங்களால் ஊடுருவி நோக்க முடியும்! ஆம், பியர்ஸ் தூய்மை என்றால் அதுதான்! பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பரிபூரணமான பாதுகாப்புத் தரும் அளவுக்கு பியர்ஸ் அவ்வளவு தூய்மையும் மென்மையும் கொண்டது!

## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்!



பியர்ஸ் சோப் உங்கள் சருமத்துக்கு நல்லது. அசல், க்ளிஸரின் அடங்கிய இந்த அழகு தரும் சோப் சருமத்தைப் பல்லாண்டுகள் மிருதுவான எழிலுடன் வைத்திருக்கிறது. பியர்ஸ் சோப்பைத் தவறாமல் உபயோகிக்கத் தொடங்குங்கள்.




# பியர்ஸ் சோப்

அசல், க்ளிஸரின்
அடங்கிய, அழகு தரும் சோப்

லண்டனிலுள்ள ஏ & எப். பியர்ஸ் லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது. TG. 85-50 TM

மலர் 16 இதழ் 15

# கல்கி

துன்முகி ஸ்ரீ ஐப்பசி 26

நவம்பர் 11 1956

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



இருமலிலிரு
ந்து விரைவில்
நிவர்த்திபெற
வேண்டுமா?

க்ளைகோடின்
டெர்ப் வசாகா

Alembic

அலெம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் கம்பெனி லிமிடெட், பரோடா-3.
நீங்கள் அலெம்பிக்கின் மேல் பூரண நம்பிக்கை வைக்கலாம்.



மலர் 16 | தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற | துன்முகி ௵
இதழ் 15 | தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | ஐப்பசி 33

# உலகம் எதிர்க்கும் யுத்தம்!

"எகிப்தின் மீது பிரிட்டிஷ் பிரதமர் போர் தொடுத்து விட்டார், கெய்ரோ தாக்கப்பட்டது" என்ற செய்தியைப் படித்தவுடன் எல்லோரும் திடுக்கிட்டனர்! சரித்திரத்தில் கண்டும் கேட்டுமிராத அக்கிரமமல்லவா என்று பாரதத் தலைவர்கள் குமுறினர். உலகத் தலைவர்கள் பொங்கினர். உலக நாடுகள் எல்லாம் "அக்கிரமம்! அநியாயம்!" என்று கூக்குரலிட்டன. ஏன், பிரிட்டனிலுள்ள பெருந்தன்மையும் தகுதியுமுள்ள பிரிட்டிஷ் மக்கள் எல்லாம் தங்கள் பிரதமரின் போக்கைக் கண்டித்தனர்.

பிரிட்டிஷ் பிரதமர் ஈடன் ஏன் இத்தகைய நடவடிக்கை எடுத்துக் கொண்டார்? இந்தக் கேள்விக்குக் கீதையில்தான் விடையைக் காண்கிறோம். ஆசையின் காரணமாகக் கோபமும், கோபத்தின் காரணமாகப் புத்தி நாசமும் மனிதனுக்கு ஏற்படுகிறது என்று கீதையில் கூறப்பட்டிருக்கிறதல்லவா? அந்த 'புத்திநாசம்'தான் பிரதமர் ஈடனுக்கு ஏற்பட்டு இத்தகைய வெட்கக் கேடான காரியத்தை மேற்கொண்டிருக்கிறார்.

சூயஸ் கால்வாயின் மீது ஏற்பட்ட ஆசை, எகிப்து ஜனாதிபதி நாஸரின்மீது கோபமாக மாறியது. மிரட்டி உருட்டிப் பார்த்தார். எப்படியாவது சூயஸைத் தமது சுவாதீனத்துக்குள் கொண்டு வந்து விடவேண்டும் என்று என்னவெல்லாமோ சதியாலோசனைகள் செய்து பார்த்தார். சதிகள் பயனளிக்கவில்லை என்றவுடன் அவரது ஆசை கோபமாக மாறியது!

அந்தக் கோபத்தில் எகிப்தின் அண்டை நாடான–யூதர்களின் ராஜ்யமான–இஸ்ரேலின் தலைவர்களைத் தம் கைக்குள் போட்டுக் கொண்டு, அவர்களுக்கு உதவுவதாகச் சொல்லி எகிப்தின் மீது அக்கிரம யுத்தத்தைத் தொடங்கி விட்டார். புத்தி நாசத்தின் விளைவாக ஈடன் செய்த இந்தக் காரியத்தால், ஈடனுக்குச் சூயஸ் கிடைக்காமற் போவது மட்டுமன்றி ஊழி ஊழி காலம் நிற்கக் கூடிய பெரும் பழியும் பிரிட்டனுக்கு நிலைத்துவிடப் போகிறது!

* * * *

இரண்டு அரக்கர்கள் சேர்ந்து ஒரு எலியின் பேரில் யுத்தம் நடத்துவதைப் போல், பிரிட்டனும் பிரான்ஸும் சேர்ந்து கொண்டு எகிப்தைத் தாக்கி வருகிறார்கள். அத்துடன் இந்த யுத்தத்தில் பெறும் வெற்றியை வீர முழக்கம் வேறு செய்கிறார்கள்!

ஆனால் உண்மையில் பிரிட்டன், தனது சரித்திரத்தில் இதுவரை கண்டிராத படுதோல்வியையே அடைந்திருக்கிறது. அந்தத் தோல்வியினால் பிரிட்டிஷ் மக்கள் சொல்ல முடியாத வெட்கமும் அவமானமும் அனுபவித்து வருகிறார்கள். பெட்ராண்ட் ரஸ்ஸல் போன்ற ஞானிகள் பிரிட்டனின் போக்கை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள்.

* * * *

ஐக்கிய நாடுகள் சபையில் பிரிட்டன் – பிரான்ஸ் இரு தேசங்களின் நடவடிக்கையைக் கண்டித்து உலக நாடுகள் அனைத்துமே தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றன. உடனே போரை நிறுத்தும்படி கூறியிருக்கின்றன! இந்தத் தீர்மானத்துக்கு எதிராக வோட்டுப் போட்டவர்கள் பிரிட்டன், பிரான்ஸ், இஸ்ரேல், ஆஸ்திரேலியா, நியூஸிலந்து ஆகிய ஐந்து நாடுகள்தான். ஆஸ்திரேலியாவும் நியூஸிலந்தும் பிரிட்டனுக்குக் கட்டுப்பட்ட நாடுகள். அவை பிரிட்டனுக்குச் சாதகமாக வோட்டுப் போட்ட

தில் வியப்பில்லை. மற்ற நாடுகள் அனைத்தும் பிரிட்டனைக் கண்டிக்க நேர்ந்தது என்றால் பிரிட்டனுக்கு இதைவிட வேறு அவமானம் என்ன வேண்டும்? இதுவரை உலக நாடுகளிடையே பெரு மதிப்பும் கௌரவமும் பெற்று விளங்கிய பிரிட்டன் எத்தகைய அவமானம் அடைந்து விட்டது! எத்தகைய மானக்கேட்டுக்கு உள்ளாகிவிட்டது!

அமெரிக்க ஜனாதிபதியும் அமெரிக்க வெளிநாட்டு மந்திரியும் ஈடனின் போக்கைப் பலமாகக் கண்டித்திருக்கிறார்கள். ஏன், ஐ. நா. சபையில் பிரிட்டனுக்கு எதிராகத் தீர்மானம் கொண்டுவந்ததே அமெரிக்காதான். இவற்றிலிருந்தெல்லாம் ஒரு விஷயம் மிகத் தெளிவாகத் தெரிகிறது. ஈடன் அமெரிக்கத் தலைவர்களைக் கலந்தாலோசியாமல் அவர்களை ஏமாற்றியே இந்தக் காரியம் செய்திருக்கிறார். இதுநாள்வரை பிரிட்டனின் நெருங்கிய நேச நாடாக விளங்கிய அமெரிக்காவை ஏமாற்றி இக்காரியம் செய்யத் துணிந்ததால் அமெரிக்காவின் நம்பிக்கையையும் பிரிட்டன் இழந்து விட்டது. இது பிரிட்டனுக்கு எத்தகைய நஷ்டம் என்று சொல்லத் தேவை இல்லை.

ராவணன் தம்பி விபீஷணன், அண்ணன் செய்த தவறைச் சுட்டிக் காட்டினான். தவறை நீக்கிக் கொள்ள வழியும் சொன்னான். அந்தத் தவறை நீக்கவில்லையேல் அவன் செய்யப் போகும் அக்கிரம யுத்தத்துக்குத் துணை புரிய முடியாது என்று விலகினான். அதே மாதிரி அமெரிக்காவும், பிரிட்டனின் தவறை எடுத்துக் காட்டியதோடல்லாமல் எகிப்து யுத்தத்தில் உதவ முடியாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டது. இந்த நியாய உணர்ச்சிக்கு அமெரிக்காவைப் பாராட்டுகிறோம். தர்ம சங்கடமான நிலைகளில் நியாயம் எது என்பது தெரியாமற் போகும். அந்த பலவீனத்துக்கு இடம் தராமல் நியாயத்தைத் தைரியமாக எடுத்துச் சொன்னதற்கு உலகம் அமெரிக்காவைப் பாராட்டும்.

* * *

ஈடன் எகிப்தின் மீது போர் தொடுத்ததால், இனி மத்தியகேந்திரத்திலுள்ள இஸ்லாமிய நாடுகள் அனைத்தின் பகைமையும் பிரிட்டனுக்கு ஊர்ஜிதமாகிவிட்டது. ருஷ்யாவுக்கும் மத்திய ஆசிய நாடுகளுக்குமிடையே சந்தேகத்துக்கிடமான நட்பு நிலவி வந்தது. இனி சந்தேகத்துக் கிடமில்லாத நெருங்கிய நட்பாகவே விளங்கும். அமெரிக்கா அரும்பாடுபட்டு, அரபு நாடுகளையும் மத்திய ஆசிய நாடுகளையும் ருஷ்யப் பிணைப்புக்குள் சிக்கிவிடாமல் பாதுகாக்க இத்தனை நாளும் முயன்று வந்திருக்கிறது. இந்தச் சமயத்தில் பிரிட்டன் செய்த காரியத்தினால் அரபு நாடுகள் அனைத்தும் ருஷ்யாவின் நிச்சயமான சிநேகிதர்களாகி விடும்!

இப்படி எல்லாத் திக்கிலும் தோல்வியே காணும் வகையில் ராஜ தந்திரமற்ற ஒரு காரியத்தைச் செய்து விட்ட ஈடனைப் பிரிட்டிஷ் மக்கள் நீண்ட நாள் பதவியில் விட்டு வைத்திருக்க மாட்டார்கள். அவர் வெகு விரைவில் பதவியை விட்டு விலகப் போவது நிச்சயம். தற்சமயம் கட்சிக் கட்டுப்பாட்டுக்காக கன்ஸர்வடிவ் கட்சிக்காரர்கள் ஈடனுக்கு வோட்டுக்கள் அளிக்கிறார்களே தவிர, ஈடன் கொள்கையை அங்கீகரித்தல்ல. அவருடைய மந்திரி சபையிலேயே பலத்த அபிப்பிராய பேதம் நிலவுகிறது. நட்டிங் என்ற வெளிநாட்டு மந்திரி தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்! ஏன் பிரிட்டிஷ் பொதுமக்களிடமிருந்து கன்ஸர்வடிவ் கட்சி அங்கத்தினர்களுக்கு அரசாங்கத்தின் போக்கை வன்மையாகக் கண்டித்துத் தந்திகள் வந்த வண்ணமிருக்கின்றன. மாஜி பிரிட்டிஷ் பிரதமர் ஆட்லி உள்படத் தொழிற் கட்சி அங்கத்தினர்கள் ஒருமுகமாக எதிர்க்கின்றனர். ஆகவே கன்ஸர்வடிவ் கட்சியில் விரைவில் பிளவு ஏற்படலாம். அதன் பயனாக கன்ஸர்வடிவ் கட்சி போய், தொழிற் கட்சி பதவிக்கு வருவது நிச்சயம்.

இந்த யுத்தத்தினால் கன்ஸர்வடிவ் கட்சி செல்வாக்கு இழந்து பதவி இழப்பதுதான் அடையக்கூடிய லாபமே தவிர, பிரிட்டனுக்குச் சூயஸ் கிடைக்கப் போவதில்லை. மேலும், யுத்தத்தினால் எகிப்துக்கு ஏற்பட்ட நஷ்டத்தையும் பிரிட்டனே ஈடு செய்ய வேண்டி நேரிடும்.

ஆனால், உண்மையில் பெரு நஷ்டமடையப் போவது யார் என்று பார்த்தால் யூதர்கள் தான்—இஸ்ரேல்தான்.

பிரிட்டனின் கைப்பாவையாக இஸ்ரேல் சிக்கிக் கொண்டது அதன் துரதிர்ஷ்டமே யாகும். இஸ்ரேலின் நான்கு புறமும் அரபு நாடுகள் இருக்கின்றன. இஸ்ரேல் ஈடனின் பேச்சைக் கேட்டு எகிப்தின் மீது படையெடுத்து நாற்புறமும் பகைவர்கள் சூழ வாழ வேண்டியதாகி விட்டது.

* * *

இருக்கிற குழப்பம் போதாதென்று மேலும் குழப்பப் பார்க்கிறது கானடா தேசம். அது ஒரு நேர்மையற்ற யோசனை சொல்லியிருக்கிறது. ஐ. நா. சபை சூயஸ் கால்வாயை வசப்படுத்திக் கொள்ள வேண்டுமாம். இது பிரிட்டனின் அக்கிரமக் கோரிக்கையை நிறைவேற்றி வைப்பதாகும். எகிப்து ஆதிக்கத்தில் சூயஸ் இருக்கக் கூடாது என்பது தானே பிரிட்டனின் கோரிக்கை. இந்தச் சமயத்தில் அதையே ஐ. நா. செய்து தருவது பெரிய அக்கிரமமான காரியமாகும். ஐ. நா. போர் வீரர்கள் எகிப்திடமே சூயஸை ஒப்படைக்க வேண்டும். அதுதான் நியாயம்.

ஐ. நா. வின் தீர்மானத்துக்குப் பிரிட்டன் செவிசாய்க்கவில்லை எனில் பாரதநாடு காமன்வெல்த் சபையிலிருந்து வெளியேற நேரிடும்.

காமன்வெல்த்தில் இந்தியா இருப்பது உலக நாடுகளில் அமைதியை நிலைநாட்டவே யல்லவா? அந்தச் சபையின் முக்கிய அங்கத்தினரான பிரிட்டன் சரித்திரம் கண்டும் கேட்டுமிராத அக்கிரமப் போரை நடத்தினால் காமன்வெல்த்தில் பாரதம் எப்படி அங்கம் வகிக்க முடியும்? காமன்வெல்த்திலிருந்து இந்தியா வெளியேறினால் கூடவே இலங்கை, பாகிஸ்தான் முதலிய நாடுகளும் வெளியேறிவிடும். இத்தனை நாடுகளின் நல்லுறவைத் துறந்துவிட்டு, இதர நாடுகளின் நட்பையும் இழந்துவிட்டுப் பிறகு பிரிட்டன் உலகில் எப்படிக் கண்ணியத்துடன் வாழ முடியும்?

# அபாய அறிவிப்பு!



நான் அபிஸீனியாவில் இதே கை வரிசையைக் காட்டிப் பார்த்தேன்; கடைசியில் படு தோல்வியே அடைந்தேன்.
நானும் போலந்தில் அதே வழியைப் பின் பற்றினேன்; கடைசியில் எனக்கும் படு தோல்வி தான்.
ஹிட்லரின் ஆவி

# சொல் ஒன்று, செயல் ஒன்று!

"தமிழ் இலங்கையின் ராஜாங்க பாஷையாக அங்கீகரிக்கப் படவில்லையென்றாலும், ராஜாங்க அலுவல்களில் அதை நியாயமான அளவுக்கு உபயோகித்துக் கொள்ள இடம் அளிக்கப்படும்" என்று பண்டாரநாயகா இலங்கைப் பார்லிமெண்டில் சமீபத்தில் கூறியுள்ளார். எனினும், அவரது சொல்லுக்கும் இலங்கை சர்க்காரின் செயலுக்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியவில்லை! ஏனெனில், சிறிது காலமாக இலங்கை சர்க்கார் தங்கள் தஸ்தாவேஜுகளை யெல்லாம் சிங்கள மயமாக்கி வருவதாகப் பார்லிமெண்டில் உள்ள தமிழ் அங்கத்தினர்கள் புகார் கூறியுள்ளனர். மந்திரிகள் எழுதும் கடிதத்தின் தலைப்புகளும், அங்கத்தினர்களுக்கு அனுப்பும் அழைப்புகளும் கூடச் சிங்கள பாஷையிலேயே அச்சடிக்கப்பட்டிருப்பதை அங்கத்தினர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். அதற்குப் பதிலாக, 'இதெல்லாம் அற்ப விஷயம்' என்று இலங்கைப் பிரதமர் சமாதானம் கூறியுள்ளார். இலங்கைப் பிரதமருக்கு அது அற்ப விஷயமாக இருக்கலாம். ஆனால், அது இருபது லட்சம் தமிழ் மக்களின் ஜீவாதார உரிமையைப் பாதிக்கிறது என்பதைப் பிரதமர் உணராதது ஆச்சரியம் அல்லவா?

ஸ்விட்ஜர்லாந்தின் மொத்த ஜனத் தொகையில் இருபத்திரண்டு சத விகிதம் பேர்தான் பிரெஞ்சு மொழி பேசுகிறவர்கள். அப்படியிருந்தும் அந்த மொழியை ஸ்விட்ஜர்லாந்து சர்க்கார் ராஜாங்க மொழியாக அங்கீகரித்திருக்கிறார்கள். அந்த நாட்டில் இத்தாலி மொழி பேசுவோர் நாலு சத விகிதம்தான் இருக்கிறார்கள். அதுவும் ராஜாங்க மொழியாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. பின்லாந்து தேசத்தின் மொத்த ஜனத்தொகையில் ஒன்பது சதவிகிதப் பேர் ஸ்வீடிஷ் பாஷை பேசுவோர் இருக்கிறார்கள். அப்படியிருந்தும் அந்தப் பாஷையைப் பின்லந்து சர்க்கார் ராஜாங்க பாஷையாக அனுமதித்திருக்கிறார்கள். இதுபோல் இன்னும் பல நாடுகளில் சிறுபான்மையோரின் மொழி ராஜாங்க மொழியாக அமுலில் இருந்து வருகிறது. தொழில் துறைகளில் முன்னேற்றம் அடைந்துள்ள மேற்படி நாகரிக சர்க்கார்களை ஏன் இலங்கை சர்க்காரும் பின்பற்றக் கூடாது? இலங்கையின் ஜனத்தொகையில் முப்பது சத விகிதமுள்ள தமிழர்களின் மொழியை ஏன் ராஜாங்க மொழியாக அங்கீகரிக்கக் கூடாது?

இலங்கையில் தமிழ் மொழியை அலட்சியம் செய்து நிறைவேற்றப்பட்டுள்ள தனிச் சிங்களச் சட்டம் நீக்கப் போவதில்லை என்று இலங்கையில் சென்ற வாரம் நடந்துள்ள கல்லூரி மாணவர் மகாநாட்டில் தமிழ்த் தலைவர்கள் விடுத்துள்ள எச்சரிக்கை பண்டாரநாயகா சர்க்கார் செவிகளில் விழும் என்று நம்புகிறோம்.

ராஜம் கிருஷ்ணன் எழுதும்



# பானுவின் காதலன்

புதிய தொடர்கதை

நவம்பர் 18 ஜவாஹர் ஜயந்தி மலரில்

கல்கி

ஆரம்பமாகிறது



"உங்களுக்கு வருமானம் எவ்வளவு வந்தாலும் செலவுக்குச் சரியாக இருக்கும்! அடுத்த மாதத்திலிருந்து அதிகப்படி ஐந்து ரூபாயை உண்டியிலே போட்டு விடணும்!"

"சரிதான்! முதலில் உண்டி வாங்குவதற்குச் சில்லறை இல்லே. உன்னிடம் இருந்தால் கடனாகக் கொடேன்!"




# ஐந்து ரூபாய்



பாட்டி:—இன்னும் சம்பளம் உயரணும்னு இந்த மாதம் அதிகப்படியாகக் கிடைத்த அஞ்சு ரூபாயையும் கோவில் உண்டியிலே போட்டு விட்டுப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டு வா!



"என்ன ஸார்! முன்னை விட ஐந்து கூடுதல் போலிருக்கே!"

"ஆமாம் ஸார்! மூன்று பெண்ணும் இரண்டு பையன்களும்!"

"அதில்லே: நான் சம்பளத்தைச் சொல்கிறேன் ஸார்!"



"சம்பளத்தை வாங்கி அஞ்சு ரூபாய் நோட்டைத்தொலைச்சுட்டு எங்கேயோ தேடறேனே! அது காத்திலே பறந்து கண்ணாமூச்சி விளையாடறது ஸார்!"



"என்ன ஸார்! அஞ்சு ரூபாய் சம்பளத்தை உயர்த்திச் சர்க்காரிலிருந்து உத்தரவு வந்திருக்காமே?"
"அதுனாலென்ன! இன்றைக்குக் காலையிலே என் சம்சாரத்துக்கு இரட்டைக் குழந்தை பிறந்திருக்குன்னு சேதி வந்திருக்கு!"

# உயர்ந்தது!



"எனக்கு இந்த மாதத்திலிருந்து இரண்டு ரூபாய் சம்பளம் சேர்த்துக் கொடுக்கல்லேன்னு நான் வேலையை விட்டு நின்னுக்கறேன், ஐயா! உங்களுக்குத்தான் சம்பளத்தை உயர்த்தி இருக்காங்களே!"



சம்பளச் சலுகை பெற்ற என். ஜி. ஓ. சிப்பந்திகள் முன்னை விட விசுவாசமாக ஊழியம் செய்வார்களென்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது.

# என்னுடைய கருத்து

**ராஜாஜி**

பக்திக்கும் சமயங்களுக்கும் அடிப்படை ஆதாரமான புண்ணிய கதைகளும் திருவிழாக்களும் எல்லாம் கதை, உருவகம், நீதி போதிக்கும் கற்பனைகள், அவ்வளவே என்று ஒரு சாரார் சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். பகுத்தறிவுக்கும் பக்திக்கும் நடக்கும் போட்டிச் சண்டையில் தோல்விக்குப் பயந்து அந்த மாதிரி பேச ஆரம்பித்திருக்கிறார்கள். இதை நான் ஒப்புக் கொள்ள இயலாது. இது தோல்வியை ஒப்புக் கொள்வதாகவே முடியும். பகுத்தறிவுக்கு விரோதமான வழக்கங்களைத் தாராளமாகத் தள்ளி விடலாம். ஆனால் ஹிந்து மதத்துக்கு அஸ்திவாரமும் உயிருமான பொருள்களைக் காற்றில் பறக்க விடலாகாது. நீதிக் கதைக்கும் சமய புராணங்களுக்கும் உள்ள வித்தியாசத்தை நான் எடுத்துக் காட்டவேண்டியதில்லை.

வெறும் நீதி வாக்கியங்களும், உருவகக் கதைகளும் பக்திக்காவது சமயத்துக்காவது அஸ்திவாரமும் ஆகாது; வாழும் வீடும் ஆகாது. புண்ணிய கதைகளும் புராணங்களும் நீதியைப் போதிக்கும் என்பது உண்மை. ஆனால் அவை அதற்காக மாத்திரம் தோன்றியவை யல்ல. ராமாயணமும் பாரதமும் பாரதமக்களுடைய உள்ளங்களைக் குயவன் மண்ணிலிருந்து பாண்டம் செய்வது போல் பண்பட்ட உயிர்களாக ஆக்கி யிருக்கின்றன. வெறும் நீதிக் கதைகள் அல்ல. சீதையும் ராமனும் லக்ஷ்மணனும் பரதனும் இந்த நாட்டு மக்கள். வெறும் கதா பாத்திரங்கள் அல்ல. என் மூதாதைகளைப் போல் இவர்களும் இந்த நாட்டின் மண்ணிலிருந்து உண்டாகி உயிர்கொண்டு வாழ்ந்தவர்களாவார்கள். இந்த நாட்டில் எந்த ஹிந்துப் பெண்மணி, சீதை வெறும் பஞ்ச தந்திரக் கதையில் வரும் ஒரு பெண்ணைப் போன்றவள் என்று ஒப்புக்கொண்டு திருப்தி யடைய முடியும்? ஏசுநாதரும் ஒரு உருவக வீரன் என்று முடித்து விட்டால் பிறகு கிறிஸ்தவர்களுக்குத் தங்கள் சமயத்தில் என்ன மிச்சமாகும்! பக்தியே ஒழிந்து போகும். இறந்து புதைக்கப்பட்டவர் எப்படி மறுபடியும் உயிர் கொண்டு எழுவார்? ஆக ஒரு உருவகம் என்று கிறிஸ்தவப் பெரியார் தங்கள் சீடர்களுக்குச் சொல்லுவார்களா? சொன்னால் பக்தி உருப்படுமா? கோயில்களும் சடங்குகளும் திருவிழாக்களும் வெறும் உருவகங்களாக முடிந்து விட்டால் பக்தி பாழ்பட்டுப் போகும்.

பொன்னுக்கும் பித்தளைக்கும் உள்ள பேதத்தை உணராமல் பேசுவதுபோலாகும் இந்தப் பகுத்தறிவு உருவகக் கொள்கை. மரத்தின் மேலேறி அடிமரத்தை வெட்டுவது போலாகும். உலகமே ஒரு உருவகம். அதை ஞானக் கண்ணால் உணர்ந்த சங்கரர் கோவிலுக்குச் சென்றார். தேவியைத் துதித்து நினைவிழந்து கிடந்தார். அவரை விட நாம் பெரிய ஞானிகளாக மாட்டோம். பிற மதத்தினர் நம்முடைய மத புராணங்களை உருவகக் கதைகளாகப் பாவித்து மதித்தும் பாராட்டியும் செய்யலாம். ஆனால் நாம் அவ்வாறு செய்யலாகாது. பறவைகள் கூடுகட்டிக் கூட்டில் வாழ்வது போல் நாம் நம்முடைய ராமாயணம், பாரதம், பாகவதம் ஆகிய மதங்களில் வாழ்கிறோம். அடிமரத்தை வெட்டலாகாது!

இந்தப் பிரச்னை ஒரு பௌதிக வாதமல்ல. உயிர் கொண்ட ஒரு உடலை வெட்டிச் சோதிப்பது போன்றது. அதற்குரிய ஜாக்கிரதையோடு பக்தர்கள் செய்ய வேண்டிய காரியமாகும்.

அக்டோபர் மாதச் சிறுகதைப் போட்டி

நூறு ரூபாய் பரிசு பெற்ற

**'வலம்புரிச் சங்கு'**

என்னும் கதை அடுத்த இதழில் வெளியாகிறது

பரிசு பெற்றவர்: **திரு நா. பார்த்தசாரதி, 22, தமிழ்ச் சங்கம் ரோடு, மதுரை**



# குயில் கூவுது சோலையில்...

**பு**கை ரதங்கள் ஏற்படாத அந்தக் காலத்தில் மக்கள் காசியிலிருந்து கன்யாகுமரி வரை ஆயிரம் இரண்டாயிரம் மைல்கள் பாத யாத்திரை செய்தே புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்து வந்தார்கள். அவ்வாறு காசி யாத்திரை போனவர்களில் சிலர் இடை வழியில் பரலோக யாத்திரையே செய்தவர்களும் உண்டு!

இப்போதெல்லாம் அப்படியில்லை. உலகத்தின் ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலைக்கு மின்னல் வேகத்தில் போய்ச் சேர்ந்து விடலாம். காலையில் இந்தியாவில் காப்பி சாப்பிட்டு விட்டுக் கிளம்பினால் மாலை டிபனுக்குக் கெய்ரோவுக்குப் போய்விடலாம்; மறுநாள் சாப்பாட்டுக்கு லண்டனையும் அதற்குமறுநாள் ஆகாரத்துக்கு நியூயார்க்கையும் அடைந்து விடலாம்! இதோ, நமது இந்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ வி. கே. கிருஷ்ணமேனனைப் பாருங்கள். முந்தா நாள் கேரளத்தில் ஒரு கலியாணத்தை நடத்தி வைத்து விட்டு நேற்று அமெரிக்காவில் இருக்கிறார்! உலகம் வேகமாகச் சுற்றிக் கொண்டிருக்கிறது. நமது கிருஷ்ணமேனன் அதை விட வேகமாகச் சுற்றிக் கொண்டிருக்கிறார்! இந்த இருபதாம் நூற்றாண்டில் எல்லாக் காரியங்களுமே வாயு வேகத்தில் நடைபெறவேண்டியிருக்கின்றன! யாருக்கும் நிற்பதற்கோ, நடப்பதற்கோ, ஓடுவதற்கோ கூட அவகாசம் கிடையாது!

சென்ற நூற்றாண்டில் நமது தேசத்தைப் பிரிட்டிஷ்காரர்கள் ஆண்ட காலத்தில் நவீன நாகரிக வசதிகளும் போக்குவரத்து வசதிகளும் அவ்வளவாக ஏற்படவில்லை. ஏற்பட்டாலும் அவை பொது மக்களுக்கு அவ்வளவாகப் பயன்படவில்லை.

பிரிட்டிஷ்காரர்கள், தங்களுடைய நிர்வாக சௌகரியத்துக்காகவும், வாழ்க்கை வசதிக்காகவும் மட்டும் சிற்சில ஏற்பாடுகளைச்செய்து கொண்டார்கள். மலை வாசஸ்தலங்களுக்குத் தண்டவாளங்களும் தந்திக் கம்பங்களும் போட்டுக் கொண்டார்கள். போனால் போகிறதென்று பொது மக்களுக்காகவும் சில இடங்களில் போக்குவரத்து வசதிகளைச் செய்து கொடுத்தார்கள்!

1942-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் நாடெங்கிலும் 'குவிட் இந்தியா' இயக்கம் நடைபெற்றதல்லவா? அப்போது காங்கிரஸ்காரர்கள், தண்டவாளங்களைப் பெயர்த்தும் தந்திக் கம்பங்களை வெட்டியும் "வெள்ளைக்காரா வெளியேறு!" என்று கிளர்ச்சி நடத்தினார்கள் அல்லவா? வெள்ளைக்காரர்கள் மீதுகோபித்துக் கொண்டு அவர்கள் நமக்குச் செய்து கொடுத்துள்ள அருமையான போக்குவரத்து வசதிகளைப் பாழ்படுத்தியது எத்தகைய அறிவீனம் என்பதைப் பின்னால் தான் உணர்ந்து கொண்டார்கள்.

இந்தியா தேசம் சுதந்திரம் பெற்ற பின்னர் காங்கிரஸ் கட்சி ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது. நமது ஒப்பற்ற காங்கிரஸ் தலைவர்கள் பலர் பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் கூடித் தேசத்தின் முன்னேற்றத்துக்கான பல திட்டங்களை வகுத்தார்கள். அந்தத் திட்டங்களில் பல புதிய பிரதேசங்களில் தண்டவாளம் போடுவதும், தந்திக் கம்பம் நடுவதும் ஒன்றாகும். எந்தக் காங்கிரஸ் கட்சியினர் 1942ல் தந்திக் கம்பத்தையும் தண்டவாளத்தையும் சேதப் படுத்தினார்களோ, அதே காங்கிரஸ் கட்சியினர் பதவிக்கு வந்து தண்டவாளம் போடுவதும் தந்திக் கம்பம் நடுவதும் விந்தையே அல்லவா!

**வ**ட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் நமது நேரு சர்க்கார் பல இடங்களில் ரயில் பாதைகள் போட்டு வருவதை நேயர்கள் அறிவார்கள். இங்கே சேலத்திலிருந்து பங்களூருக்கும், சின்ன சேலத்திலிருந்து செங்கல்பட்டுக்கும் இன்னும் சில இடங்களுக்கும் ரயில் போடுவதற்கான வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன.

ராஜ்யச் சீரமைப்பு ஏற்பாட்டின் கீழ் புதிதாக ஸ்தாபிதமாயுள்ள கேரள ராஜ்யத்தில் எர்ணாகுளத்திலிருந்து கொல்லம் வரை சுமார் நூறு மைல் நீளத்துக்கு ரயில் சாலை போட்டு வருகின்றனர். மேற்படி சாலையின் வேலையில் மூன்றில் ஒரு பகுதி முற்றிலும் முடிந்து இப்போது ரயிலும் ஓடிக்கொண்டிருக்கிறது. எர்ணாகுளத்திலிருந்து கோட்டயம் வரை 'மீட்டர் கேஜ்' ரயில் பாதை வேலை முடிந்து கடந்த அக்டோபர் மாதம் 17ம் தேதியன்று ரயிலோட்டும் தொடக்க விழா கோலாகலமான ஏற்பாடுகளுடன் கொண்டாடப்பட்டது. புதிய சாலையில் புதிய ரயிலை ஓட்டும் திருவிழாவுக்கு ரயில் மந்திரி லால் பகதூர் சாஸ்திரி அவர்களே நேரில் விஜயம் செய்திருந்தார். இந்தப் புதிய ரயில் சாலையைப் போடுவதற்குத் திட்டங்கள் வகுத்து, 'பிளான்'கள் போட்டு அரும்

சாவி



# ரயில் போகுது சாலையில்!

பாடுபட்ட எஞ்சினியர்கள் ஸ்ரீ ஜி.பி. வாரியார், ஸ்ரீ எம்.கணபதி, ஸ்ரீ பி.கே.குப்புசாமி, தென்பிராந்திய ரயில்வே ஜெனரல் மானேஜர் ஸ்ரீ டி. ஏ. ஜோஸப் முதலிய ரயில்வே அதிகாரிகளும் இன்னும் பல உள்ளூர் தலைவர்களும் பிரமுகர்களும் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள்.

புதிய ரயில் விடு விழா மாலையில் எர்ணாகுளத்திலும் இரவு கோட்டயத்திலும் மேளதாள பாண்டு வாத்திய முழக்கங்களுடன் மிகப் பெரிய அளவில் ஆடம்பரமாக நடைபெற்றது. எர்ணாகுளம் ஸ்டேஷனிலும் கோட்டயம் ஸ்டேஷனிலும் கேரள பாணியில் போடப்பட்டிருந்த அலங்காரப் பந்தல்களின் அழகைச் சொல்லி முடியாது. தென்னை மரத்தின் ஒவ்வொரு பாகத்தையும் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளும் திறமையும் ஆற்றலும் பெற்ற மலையாளிகள் தங்கள் கலைத் திறமை அத்தனையும் காட்டி விழாப் பந்தல்களையும் பிரவேச வாயில்களையும் கவர்ச்சிகரமாக நிர்மாணம் செய்திருந்தார்கள்.

ரயில் மந்திரி லால்பகதூர் சாஸ்திரி ரத்னச் சுருக்கமான ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். கொல்லத்துக்கும் எர்ணாகுளத்துக்கும் ரயில் போடுவதில் ஏற்பட்ட சிரமங்களையும், எஃகு கிடைக்காததால் ஏற்பட்ட கால தாமதத்தையும் குறிப்பிட்டார். எஞ்சினியர் வாரியாரின் திறமையைப் பெரிதும் பாராட்டினார். கேரளத்தில் ரயில் போடுவதிலுள்ள பிரத்தியேக இடையூறுகளை விவரமாக எடுத்துரைத்தார். இந்திய ரயில்வேக்களின் சாதனைகளை இதர நாடுகளுடன் ஒப்பிட்டு நம்முடைய சாதனைகளில் திருப்தி தெரிவித்தார். இன்னும் கேரளத்தில் போடப் போகும் புதிய ரயில் சாலைகளைப் பற்றிக் குறிப்பிட்டுப் பலத்த கரகோஷத்தைப் பெற்றார்.

பின்னர் ஒரு 'ஸ்விட்சை' அழுத்திக் கோட்டயம் ரயில் போக்குவரத்தைச் சுபமாக ஆரம்பித்து வைத்தார். உடனே கோட்டயம் செல்லும் புகை ரதம் 'கூ' வென்று கத்திக்கொண்டு பிளாட்பாரத்துக்கு வந்துநின்றது. மேளமும் பாண்டு வாத்தியமும் 'ஜாம் ஜாம்' என்று முழங்கின. ஸ்ரீலால் பகதூர் சாஸ்திரியை மாலைமரியாதைகளுடன் தேநீர்விருந்துக்கு அழைத்துப்போனார்கள். மேற்படி தேநீர் விருந்தில் அடியேன் உள்பட, ஆயிரம் பேர்கள் கலந்து கொண்டு வைபவத்தைச் சிறப்பித்தோம்!

தேநீர் விருந்து முடிந்ததும் பிளாட்பாரத்தில் தயாராக நின்ற கோட்டயம் செல்லும் பிரத்தியேக ரயிலில் ஏறி அமர்ந்து கொண்டோம். ரயில் மந்திரி ஸ்ரீ சாஸ்திரி கடைசிப் பெட்டியில் ஏறிக் கொண்டார். விசேஷ ரயிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. இதில் வேடிக்கை என்னவென்றால் அந்த முதல் ரயிலில் எல்லாரும் டிக்கட் இல்லாமலேயே பிரயாணம் செய்து தேசவிரோதமான காரியம் செய்ததுதான்! சில தினங்களுக்கு முன்னால் நமது ஜனாதிபதி பாபு ராஜேந்திரப் பிரசாத் ''டிக்கட் இல்லாமல் யாரும் ரயிலில் பிரயாணம் செய்யக் கூடாது'' என்று கூறிய விஷயம் அப்போது என் ஞாபகத்துக்கு வந்தது. ரயிலை விட்டுக் கீழே இறங்கிவிடலாமா என்று யோசித்தேன். அருகிலிருந்த நண்பரிடம் விஷயத்தைக் கூறினேன். அவர் சிரித்துக் கொண்டே, ''அதனால் பரவாயில்லை! ரயில் மந்திரியே டிக்கட் இல்லாமல் தான் பிரயாணம் செய்கிறார்! நமக்கென்ன வந்தது!'' என்றார். இதற்குள் மணி நாலரை ஆகி விடவே குறிப்பிட்ட நேரத்தில் ரயில் புறப்பட்டது. ஆனால் குறிப்பிட்ட நேரத்தில் கோட்டயத்தை அடையவில்லை. அதற்கு ரயிலோ, கார்டோ, என்ஜின் டிரைவரோ பொறுப்பாளிகள் அல்ல! ரயில் மந்திரி ஸ்ரீலால் பகதூர் சாஸ்திரியேதான் பொறுப்பாளி! ஆங்காங்கே ஒவ்வொரு ஸ்டேஷனிலும் அவருக்கு வரவேற்புகளும் உபசாரங்களும் நடைபெற்றதால் தானே தாமதம் ஏற்பட்டது?

எர்ணாகுளத்துக்கும் கோட்டயத்துக்கும் இடையே ஏழு ஸ்டேஷன்கள் இருக்கின்றன. சுமார் முப்பத்தேழு மைல் தூரமுள்ள இந்தச்



ஸ்ரீலஸ்ரீ குன்றக்குடி அடிகளார் முன்னிலையில், ஏ. கே. எஸ். அரிசி மில்லின் உரிமையாளரான ஸ்ரீ ஏ. கே. சின்னையா அரசுத்தியார் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா வைதீக முறையில் குடவாசலில் 26-9-56 அன்று கொண்டாடப்பட்டது. கிருபானந்தவாரியார் அவர்களின் சொற்பொழிவும், ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் அவர்களின் இன்னிசைக் கச்சேரியும், ஸ்ரீ ராகவன் தவிலுடன் திருவீழிமிழலை சுப்பிரமணியம் சகோதரர்களின் நாதஸ்வரக் கச்சேரியும் சிறப்பாக நடைபெற்றன. எங்கள் அழைப்புக் கிணங்கி விஜயம் செய்திருந்தவர்களுக்கும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பி வைத்திருந்தவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஏ. கே. வீரையா அரசுத்தியார்.

சாலையில் வழி நெடுகத் தோரணங்களும், பூச்சரங்களும் கட்டி அலங்கரித்திருந்தார்கள். வைக்கம்ரோடு ஸ்டேஷனில் ரயில் நின்றதும் எழுபது பிராயம் முதிர்ந்த கிழவர் ஒருவர் ரயிலின் சமீபத்தில் நெருங்கி வந்து ரயிலைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து வியந்தார். மத்தாய் என்னும் அந்தக் கிழவர் தம்முடைய ஆயுளில் ரயிலே பார்த்தது கிடையாதாம். அந்தக் கிழவர் ரயிலை அதிசயத்தோடு பார்த்த காட்சியை ரயிலில் இருந்தவர்கள் எல்லாரும் ஆச்சரியத்தோடு பார்த்தார்கள். இதில் என்ன ஆச்சரியம்?

பல ஆண்டுகளுக்கு முன்னால் முதல் முதலாக இந்தியாவில் ரயில் ஓடத் தொடங்கியபோது கிராம மக்கள் அந்தக் காட்சியை வியப்போடு வந்து பார்த்ததுடன் ஏதோ தெய்வ அருள் பெற்று விட்டதைப் போல் பக்தியோடு தேங்காய் உடைத்துக் கற்பூரம் கொளுத்திக் கன்னத்திலும் போட்டுக் கொண்டார்களாம்!

மத்தாய் என்னும் கிழவரைப் பார்த்த போது எனக்கு அந்தப் பழைய கிராம மக்களின் ஞாபகம்தான் வந்தது.

ரயில் சாலையின் இரு பக்கங்களிலும் கண்ணுக் கெட்டிய தூரம் வரை அடர்ந்து வளர்ந்த பசுமையான தென்னை மரங்களும் கமுகு மரங்களும் பலாமரங்களும் சூழ்ந்த சோலைகள் காட்சி அளிக்கின்றன. போகும் வழி யெல்லாம் நீரோடைகளும் காட்டாறுகளும் சலசலவென்று ஓடுகின்றன! தெளிவான நீர் நிலைகளில் சோலைகள் அழகாகப் பிரதிபலிக்கின்றன! ரம்யமான குளிர்ந்த காற்று சிலுசிலுவென்று வீசுகிறது. 'குக்கூ' என்று குயில்கள் கூவுகின்றன! பட்சி ஜாலங்கள் 'கலகல' வென்று சிறகடித்துப் பறக்கின்றன! மலையாள ராஜ்யத்தின் மனோகரமான இயற்கை வனப்போடு மாலைச் சூரியனின் தங்கநிறப் பூச்சும் சேர்ந்து சொப்பன உலகமாகவே மாறிவிடுகிறது!

வேகமாகச் செல்லும் ரயிலில் இந்தக் காட்சிகள் யாவும் இந்திர ஜாலம்போல் தோன்றித் தோன்றி மறைகின்றன!

தண்டவாளக் கரைகளில் மக்கள் ஆர்வத்துடன் இடித்து மோதிக் கொண்டு நிற்கும் காட்சியைப் பார்த்து ரசித்துக் கொண்டே போகும் போது திடீரென்று ஓரிடத்தில் ரயில் 'சடக்' கென்று நின்று விட்டது. உடனே நான் திடுக்கிட்டுப் போனேன். ஏனெனில் அந்தச்சமயம் தமிழகத்தில் அநேக இடங்களில் எல்லைக் கிளர்ச்சிக்காரர்கள் சங்கிலியைப் பிடித்து இழுத்து ரயிலை நிறுத்திக் கொண்டிருந்தார்கள் அல்லவா? அம்மாதிரி எல்லைக் கிளர்ச்சிக்காரர்கள் அங்கே கேரளத்திலும் தோன்றி ரயிலை இழுத்து நிறுத்தி விட்டார்களோ என்றே பயந்து போனேன். நல்லவேளையாக அம் மாதிரி எதுவும் நேரவில்லை என்று அறிந்ததும் பெருமூச்சு விட்டேன். கடைசியில் ஒரு விதமாக ரயில் கோட்டயத்தை அடைந்த போது இரவு மணி ஒன்பதாகி விட்டது. கோட்டயம் ஸ்டேஷனுக்குள் ரயில் பிரவேசித்த போது அங்கே நான் கண்ட காட்சியை என்றென்றும் மறக்க முடியாது. எல்லாரும் அங்கே தீபாவளி கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். ஆமாம்; கோட்டயத்தில் சென்ற அக்டோபர் மாதம் 17ந்தேதி யன்றே தீபாவளி கொண்டாடி விட்டார்கள்! ஸ்டேஷனிலும் ஸ்டேஷனுக்கு வெளியிலும் சரம் சரமான அலங்கார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வெளியில் பட்டாசு வெடிகளும், ஆகாச வாணங்களும் அமர்க்களப்பட்டன. வெடிகளிலிருந்து கண்ணைப் பறிக்கும் வர்ணஜால பலூன் குண்டுகளும் நட்சத்திரங்களும் 'பல பல' வென்று உதிர்ந்து சிதறின! ஸ்டேஷனைச் சுற்றிலும் தேர்க் கூட்டம் திருவிழாக் கூட்டம் போல் ஜனங்கள் கூடி ரயிலையும் ரயில் மந்திரியையும் வரவேற்றார்கள்.

இத்தனை வரவேற்பு வைபவங்களையும், ஜனங்களுக்குள்ள ஆர்வத்தையும் சிரத்தையையும் பார்த்தபோது முதலில் சற்று வியப்பாகவே இருந்தது. 'ஒரு ரயில் ஓடுவதற்காகவா இத்தனை ஆர்ப்பாட்டம்?' என்று எண்ணினேன். ஆனால், அந்தப்பிராந்தியத்தில் வாழும் கேரளத்து மக்கள் இத்தனை ஆண்டு காலமாக ரயில் வசதி இல்லாமல் பட்ட கஷ்டங்களை அறிந்த போது அவர்கள் அடைந்த உற்சாகம் மிகமிகக் குறைவு என்றே தோன்றியது.

எர்ணாகுளத்துக்கும் — கொல்லத்துக்கும் போக்குவரத்து வசதி என்பதே வெகு காலம் வரை இல்லாமலிருந்தது. கொல்லம் பெரிய வியாபார ஸ்தலம். கேரளத்தின் உற்பத்திப்

## இலக்கியச் செல்வம் - 6

# மீன் கொத்திப் பறவை



**பேராசிரியர் அ. சீநிவாசராகவன்**

ஏரியின் நீலப் பரப்பின் மேலே, அலைகளைத் தொட்டும் தொடாமலும், கருநீலத் துணுக்கு ஒன்று பாய்கிறது. இந்த வையம் படைத்த வில்லி எய்த பாணத்தைப் போல. அது என்ன, அலையிலிருந்து தெறித்து எழுந்த நீர்த்திரளா, இரவு - வானத்திலிருந்து தெறித்து விழுந்து உயிர் பெற்ற ஒளிக் கங்கா? இல்லை. அதுதான், அந்த நீல அற்புதந்தான் மீன் கொத்திப் பறவை.

ஏரிக் கரையில், தண்ணீரின் மேல் சாய்ந்து தமது பசுங் கூந்தலை நீரிலே நனைத்து நனைத்து நிமிர்ந்து, கண்ணீர் வடிக்கின்றன மரங்கள்; காற்றிலே உடலை வளைத்துத் திருகிப் பெருமூச் செறிகின்றன. இதோ, மீன்கொத்தி துள்ளி வருகிறது; மரங்களின் பச்சை அரவணைப்புக்குள் மறைந்து விடுகிறது. பரந்த நீர்ப் பரப்பும், அரற்றுகின்ற மரங்களும் அமைத்த இந்த ஏகாந்தமே மீன்கொத்தியின் உலகம்.

இங்கே வருகிறான் கவிஞன். அவனும் நம்மைப் போலவே வாழ்க்கையில் அடிபட்டு வருந்தியவன். ஆனால் அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. பகலும் இரவும் போல, வெய்யிலும் மழையும் போல, இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன. இரண்டுமே-இன்பம் மாத்திரமில்லை, துன்பமுங் கூடத்தான்-மனிதனுடைய உயிரை வளர்க்கின்றன என்பது கவிஞனுக்குத் தெரியும். ஆகவே, துன்பம் வருகிறதே என்று எண்ணி, அவன் கவலைப்பட வில்லை. அவன் கவலை வேறு. வாழ்க்கை என்று நாம் பேசுகிறோமே, அதில் பெரும் பகுதி, மிக மிக அற்பமான விஷயங்களில் கழிந்து விடுகிறது. ஒன்றன் பின் ஒன்றாக, கடலலையைப் போல, ஓயாமல் ஒழியாமல், சின்னஞ்சிறு நிர்ப்பந்தங்கள் வந்து கொண்டே இருக்கின்றன. இந்த உலகத்தை, அதன் மத்தியிலே நிற்கும் நம்மை, சிறிது சாவகாசமாக நின்று பார்ப்பதற்கு நேரமில்லை. இதுதான் கவிஞனுக்குக் கவலை. இந்த உலகந்தான் எவ்வளவு அழகுடையது என்று எண்ணுகிறான் அவன். ஆனால் நிதானமாக அதை அனுபவிக்க விடாமல், வாழ்க்கையின் சஞ்சலமும் பரபரப்பும் குறுக்கிடுகின்றன. நேரமில்லையே, அழகைப் பார்த்து, அதில் ஆழ்வதற்கு நேரமில்லையே! இதைக் கவிஞனே பேசுகிறான், கேட்போம்:

**என்ன வாழ்க்கையடா இது!**
**ஒன்றையும் நின்று பார்க்க நேரமே இல்லாத,**
**கவலை வாழ்க்கையும் வாழ்க்கையா?**
**கிளைகளின் விதானத்தடியிலே நின்று,**
**அதோ, பசுக்களைப் போலப் பொழு**
**தெலாம் நின்று,**
**கண்விழித்து, இமைகொட்டாமல் நோக்க**
**நேரம் வேண்டாமா? இல்லையே!**

காட்டு வழியாகப் போகிறோம்.
அணில்கள், பழங்களைக் கோதி,
கொட்டைகளைப்
புல்லிலே ஒளிக்கின்றன.
எங்கே என்று காணவேண்டாமா ?
நேரம் இல்லையே !
பட்டப் பகலில், ஓடையின் அலைமேல்,
ஒளி புரளுகிறது, நட்சத்திர வரிசையாய்.
இரவு-வானம் பகலிலே எதிர்ப்படும்
இந்த விந்தையை
நின்று பார்க்க நேரம் வேண்டாமா ?
அழகின் கடைக்கண் பார்வையைக்
கண்டு திரும்பி,
அவள் பாதத்தை உற்று நோக்கி, அது
நடனமாடும் விதத்தை
உணர வேண்டாமா ?
அவள் விழியிலே அரும்பிய முறுவல்
இதழ் வரையிலே விரிந்து அங்கே
மலரும் போதினை,
காத்திருந்து காண வேண்டாமா ?
இதற்கெல்லாம் நேரமே இல்லை என்றால்,
இந்த ஏழை வாழ்க்கையும் வாழ்க்கையா ?
என்ன கவலை வாழ்க்கையடா இது !

இதிலிருந்து சற்று விடுதலை பெற்று ஏரிக் கரைக்கு வந்து சேர்ந்தான் கவிஞன். அவன் கண்ணையும், மனத்தையும் ஒன்றாகப் பறித்துக் கொண்டு, நீலத் தீப் பிழம்பாகப் பாய்ந்தது மீன் கொத்தி. எவ்வளவு அழகிய பறவை, எத்தனை வர்ணங்கள், ஊதாவும், பொன் மஞ்சளும், சிவப்பும், நீலமும், பச்சையும்,—அது பச்சையா கறுப்பா ?—யாரால் இந்த வர்ணக் கலவையைப் பகுத்து, ஒவ்வொரு வர்ணத்துக்கும் பேரிட முடியும் ? எப்படி இந்தப் பறவைக்கு இத்தனை நிறங்கள் கிடைத்தன ? ஓ, தெரிகிறது. இந்தப் பறவை வானவில்லின் வயிற்றிலே பிறந்தது. தாயைப் போலச் சேய். இந்த மீன் கொத்தியைப் பெற்று, அதற்குத் தன் வர்ணங்களை எல்லாம் தந்து விட்டு, அதன் பிறப்புரிமையாகத் தந்து விட்டு, வானவில் என்ற அந்த வர்ணக் கொடி மறைந்து விட்டாள். இப்போது இந்தப் பறவை, வர்ண ஜாலமாகக் கண் முன்னே துள்ளும் காரணம் இதுதான்.

ஆனால், எப்போது பார்த்தாலும், ஏன் ஏரியின் மேலும், ஓடை அருகிலும் சுனைக் கரையிலும் இந்தப் பறவை அலைகிறது? கண்ணீர் வடிக்கும் மரங்களையே வீடாகக் கொண்டு, அவற்றோடு மட்டும் உறவாடுகிறது? ஓ, அதுவும் தெரிகிறது. வானவில் இந்தப் பறவையின் தாய். வான வில்லைப் பெற்றவள் யார்? மழை மேகத்திலிருந்து உதிர்ந்த கண்ணீர் அல்லவா, ஒளி என்ற கணவனைக் கைப் பிடித்து, வானவில் என்ற வண்ண மகளை ஈன்றவள்? பறவையின் தாய் வான வில்; பாட்டி, வான மழைக் கண்ணீர். தண்ணீரோடு இந்தப் பறவைக்குள்ள இரத்தத் தொடர்பு வீண் போகுமா? ஆகவேதான், நீர் நிலைகளோடு உறவு கொண்டு வாழ்கிறது. வானம் வடித்த கண்ணீரல்லவா பறவையின் பாட்டி! ஆகவே, அழுது அரற்றிக் கண்ணீர் வடிக்கும் ஏரிக்கரை மரங்களைத் தன் உறன்முறையினராக, இந்த மீன் கொத்திப் பறவை ஏற்றுக் கொண்டு விட்டது.

இப்படியாக ஓடுகிறது கவிஞனுடைய கற்பனை. ஆமாம், அவ்வளவும் கற்பனை தான். ஆனால் இந்தக் கற்பனையின் மூலமாகத்தானே, மீன்கொத்தியின் அழகும், அது ஏரிக்கரைத் தனிமையில் வாழ்கின்ற பண்பும், மனத்திலே எழுப்பிய சலனங்களைக் கவிஞன் காட்ட முடியும்? மீன்கொத்தியைப் பார்த்துக் கவிஞன் பேசுகிறான் :

வான வில்லின் வயிற்றில் பிறந்தனை ;
வண்ண வல்லி அவள் தன் எழில் எலாம்
ஈன்றபோது உனக்களித்தனள் ; அவளை முன்
ஈன்றவள் வான் மழைக் கண்புனல் ஆதலின்



"'வாழ்க்கையில் உயரும் வழி'ன்னு ஒரு புஸ்தகம் எழுதி இருக்கிறேன், நீங்கள் படித்திருக்கிறீர்களோ?"
"என்னாலே இனிமேல் உயரமுடியாது!"







# 57 வருஷங்களாக பிரக்யாதி பெற்றது.

லோத்ரா பெண்களுக்கு இன்றியமையாதது. ஆரோகயதிற்கும் ஆனந்தத்திற்கும் லோத்ராவை விட சிறந்த டானிக் கிடையாது. எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

கேசரி குடிராம் பிரைவேட் லிமிடெட்.
சாயப்பேட்டை, மதராஸ் - 14.






லோத்ரா
பெண்களுக்கே

தமிழ்நாட்டுக்கு ஏஜண்டுகள்: மெஸர்ஸ் சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், மேலக் கோபுர வீதி, மதுரை



# அறிவிப்பு

கவிராஜ் ஓம் பிரகாஷ் பி.ஏ., பிஷகாசார்யா தன் வந்தரி கீழேயுள்ள வியாதி சிகிச்சை செய்வதில் விசேஷ அநுபவம் பெற்றவர். தமது சுற்றுப் பிரயாணத்தில் கீழ்க்கண்ட ஊர்களுக்கு விஜயம் செய்கிறார் அவரிடம் அப்பொழுது ஆலோசனைகள் பெறலாம்.

**சென்னை:** 16-11-56 உட்லண்ட்ஸ் ஓட்டல் மயிலாப்பூர். காலை 8 முதல் 12 மணி வரை, மாலை 3 முதல் 5 மணி வரை

**கடலூர் என். டி.:** 17-11-56 ஓட்டல் பிருந்தாபன், காலை 8 முதல் 11 மணி வரை

**திருச்சி:** 18-11-56 அசோக் பவன், ஜங்ஷன் ரோடு, காலை 8 முதல் 12 மணி வரை, பிற்பகல் 1 முதல் 3 மணி வரை

**மதுரை:** 19-11-56 உடுப்பி போர்டிங் லாட்ஜ், காலை 8 முதல் 12 மணி வரை

**திருநெல்வேலி:** 20-11-56 நெல்லை லாட்ஜ் காலை 7 முதல் 10 மணி வரை

**திருவனந்தபுரம்:** 21-11-56 ஹோட்டல் அரிஸ்டோ, காலை 8 முதல் 12 மணி வரை

**கோட்டயம்:** 22-11-56 பெல்டோடெல், பகல் 12 முதல்;மாலை 4 மணி வரை

**எர்ணகுளம்:** 23-11-56 பாரத் கபே, மார்க்கெட் ரோடு, காலை 7 முதல் 11 வரை

**கள்ளிக்கோட்டை:** 24-11-56 சாந்தாபவன், கோழிக்கோடு-1, காலை 7 முதல் 11 வரை

**மங்களூர்:** 25-11-56 ஜெயா கபே, பஸ் ஸ்டான்டிற்கு எதிரில், காலை 8 முதல் 12 மணி வரை; பகல் 1 முதல் 3 மணி வரை

**கோயமுத்தூர்:** 26-11-56 உட்லன்ட்ஸ் ஓட்டல், காலேஜ் ரோடு, காலை 10 முதல் 1 மணி வரை; மாலை 2 முதல் 4 மணி வரை

**சேலம்:** 27-11-56 சாந்திநிகேதன், வெங்கட்ராவ் ரோடு, காலை 8 முதல் 11 மணி வரை

**பெங்களூர்:** 28-11-56 மாடர்ன் இந்து ஓட்டல், காலை 8 முதல் 12 மணி வரை; 1 முதல் 3 மணி வரை

**ஹைதராபாத்:** 30-11-56 தாஜ்மஹால் ஓட்டல், கிங் கோதி ரோடு, காலை 8 மணி முதல் 12 மணி வரை, 1 முதல் 3 மணி வரை

○●○

**கீழ்க் காணும் நோய்களினால் அவதிப்படும் நோயாளிகள் அவரது சிறந்த ஆலோசனையும், திறமையான சிகிச்சையும் பெறலாம்**

1. போலியோ 2. பாரிச நோய்: முகம், கழுத்து இடுப்பு அவயவங்கள், முழு அல்லது பாதி உடம்பில் 3. அதிவேக ரத்தக் கொதிப்பு. 4. செவிடு. 5. ஊமை, அல்லது திக்குவாய். 6. குருடு, அரைக் கண் பார்வை. 7. சித்தப்பிரமை.

# ARYAVARTA POLIO ASHRAM

**114E, KAMLA NAGAR, DELHI-6**
**Telephone: 27858**

"போலியோ மயிலைடிஸ் & ஆயுர்வேதா" என்ற நமது பல சித்திரங்களுடன் கூடிய வைத்திய நூல் ஆங்கிலத்தில் விலை ரூ. 7-8-0 (தபால் செலவு அணா 14)

குறிப்பு: ஆலோசனைகள் ஆங்கிலத்திலும், ஹிந்தியிலும்








**ஆன்ற தனிமையில் ஆழ்ந்திடும் பொய்கையும்**
**அருகில் நின்று அழுது அரற்றும் மரங்களும்**

**ஊன்றி அவைதமோடு உறவு கொள்வது உன்**
**உதிரந் தன்னுடன் உதித்த பண்பாச்சது.**

*[வல்லி—கொடி, கொடி போன்றவள்.]*

இவ்வளவு அழகு வாய்ந்த இந்தப் பறவை, ஏரிக்கரைக் காட்டில் ஒதுங்கி வாழ்வதால், அதன் பெருமையைப் பலர் உணர முடியாமல் போய்விடுகிறது. அரண்மனைப் பூங்காவில் மயில்கள், தமது தோகையை விரித்து ஆடித் தனியரசு புரிகின்றன. இந்த மீன்கொத்திக்கு அங்கே இடமில்லையா? நந்தவனத்தில் கண்ணாடியைப் போலப் பளபளக்கின்றது புல் வெளி. அதன் மேல், மீன்கொத்தி அமர்ந்தால், அந்தப் பசுமையின் பகைப் புலத்தில், பறவையின் வண்ணச் சிறையின் அழகு எவ்வளவு எடுப்பாக இருக்கும்? மீன் கொத்தியின் எழில் எவ்வகையிலே குறைந்தது? அரசரும் கண்டு வியக்கும் வண்ணம், தன் சிறையை விரித்து அது ஆடலாமே? அரசர் வாழும் மாளிகை ஜன்னல் எதிரே, அவர்கள் காணும்படிக்கு, கிளைகளில் அது கொலு வீற்றிருக்கலாமே!

**என்னிலும் சுடர் வண்ணம் படைத்த நீ**
**ஏதற்கோ தனிக் காட்டில் ஒளிப்பது?**

**மின்னுகின்ற தோகை மயிலுடன்**
**மேவி அரண்மனைக் காவில் உலாவலாம்;**

**நந்தவனக் கண்ணாடியாய் நீண்ட புல்**
**நவிளமார்பில் உன் நீலம் பதிக்கலாம்:**

**பின்னும் கிளையில் ஏறியே உன் சிறைப்**
**பேற்றை அரசரும் போற்ற விரிக்கலாம்.**

*[பேற்றை—செல்வத்தை]*

ஏன் மீன்கொத்திப் பறவை இதையெல்லாம் செய்யவில்லை?

கவிஞன் நினைக்கிறான்: 'மீன்கொத்தி தன்னுடைய பெருமையைப் பாராட்ட விரும்பவில்லை; சந்தைக் கடையிலே நின்று தன் அழகைப் பகட்டாக மற்றவர்க்குக் காட்டிக் கொள்ளவும் ஆசைப்படவில்லை; ஆசைகளை எல்லாம் வென்ற ஞானியைப் போல, உலகத்திலிருந்து ஒதுங்கி, தனித்து வாழ்கிறது.

'இதுதான் வாழ்வு, இப்படி அமைதியிலே தோய்ந்து, இயற்கையின் அழகை அனுபவிக்கப் போதுமளவுக்கு ஒய்வு பெற்று வாழ்வதுதான் வாழ்வு.

'எனக்கு இம் மீன் கொத்தியைப் போல இருக்க, ஏகாந்தமான இடம் ஒன்று கிடைக்கலாகாதா? சிறு சுனை, அதைச் சுற்றிப் பசும் பொழில், எந்நேரமும் பெருமூச்செறிந்து என்னைத் தன்னுடைய பச்சைப் பசும் மார்பில் அணைத்துக் கொள்ளும் ஒரு மரம்— இவை போதும். கிடைக்குமா?'



மீன் கொத்திப் பறவையிடம் கவிஞன் பேசுகிறான்:

**உந்தன் பெருமை பாராட்ட மறுத்தனை**
**ஒய்கு பேராசை அனைத்தும் ஒதுக்கினை:**

**உந்தனைப் போலவே வேழையும் அமைதிசூழ்**
**ஓரிடம் வேண்டுவன், பறவையே! யாருமே**

**வந்திடாத பச்சைப் பசும் பொழில்:**
**வளருந் தனிமையில் ஆழும் சிறு சுனை:**

**எந்த நேரமும் என்னைத் தன் மார்பினில்**
**எடுத்தணைத்தே நெடு மூச்செறி ஓர் மரம்.**

இப்படி, வாழ்க்கையின் பரபரப்பிலிருந்து விடுபட்டு, அழகுத் தெய்வத்தின் தரிசனம் பெறுவதற்கான ஒய்வையும், அந்த ஒய்வு மலரும் தனிமையையும் விரும்பியவன், ஆங்கிலக் கவிஞன் வில்லியம் ஹென்ரி டேவிஸ் என்பவன். தற்காலக் கவிஞன். அவனுடைய மீன் கொத்தி, மனித உள்ளத்தில் உதிக்கும் அழகுணர்ச்சிக்குச் சாட்சி: இந்த உணர்ச்சியை நிறைவாக்க மனிதனுக்கு நேரம் இல்லையே என்ற தாபத்திற்குப் போக்கு வீடு. ஏனென்றால் அது கவிஞனுடைய மீன்கொத்தி: மனிதனுடைய உள் உலகத்தில் வடிவாகி, அங்கே, அந்த விசுவவெளியில் சிறை விரிக்கும் கற்பனைப் பறவை. (தொடரும்)



# கலையின் பரிசு

இயற்கை அன்னையின் அன்புக் கைகளால் அரவணைக்கப்பட்ட மிஹிந்தலை மலைச் சாரலில் சோமநாதரின் சிலைக்கூடம் இருந்தது.

சோமநாதர் சிறந்த கலைஞர். சோமநாதரின் கைபட்ட கற்களெல்லாம் காவியம் இசைக்கும் சிருஷ்டிகளாக மாறும். சோமநாதரின் படைப்புகளில் குறைபாடு என்பதே இருக்காது. ''இது சிலையா! இருக்காது. உயிருடன்தான் அவன் நிற்கிறான்'' என்று சொல்லத் தக்கதாக இருக்கும் சோமநாதரின் அற்புத கலைச் சிருஷ்டிகள்.

தனிமையிலே இன்பம் கண்ட சோமநாதர் எண்ணற்ற கலா சிருஷ்டிகளைப் படைத்தார். பார்ப்பவர் மயங்கத்தக்கதான உன்னத சிருஷ்டிகளைப் படைத்தார். அதன் பயனாக அநுராதபுரத்திலே சோமநாதரின் சிற்ப மேதை ஒலிக்கலாயிற்று. சிற்பங்களைக் கண்டு மக்கள் வாயாரப் புகழ்ந்தார்கள். கலையிலே ஆர்வமுள்ள பல இளைஞர்கள் சோமநாதரிடம் சிற்பம் கற்பதற்கு முனைந்தார்கள். அதன்பிறகு, அன்று தனிமையாக வாழ்ந்த சோமநாதர், இன்று ஆறு சீடர்களைப் பெற்றார்.

சிற்பக் கலையைக் கற்கவென்று வந்த எல்லாரையும் சோமநாதர் ஏற்றுக் கொள்ளவில்லை. வந்தவர்களுள் ஓரளவாவது சிற்பத்தைப் பற்றித் தெரிந்தவர்களைப் பரீட்சை மூலமாக ஏற்றுக் கொண்டார்.

சோமநாதர் தமது சீடர்கள் ஆறு பேர்களுக்கும் ஓர் சிற்பப் போட்டியை ஏற்படுத்தினார். ஒவ்வொருவரையும் ஒவ்வொரு புத்தரின் சிலையைச் செதுக்கும்படி கூறியிருந்தார். ஆறு புத்தரின் சிலைகளுள் எந்தச் சிலை அருள் ததும்புகிறதோ, அதைச் சமைத்தவர்தான் போட்டியிலே வெற்றி பெற்றவராவார் என்று அவர் சொல்லியிருந்தார்.

சோமநாதர் தமது சீடர்களுக்குப் போட்டி ஏற்படுத்த வேண்டுமென்று ஒருபோதும் எண்ணவில்லை. போட்டியினால் பொறாமை வளரும்; கலை வளராது என்ற கொள்கையுடையவர் சோமநாதர். இருந்தாலும் போட்டி ஏற்படுத்த வேண்டிய கட்டாயம் ஏற்படவே செய்தது.

கி. பி. 436ம் ஆண்டு அநுராதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு மித்தசேனன் என்பவன் இலங்கையை அரசாண்டான். இக்காலத்தில் இந்தியாவிலிருந்து தமிழர்கள் பாண்டுவின் தலைமையிலே பெரும் படையுடன் வந்தார்கள். சிங்க ஏறுகள் போல் துள்ளி வரும்

தமிழரின் படையை மன்னவன் மித்தசேனன் எதிர்த்தான். அவனது எதிர்ப்பு அவன் உயிருக்கே ஆபத்தாக முடிந்தது. அதன் பயனாகப் பாண்டு என்னும் தமிழ்வீரன் இலங்கைக்கு மன்னவனானான்.

தோள் வலிமையினால் இலங்கையைப் பெற்ற பாண்டு நீதி நெறிப் படி ஆட்சிசெலுத்தினான். ஐந்து வருட ஆளுகையின் பின்னர் பாண்டு இறக்க அவன் மகன் பாரிந்தன் மன்னனாகி விட்டான்.

'நம் இனத்தவரின் உரிமையான அரியணை இனி வழி வழியே தமிழர்களுக்காகிவிடும்' என்பதைப் புத்த பிக்ஷுவான மகாநாமன் உணர்ந்தார். அரசகுலத் தோன்றலான மகாநாமன் வாழ்க்கையை வெறுத்துத் துறவியானார். ஆதலினால் தமது சகோதரியின் மகன் தாது சேனனை எப்படியும் மன்னனாக்க வேண்டுமென அவர் தீர்மானித்தார்.

தாதுசேனனோ தான் அரசகுலத்தவனென்ற எந்தச் சிந்தனையுமில்லாது சிலை செதுக்கும் சிற்பியாக வாழ்ந்து கொண்டிருந்தான். கலைப் பிரியனான தாதுசேனன் கலையுடன் ஒன்றுபட்டுக் கிடந்தான்.

மகாநாமன், தாதுசேனனை வரவழைத்து, ''அரியணைக்குப் பாத்தியதை கொண்டாட நீ ஒருத்தன்தான் உள்ளவன். ஆகவே உனது உரிமைக் குரலை எழுப்ப வேண்டும்'' என்று ஆணை பிறப்பித்தார்.

அரச மரபிலே தானும் வந்தவன், அநுராத புரத்து மணி முடிக்குப் பாத்தியதை உடையவன் என்பதை அறிந்த தாதுசேனன் பெரு மகிழ்ச்சி கொண்டான். அவனது உயிருக்கு உயிர் நண்பனான இகசந்தனின் துணையுடன் நாட்டிலே உரிமையை நிலை நாட்டுவதற்குத் தாதுசேனன் முனைந்தான்.

பதினொரு ஆண்டுகளாகப் பாரிந்தன் ஆட்சி செய்து இறைவனடியினைச் சேர, அவன் தம்பியான குடபாரிந்தன் இலங்கைக்கு மன்னவனானான். தாதுசேனனின் உரிமைக் குரல் குடபாரிந்தனின் செவிகளில் விழுந்து விட்டது. அவ்வளவுதான்; மறுகணம் அவர்களைக் கைது செய்ய அரச ஆணை பாய்ந்து சென்றது. ஆணையைக் கண்ணுற்ற தாதுசேனனும், இகசந்தனும் மாறுவேடம் பூண்டு இரவோடு இரவாக அநுராதபுரத்தைக் கடந்து உறுகுணைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

உறுகுணைக்கு வந்த தாதுசேனன் வாளாவிருக்கவில்லை. குடபாரிந்தனை எதிர்த்து வெற்றி ஈட்டத் தக்கதான பலம் பொருந்திய படையைத் திரட்டலானான்.

காலவரையிலே தாதுசேனன் இகசந்தனைப் படைத் தளபதியாக்கிப் பெரும்படையை நிறுவினான். அரசியல் சதுரங்கம் தனக்குச் சாதகமாக இருக்கிறதென்பதைக் கண்ணுற்ற தாதுசேனன், அநுராதபுரத்தை முற்றுகை இட்டான். அச்சமயத்தில் தமிழ் வீரர்களின் ஒற்றுமை குலைந்த படை திறமையாக இருக்கவில்லை. அதனை நன்கு பயன் படுத்திக்கொண்ட தாதுசேனன், அரியணையைக் கைப்பற்றி மன்னனானான்.

இருபத்தைந்து ஆண்டு ஆட்சி செலுத்திய தமிழ் அரசுக்கு முற்றுப் புள்ளி வைத்து, கி. பி. 461–ல் தாதுசேனன் இலங்கைக்கு அரசனானான்.

தாதுசேனன் சிறந்த கலைஞனாக இருந்தமையால் தன் நாட்டு மக்களெல்லாம் சிற்பக் கலையைக் கற்க வேண்டுமென்று விரும்பினான். அதன் பயனாக அநுராதபுரத்திலே சிறந்த கலைக் கூடத்தை நிறுவினான்.

கலைக்கூடத்தின் தலைமைப் பொறுப்பை, சிறந்த ஓர் கலைஞனிடம் ஒப்படைக்க நினைத்து, கலைஞர் சோமநாதருக்கு அஞ்சல் எழுதினான். அநுராதபுரத்துக் கலைக் கூடத் தலைமைப்பொறுப்பை ஏற்று நடத்த உடனடியாக அவரை வரும்படி மன்னன் கோரினான்.

முதுமையைத் தழுவிக் கொண்டிருந்த சோமநாதரால் அநுராதபுரம் சென்று கலைக்கூடப் பொறுப்பை ஏற்க முடியாதிருந்தது. 'நாம் செல்லாவிட்டாலும் நம் சீடர்களுள் ஒருவனை அனுப்பி வைப்போம்' என்ற எண்ணத்தினால்தான் சோமநாதர் சிற்பப் போட்டியொன்றை ஏற்படுத்தினார்.

பொழுது புலர்ந்தால் போட்டியில் ஜெயிப்பவர் யார் என்று தெரிந்துவிடும். அதற்காக ஒவ்வொருவரும்

அருள் செல்வநாயகம்



தங்களுக்குத் தெரிந்த கலை நுணுக்கங்களையெல்லாம் புகுத்திச் சிலை வடிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

மன்னனது அழைப்புக்கிணங்கச் சோமநாதர் வசபனைத்தான் அனுராதபுரத்துக்கு அனுப்ப விரும்பினார். ஆனால் மற்றச் சீடர்கள் அதனால் ஒருகால் குரோதம் கொள்ளக் கூடுமென்பதற்காகவேதான் போட்டியை ஏற்படுத்தினார். போட்டியிலே நிச்சயமாக வசபன் ஜெயிப்பான் என்ற நம்பிக்கை சோமநாதருக்கு இருந்தது.

காலைக் கடன்களை முடித்துக் கொண்டு சோமநாதர் கலைக்கூடத்தினுள் நுழைந்தார். ஆறுசிலைகளும் ஓரே வரிசையில் வைக்கப்பட்டிருந்தன. அவைகளுள் வசபனின் சிலைதான் அருள் ததும்பும் முகச் சாயலைக் கொண்டு அழகாக இலங்கியது.

பூரண எழிலுடன் விளங்கிய அந்தச் சிலையைக் கண்ட சோமநாதர் பரம சந்தோஷத்துடன், ''வசபா! உன் கைத்திறன் வென்றது'' என்று மகிழ்ச்சியுடன் கூறினார். ''இனிமேல்தான் உனக்கு முக்கியமான வேலை இருக்கிறது. இதோ அஞ்சல். இதை எடுத்துச் சென்று மன்னன் தாதுசேனனிடம் கொடு. மன்னன் உனக்குக் கலைக்கூடத் தலைமைப் பொறுப்பை அளிப்பான். கடமையை ஏற்றுக் கண்ணியமாக நடந்து, குருதேவரின் புகழை நிலைநாட்டுவாயாக. சென்றுவா, வசபா! உனக்கு எல்லா நலங்களும் கிட்டும்'' என்று ஆசீர்வதித்து வசபனை அனுப்பி வைத்தார்.

**மா**லைக் கதிரவன் மேற்கு வானத்தைச் சென்றடையவும் வசபன் அனுராதபுரத்தினுள் கால் வைத்தான். நகரத்து வாழ்க்கை வசபனுக்குப் புதிது. அதுமட்டுமல்ல, அனுராதபுரத்துக்கு இதுவரை வசபன் வந்ததேயில்லை. ஆதலினால் நகரத்து மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் பார்த்தவாறு சென்று கொண்டிருந்தபோது இனிய நறுமணம் அவனது மூக்கைத் துளைத்தது.

வாசனை பொருந்திய நறுமணம் எங்கிருந்து வருகிறதென்றவாறு கண்களை ஓட்டினான். பக்கத்தே பூஞ்சோலை இருக்கவும், அதன் அழகிலே மயங்கியவாறு உள்ளே புகுந்தான்.

விதம் விதமான பூச்செடிகளையெல்லாம் பார்த்து மகிழ்ந்து கொண்டு அங்கு கட்டப்பட்டிருந்த ஓர் மேடையில் அமர்ந்தான். அப்பொழுது தேனினும் இனிய குரலொன்று எழுந்தது. காற்றிலே தவழ்ந்து வந்த இனிய பண்ணிலே உணர்ச்சிவயப்பட்ட வசபன் மேடையை விட்டெழுந்து குரல் வந்த திக்கை நாடிச் சென்றான். அங்கே அழகே உருவெடுத்தாற் போல் ஓர் ஆரணங்கு உல்லாசமாக ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தாள்.

பூரண முழு நிலவிலே கானகத்து மோகினி போல் அவள் காட்சி அளித்தாள். கட்டிளங்காளையான வசபன் உள்ளத்தை அவளிடம் பறிகொடுத்தான். ஆசிரமத்திலே பல ஆண்டுகளாக வாழ்ந்துவந்த வசபன் பெண்களைக் கண்டதில்லை. அப்படியிருக்க அழகான அந்த மாளிகையில் அந்த அழகிய நங்கையைக் கண்டது, அவனுக்குப் பெரு விருந்தாகத் தோன்றியது.

அவளுடைய ஆடலையும், பாடலையும் ரசித்தவாறு எதிரே நின்று கொண்டிருந்தான் வசபன். உள்ளத்தை அவளிடம் அலைமோதவிட்டுத் தவித்துக் கொண்டிருந்தான் வசபன். அவளது குரலிசை முடியவும் வசபன் தன்னை மறந்து ''சபாஷ்'' என்று பாராட்டினான்.

அப்பொழுது அவள் அவனை ஏறிட்டு நோக்கினாள். இடையிலே ஓர் வேட்டி. மேனியிலே ஓர் துண்டு. தோளிலே ஓர் பை. காட்டு மனிதனைப் போலத் தோன்றிய அவனது



முகம் கம்பீரமாக இருந்தது. ஆசையைத் தூண்டும் அரும்பு மீசை அவனது முகத்தினுக்குத் தனியோர் வகையான கவர்ச்சியை ஊட்டியது. அவளுக்கு அவன் நாகரிகமற்றவனாகத் தோன்றினாலும் அவனது எடுப்பான முகம் அவளுக்கு ஓர் வகையான மயக்கத்தை ஊட்டியது. ஓர் கணம் அந்த முகத்திலே மயங்கியவள், மறு கணம் தன்னைச் சமாளித்துக்கொண்டு, ஊஞ்சலை விட்டு இறங்கியவாறு "நீ யார்? இங்கு ஏன் வந்தாய்?" என்றாள்.

"நானா?..." வசபன் தடுமாறினான்.

"ஆமாம்! இது பெண்களுக்கென்று ஒதுக்கப் பட்ட இடமென்று தெரியாதா?"

"தெரியாது!"

"அப்படியானால்...."

"நான் அநுராதபுரத்துக்குப் புதியவன். மிருந்தலை மலைச்சாரலிலிருந்து இப்பொழுது தான் வருகிறேன்."

"வரக் காரணம்...."

"மன்னவனைக் காண்பதற்கு...."

"மன்னவனையா....?"

"ஆமாம். மன்னன் தாதுசேனனைப் பார்ப்பதற்காகத்தான் வந்தேன். கலைஞர் சோமநாதர் அனுப்பினார்."

"அப்படியானால் தாங்கள் ஓர் கலைஞரா?" என்று கேட்டாள் அவள்.

"கலைஞனேதான். உயிர்ச் சிற்பங்களைச் செதுக்கும் கலைஞன் நான்!"

* * *

"**வா**, குழந்தாய் கருணாவதி!" என்று தாதுசேனன் தன் அருமை மகளை வரவேற்றான்.

கருணாவதிக்குப் பின்னால் வந்து நின்ற இளைஞனைக் காணவும் தாதுசேனன், "இவன் யார்?" என்பதுபோல் கருணாவதியை ஏறிட்டு நோக்கினான்.



"அப்பா! கலைஞர் சோமநாதரிடமிருந்து இவர் வருகிறார்"

"அப்படியா! கலைஞர் சௌக்கியமா?" என்று தாதுசேனன் வினவினான்.

அப்பொழுது தான் வசபன் இந்த உலக நினைவுக்கு வந்தான். மன்னவன் மகளா தன் உள்ளத்தைக் கவர்ந்தவள்? இளவரசியா தன்னுடன் அன்பொழுகப் பேசியவள் என்ற வியப்பினால் தடுமாறிய வசபன், தன்னைச் சமாளித்துக் கொண்டு மன்னனை வணங்கியவாறு குருதேவர்சோமநாதரின் ஓலையைக் கொடுத்தான்.

ஓலையை வாங்கிய தாதுசேனன், கருணாவதியிடம் கொடுத்து, "படி, குழந்தாய்! கேட்கலாம்" என்றான். கருணாவதி ஓலையைப் பிரித்துப் படிக்கலானாள்:

'இலங்கை மாமன்னர் தாதுசேனனுக்குக் கலைஞர் சோமநாதர் எழுதிக் கொள்வதாவது:

நானோ முதுமையைத் தழுவிக் கொண்டிருக்கிறேன். இந்த நிலையில் தங்களது வேண்டுகோளுக்கு இணங்கி அநுராதபுரம் வரமுடியாதவனாக இருக்கிறேன். ஆனால் என் பொருட்டு என்னுடைய சீடனை வசபனை அனுப்புகிறேன். அவனைக் கலைக்கூடத் தலைவனாக்கிக் கலையை வளர்க்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

சோமநாதர்'

தாதுசேனன் வசபனை ஏறிட்டு நோக்கினான். 'இளம் வயதினைக்கொண்ட இவனா கலைக்கூடப் பொறுப்பை ஏற்பது?' என்ற சந்தேகம் மன்னனுக்கு எழுந்தது. 'நாற்றுக்கணக்கானவர்களுக்கு இந்த இளைஞனா சிற்பக் கலையைப் போதிக்கப் போகிறான்? முதுமையை மேற்கொண்ட சோமநாதர் தடுமாறி விட்டாரா?' என்ற வகையிலே மன்னன் தாதுசேனன் எண்ணினான்.

மன்னனது சிந்தனையைக் கண்ணுற்ற வசபன், "மன்னவா! என் திறமையைச் சந்தேகிக்கிறீர்கள். பரீட்சித்துப் பார்த்து விட்டு முடிவைச் சொல்லுங்கள். தாங்களும் சிறந்த கலைஞர் தானே?" என்றான்.

"வசபா! உன்னால் ஒரு வாரத்துக்குள் தத்ரூபமான ஓர் சிலையைச் செதுக்க முடியுமா?" என்று கேட்டான் மன்னன்.

"தங்களையேவேண்டுமென்றாலும் கல்லிலே பதித்து விடுகிறேன் மன்னவா?"

"என்னையா.....?"

"ஆம், மன்னவா! தங்களைப் பார்த்துக் கொண்டே தத்ரூபமான சிலையைச் செதுக்கி விடுகிறேன். அதன் பின்னர் என்னைப் பற்றித் தாங்கள் தீர்மானித்துக் கொள்ளுங்கள்."

"வசபா! என்னைச் சிலையாகச் செதுக்க வேண்டாம். என் மகள் கருணாவதியைப் போல் ஒரு சிலை செதுக்கி விடு. இரண்டு வார அவகாசம் தருகிறேன்!"

"மன்னவா! இரண்டு வாரம் வேண்டாம்.

# 'அனாஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

1. க்வினைனின் சல்பேட் 2. காப்பின்
3. பினாஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனாஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரிதநிவாரணமளிப்பதில் அனாஸினுக்கு இணையொன்றில்லை... அனாஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனாஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனாஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனாஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

நான்கு மருந்துகளின் சேர்க்கையான 'அனாஸின்' வேண்டுமென்றே கேளுங்கள்



ஒரு வாரத்திலுள் தங்கள் குமாரியின் சாயலைச் செதுக்கி விடுகிறேன்.''

''கருணாவதி! வசபனை எனது கலைக்கூடத்துக்கு அழைத்துச் சென்று வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடு.''

''சரி, அப்பா!'' என்றவாறு அவள் இருக்கையை விட்டு எழுந்து சென்றாள். மன்னனுக்குத் தனது அஞ்சலியைத்தெரிவித்து விட்டு வசபன் அவளைப் பின்தொடர்ந்தான்.

இரவு பகலென்று வித்தியாசம் பாராட்டாது வசபன் கருணாவதியின் சாயலைக் கல்லிலே பதித்துவிட முயன்று கொண்டிருந்தான்.

உளி பிடித்து லாகவமாக வசபன் கல்லிலே செய்யும் புதுமைகளைப் பார்த்தவாறு கருணாவதியும் அவனுக்குப் பக்கத்தே இருப்பாள்.

கருணாவதி அருகில் இருக்க வேண்டுமென்பது வசபனது எண்ணமல்ல. அவளது அழகிய முகமே அவனது நெஞ்சத்தே இருக்கும்போது, அந்தச் சாயலைக் கல்லிலே செதுக்கி விடுவது அவ்வளவு சிரமமானதல்ல வசபனுக்கு.

சிலை செதுக்கியாயிற்று. சிலையின் கண்களைத் திறந்து விட்டால், 'இது சிலையல்ல! கருணாவதிதான் நிற்கிறாள்' என்று சொல்லத்தக்கதாக மாறிவிடும்.

படுக்கையிலே புரண்டு கொண்டிருந்த கருணாவதிக்கு நித்திரை வரவில்லை. அன்று இரவுப் பொழுதைத் தவற விட்டால், அவனைக் காண முடியாது. பிறகு கலைக் கூடத்திலுக்குச் சென்று விடுவான். அதற்கிடையில் அலை பாயும் தனது உள்ளக் கருத்தை வசபனிடம் சொல்லிவிட வேண்டுமென்று தவித்தாள். படுக்கை முள் போல் தைத்தது. ஆகவே மெதுவாக எழுந்து கலைக் கூடத்திலுக்கு வந்தாள்.

வசபன் சிலையின் கண்களைத் திறப்பதற்குத் தயாராக இருந்தான். கருணாவதியைக் காணவும், ''வந்துவிட்டாயா! உன்னையும் வைத்துக் கொண்டு சிலையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்பது என் விருப்பம்'' என்றான்.

வசபனின் உளி மெதுவாகச் சிலையிலே விளையாடிக் கொண்டிருந்தது. சில நாழிகைப் பொழுதில் சிலை பூரணமாகிவிட்டது. கண்கள் தத்ரூபமாக அமைந்து விட்டன.

''கருணாவதி! உன் சிலையைப் பார்'' என்றவாறு உளியைக் கீழே போட்டான்.

''அபாரம்! அபாரம்!'' என்றாள் கருணாவதி.

''வசபனின் சிருஷ்டி அபாரந்தான். அன்று மன்னவன் என் மேதையைச் சந்தேகித்தார். ஆனால் இன்று என்னுடைய மேதையைக் கொண்டாடுவார், இல்லையா?''

''நான் தங்களைச் சந்தேகிக்கவில்லையே?''

''நிஜமாகவா?''

''ஆமாம், உங்களைக்கண்ட அந்தக்கணமே என் இதயம் உங்கள் வசப்பட்டு விட்டது.''

''சொல்லு கருணாவதி! அந்தஸ்தை மீறி ஆசை கொண்டு விட்டான் கலைஞன். நடக்காத காரியத்தின்மேல் சிந்தையைச் செலுத்தி விட்டான் வசபன்!''

''கலைஞர்கள் அப்படி ஒரு போதும் செய்ய மாட்டார்களே! அந்தஸ்து நாமாக வகுத்துக் கொண்டதுதானே!''

''அதற்கு நாம் கட்டுப்படுகிறோம்தான். இருந்தாலும் கருணாவதி என் அன்புள்ளத்தைப் புரிந்து கொள்கிறாள். ஆனால் ஏழைக் கலைஞன் இளவரசிமேல் அன்பு கொண்டு விட்டானென்று உதாசீனம் செய்வாயா?''

''அன்றே என் உள்ளத்தை உங்களிடம் ஒப்படைத்து விட்டேன்.''

''நானுந்தான், கருணாவதி. நம் காதல்...''

''....தூண்டாமணி விளக்குப்போல் சுடர் விட்டுப் பிரகாசிக்கும்'' என்றவாறு வசபன் அவளது அன்புக் கரத்தைப் பற்றினான்.

அந்தச் சமயம் அங்கு வந்த தாதுசேனன் ''கருணாவதி! இங்கா நிற்கின்றாய்?'' என்றவாறு தன்னை மறந்து கூறினான். பிறகுதான் கருணாவதியல்ல, கருணாவதியின் சிலை அது எனக் கண்டான்.

''ஆகா! அற்புதம்! இளைஞனை உன்னால் இவ்வாறாகச் சிலை செதுக்க முடியுமென்று நான் கனவிலும் கருதவில்லை. கலைஞரே! உமது சிற்ப மேதை சோமநாதரைக் காட்டிலும் மிஞ்சிவிட்டது. உம்மைப் போன்ற ஓர் சிற்பியை நான் இதுவரை கண்டதில்லை. இது முதல் உம்மை ஆஸ்தான சிற்பியாக நியமிக்கிறேன்.''

''தங்கள் பாக்கியம். கலைஞனின் சித்தம் மன்னவா!''

''உயிர்ச் சிலைகளைச் செதுக்கும் கலைஞரே! உமக்கு வேறு ஏதாவது வேண்டுமானால் என்னிடம் கேளும்.''

''நான் கேட்டால் மறுக்காமல் கொடுப்பீர்களா, மன்னவா?''

''தாதுசேனன் இதுவரை இல்லையென்று சொன்னதேயில்லை. இந்த சாம்ராஜ்யம் வேண்டுமா? ஈழத்து மணிமுடி வேண்டுமா? அல்லது எதுதான் வேண்டும்?''

''மன்னவா....''

''ஏன் தயங்குகிறீர். உள்ளத்தைத் திறந்து சொல்லும்.''

''மன்னவா! நான் செதுக்கிய சிலை....''

''அபாரம்! கருணாவதியைப் போன்ற இன்னொரு கருணாவதியைப் படைத்து விட்டீர்!''

''அந்தச் சிலையை எனக்கு அன்பளிப்பாகத் தாருங்கள்!''

''அப்படி யென்றால்....''

''கல்லாலான சிலை வேண்டாம் மகாராஜா! உயிர்ச்சிலையான கருணாவதியைத்தாருங்கள்!''

''என்ன....?'' என்றவாறு தாதுசேனன் தடுமாறினான். கலைஞனின் பரிசை நோக்கிச் சிந்தித்தவாறு கருணாவதியை நோக்கினான். அவள் அன்பு தவழ வசபனைப் பார்த்துப் புன்முறுவல் பூத்துக் கொண்டிருந்தாள். அவனும் அவளது புன்முறுவலை ஏற்பதுபோல் புன்முறுவல் தவழ நின்றான். மாறி மாறி இருவரையும் பார்த்த மன்னவன் ஓர் முடிவுக்கு வந்தவனாக, ''கருணாவதி!'' என்றான்.

''அப்பா!''

''கலைஞர் கலையின்பேரால் விரும்பும் பரிசு....'' என்று இழுத்தான் மன்னன்.

''தங்களுக்குச் சம்மதமானால், எனக்குப் பூரண சம்மதம்'' என்றாள் கருணாவதி.

''கலைஞரே! உமது கலையின் பரிசாக என் மகள் கருணாவதியை உமக்குத் தந்து விட்டேன்'' என்று கூறியவாறு கருணாவதியின் கையை, வசபனின் கையில் சேர்த்து ஆசி கூறினான் தாதுசேனன்.

# வட்ட மேஜை

## புள்ளிவிவரக் குழப்பம்

சில தினங்களுக்கு முன் வந்த பத்திரிகைகளில் ஒரு செய்தி வெளியாகியிருந்தது. "1938-ம் வருஷத்தைக் காட்டிலும் இப்போது பிரிட்டிஷ் மக்கள் உணவு, கருட்டு, பானம் முதலியவற்றுக்கு மூன்று மடங்கு அதிகச் செலவு செய்கிறார்கள்" என்பது தான் அந்தச் செய்தியாகும். இது உண்மை தான். ஆனால் இதைக் குறித்து யாரும் சந்தோஷப்படுவதற்கில்லை. 1938ம் வருஷத்தை விட இப்போது அவர்கள் உணவுக்கு அதிகச் செலவு செய்கிறார்கள் என்பதனால் அதிகமாகச் சாப்பிடுகிறார்கள் என்று எண்ண முடியுமா? உண்மையில் பிரிட்டிஷாருக்கு முக்கால் வயிற்றுக்குக் கூட உணவு கிடைக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். உதாரணமாக, நம் நாட்டில் இப்போது பஞ்சப்படி ஐம்பது ரூபாய்க்கு அதிகமாகக் கொடுக்கிறார்கள். ஒரு ரூபாய்க்கு ஐந்து படி நெல்லூர் அரிசி கிடைத்த காலத்தில் எட்டு ரூபாய் சம்பளம் பெற்று வந்தவர்களுக்கு இப்போது 65 ரூபாய் சம்பளம் கிடைக்கிறது. ஆனால், இப்போது ஒரு படி அரிசியின் விலை ஒரு ரூபாய்க்கும் அதிகமாக இருக்கிறது. பிரிட்டிஷ் மந்திரியைப் போல் இந்திய சர்க்கார் மந்திரி சொல்லுவதாயிருந்தால், இந்தியாவில் மக்கள் உணவுக்காக முன் செலவு செய்ததை விட எட்டு மடங்கு அதிகச் செலவு செய்வதாகப் பிரசாரம் செய்யலாம். ஆனால், உண்மை என்ன? போதிய உணவின்றிப் பலர் வாடுகின்றனர். எனவே பிரசாரத்துக்காகச் சர்க்கார் கூறும் புள்ளிவிவரங்கள் உண்மை நிலையைக் காட்டுவதில்லை.

கோயமுத்தூர்
15—9—56

ஆர். எஸ். சங்கரய்யர்

## திருமயிலாடியில் திறந்த வெளி

கப்பல் ஏற்றுமதி, இறக்குமதியில், முன்பு கடலூர் பெரிய வியாபார கேந்திரமாக இருந்தது. அன்று வாழ்ந்த பெரியார் ஒருவர், வடலூர் கடலூராகுமென்று கூறியதாகத் தெரிகிறது. அந்தச் சொல்லை மெய்ப்பிக்கும் தன்மையில் கடலூர் வியாபாரம் வர வரக் குறைந்து வருகின்றது. வடலூருக்குப் பக்கமுள்ள நெய்வேலிப் பிரதேசத்தில் உலகமே கூர்ந்து கவனிக்கக் கூடிய வகையில் நிலக்கரிச் சுரங்கம் பிரகாசிக்கத் தொடங்கி விட்டது. அதுமட்டுமல்ல, அங்குள்ள மண்ணுக்கும் மதிப்பு உயர்ந்து வருவதாகக் கூறப்படுகிறது.

நான் சிறுவனாக இருந்த காலத்தில் நாகப்பட்டினம் தென்னிந்திய ரயில்வே கம்பெனியின் பெரிய தொழிற்சாலை (ஒர்க்ஷாப்) கேந்திரமாக இருந்தது. திருச்சிராப்பள்ளிக்குப் பக்கமுள்ள பொன்மலைப் பிரதேசம் சாகுபடி ஆகாத திறந்த வெளியாகக் கிடந்தது. மேற்படி தொழிற்சாலை பொன்மலைக்கு மாற்றப்பட்டதும், நாகையிலிருந்த செல்வம் நகர்ந்து, இப்பொழுது பொன்மலைப் பிரதேசம் பொன்மலையாகவே சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது.

சென்னை-தனுஷ்கோடி மெயின் லயனில் ரயிலில் பிரயாணம் செய்பவர்கள் கொள்ளிடம் ஸ்டேஷனுக்கும், திருமயிலாடி ஸ்டேஷனுக்கும் நடுவில் செல்லும்பொழுது, கிழக்கில் எட்டிப் பார்த்தால், மைல் கணக்கில் உள்ள திறந்தவெளிப் பிரதேசத்தில் மணல் வெளியையும், பனைமரத் தோப்புகளையும், காடுகளையும் காணலாம்.

விவசாயப் பிரதேசமான சீர்காழி தாலுகாவில், முதல், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் அமுல் நடத்தப்படும் இந்நேரத்திலும் மேற்படி திருமயிலாடி திறந்த வெளி திருத்தப் படாமல் இருப்பது தமிழ் நாட்டுக்குப் பெரிய களங்கமாகும்.

அன்று யாராவது, நெய்வேலியில் நிலக்கரிச் சுரங்கம் ஏற்படுமென்றும், வடபாதி மங்கலத்தில் ஆரூரான் சர்க்கரை ஆலை இயங்குமென்றும் நினைத்திருப்பார்களா? அவைகளைப் போல, திருமயிலாடி திறந்த வெளியின் தரமும் ஏன் உயரக் கூடாது?

வாணிபத்தை வளர்க்கவும், வேலையில்லாத் திண்டாட்டத்தை விரட்டவும், திருமயிலாடி திறந்த வெளியில் இயந்திரங்களை இயங்கச் செய்வதற்கு இந்திய சர்க்காரும், சென்னை சர்க்காரும் முன்வரவேண்டும்.

சீர்காழி
8—9—56

எஸ். வி. முத்தையா

## மனம் திருந்தினேன்

'கல்கி'யில் வாராவாரம் வரும் தேவியின் கடிதங்களை வாசிப்பதிலிருந்து பாதாளத்தில் தள்ளப்பட்ட என் உள்ளம் படிப்படியாக உயர்ந்த நிலைக்கு வருகிறது.

முன்பு நான் பொருள், புடவை, போலி கௌரவம் முதலியவற்றில் சிக்குண்டு, என் கணவரையும் குடும்பத்தையும் கஷ்டத்துக்கு உள்ளாக்கினேன். என் விருப்பங்கள் நிறைவேறாமல் எட்டு மாத காலம் சித்த சுவாதீனமில்லாமல் கஷ்டப்பட்டேன். தெய்வத்தின் கருணையால் சுகம் அடைந்தேன்.

என் சந்தோஷமான வாழ்வுக்கு அணிகலனாக அமைந்து வருவது 'தேவியின் கடித'ங்களாகும். நான் பெற்ற இவ்வறிவுரையை எல்லாப் பெண்மணிகளும் பெற்று ஆனந்த வாழ்வு வாழ அஞ்சலிக்கிறேன்.

பம்பாய்
11—9—56

கா. சரஸ்வதி

## உற்பத்தி குறையும்

அக்டோபர் 14-ந் தேதி 'கல்கி' தலையங்கத்தைப் படித்தேன். ரொம்பவும் பொருத்தமாகவும் பிடித்தமாகவும் இருக்கிறது. சென்னை மந்திரிகள் ஒவ்வொரு ஜில்லா, தாலுகா, கிராமங்களுக்குத் தகுந்த முறையில் விசாரித்துச் சட்டம் செய்ய வேண்டும். ஒரு நிலத்துக்கும் அடுத்த நிலத்துக்குமே கூட வித்தியாசம் உண்டு. இவைகளைக் கவனிக்காமல் சட்டம் செய்திருக்கிறார்கள். இது மிகவும் அநீதி. சிறு நிலம் வைத்திருப்பவர்களுக்கு இச்சட்டத்திலிருந்து விலக்கு அளிக்க வேண்டும். இரண்டு ஏக்கர் நிலம் உள்ளவன் ஒரு ஏக்கர் நிலம் சொந்தச் சாகுபடிக்கும் அரை ஏக்கர் உள்ளவன் கால் ஏக்கர் சொந்தச் சாகுபடிக்கும் எடுத்துக் கொள்ளலா மென்று

சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிச் சட்டம் செய்தால் நிலம் துண்டாகி ஒருவருக்கும் பிரயோசனமில்லாமல் போய் விடும். அடிக்கடி சாகுபடியினருக்கும், நிலச் சொந்தக்காரர்களுக்கும் சச்சரவு ஏற்படும். நிலச்சுவான்தாருக்குத் தண்ணீர் தேவையா யிருக்கும் பொழுது சாகுபடியினர் தண்ணீரைப் பிடுங்கி விடுவர். இதனால் சேதம் ஏற்படுமே ஒழிய நன்மை கிடையாது. விவசாய நிலங்களைத் துண்டு துண்டாக ஆக்காமல் துண்டு துண்டாக இருக்கிற நிலங்களை ஒன்று சேர்த்துச் சாகுபடி செய்வதே விவசாயத்தின் அடிப்படைக் கொள்கை.

ஆகையால் சிறு நிலச்சுவான்தார்கள் சட்டத்திலிருந்து விலக்கப்பட்டால் ஒழிய உற்பத்தி பாதிக்கப்படுமென்பது நிதர்சனம். இதைச் சர்க்கார் உடனடியாகக் கவனித்து விவசாய நிலங்கள் துண்டு துண்டாய்ப் பிரிக்கப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தற்போதுள்ள புதுச் சட்டத்தினால் உற்பத்தி அதிகம் பாதிக்கப்படும் என்பது நிச்சயம்.

தென்காசி
22—10—56 டி. எஸ். எஸ்.

## எதிர்க்கட்சி வேண்டும்

எங்கு சரியான எதிர்க்கட்சி இல்லையோ அங்கு ஜனநாயக ஆட்சி நடப்பது போலத் தோன்றினாலும், கவனித்துப் பார்த்தால் அங்கு ஜனநாயகம் என்ற போர்வையைப் போர்த்திக்கொண்டு சர்வாதிகார ஆட்சியே ஆட்சி புரிவதைக் காணலாம்.

மரமானது செழித்து வளர்ந்து ஓங்கி உயர்ந்து நிற்க அதன் ஆணி வேர் மட்டும் உதவுவதில்லை. சல்லி வேர்களும் இருந்தால் தான் பூமியில் மரம் உரம் பெற்று நிற்க முடிகிறது. அதுபோலத்தான் நாடு என்ற மரத்தைத் தாங்கி நிற்க ஆணி வேர் மட்டும் போதாது. சல்லி வேர்கள் போல வேறு சில கட்சிகளும் வேண்டும்.

ஆளும் கட்சியைத் தட்டிப் பேசச் சரியான ஒரு எதிர்க் கட்சி அமைந்து, கட்சிகள் தங்கள் தங்கள் பணியைச் செவ்வனே செய்து வந்தால், நாடு என்றும் நல்ல நிலையில் இருக்கும். அதனால் பாரதத்தின் பெருமை உலக அரங்கில் மேன்மேலும் உயரும்.

காரமடை
22—10—56 துரை. முருகேசன்

## கடை அடைப்பு

ஏதாவது ஒரு கட்சிக்காரர்கள், தங்கள் கோரிக்கைகளைச் சர்க்காரிடம் எடுத்துச் சொல்லுவதற்கு, அதன் அடையாளமாகக் 'கடை அடைப்பு' என்ற ஒரே செய்கையால்தான் எடுத்துக் காட்ட முடியும் என்று நினைக்கிறார்கள். ஆனால் அந்தக் கடை அடைப்பினால் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களால் பொது மக்கள் பாதிக்கப்படுவதையும் அவர்கள் சிறிது சிந்தித்துப் பார்க்கவேண்டும். கடை அடைப்பினால் அதிகமாகப் பாதிக்கப்படுபவர்கள் கூலி வேலை செய்பவர்களே.

சூரியன் கிழக்கே உதித்தது முதல் மேற்கே மறையும் வரை, உடம்பில் வியர்வை ஆறாகப் பெருக உழைத்து விட்டு, மாலையில் கூலியை












வாங்கிக்கொண்டு, அரிசி முதலிய வீட்டுச் சாமான்கள் வாங்கச்சென்றால், கடை அடைத்திருக்கும். அடைத்த கடையைப் பார்த்து விட்டு, அடுத்த தெருவுக்குப் போவான். அங்கும் கடை அடைத்திருக்கும்.

இப்படி, திறந்த கடையைத் தேடிப் பசியுடன் அலையும் பொழுது, ஏதாவது ஒரு சந்தில் சிறிய கடை திறந்திருக்கும். அங்கு சாமான்கள் வாங்கப்போனாலும், அந்தக் கடைக்காரர் சொன்ன விலைதான் கொடுக்கவேண்டும். ஆகையினால் கடை அடைப்பு என்னும் செய்கையை விட்டு விட்டு, பொது மக்களை, முக்கியமாக நம் நாட்டில் இருக்கும் ஜனத் தொகையில் பாதிக்குமேல் இருக்கும் கூலி வேலைக்காரர்களை, பாதிக்காத வேறு முறையில், கட்சிக்காரர்கள் தங்கள் கொள்கைகளைச் சர்க்காரிடம் எடுத்துக் கூறவேண்டும்.

மதுரை
23—10—56 ஆர். எஸ். சாமி ராஜ்

## வாசகர்கள் பாக்கியம்

'கல்கி'யில் திரு அ. சீநிவாசராகவன் இலக்கிய விமரிசனம் செய்வது 'கல்கி'யின் அதிர்ஷ்டமா, அல்லது பேராசிரியர் அவர்களுக்கு இலக்கியப் பணி புரியக் 'கல்கி' துணை செய்வது அவருடைய அதிருஷ்டமா என்பது நிச்சயமாகப் புரியவில்லை. எனினும் ஒன்று மட்டும் நிச்சயம். அது வாசகர்களின் பாக்கியம் என்பதுதான்!

பேராசிரியரிடம் ஆங்கிலக்கவிதை படிக்கும் வாய்ப்புக் கிடைத்த மாணவர்களில் நானும் ஒருவன். 'கல்கி'யில் அவரது 'இலக்கியச் செல்வ'த்தைப் படிக்கும் போது, அவரது கிண்கிணிக் குரல் என் காதில் ஒலிக்கிறது!

'ப்ரௌனிங்'இன் ரஸனை அபாரம். இனிமையான, எளிமையான வசன—கவிதை நடை. பிப்பா வாழ்வின் சோகமும், அவள் நெஞ்சின் துடிப்பும், அவ்வேழைக்குக் கவிஞன் அளிக்கும் உன்னத ஸ்தானமும், அழகான பிரதிபலிப்பு. அவள் கனவுகளைத் தமிழில் படிக்கையில் நெஞ்சை அள்ளுகிறது. தமிழின் இனிமையோ? பேராசிரியரின் திறனோ?

மனிதர்கள் எங்கிருந்தாலும், எத்தகைய மாறுபட்ட சூழ்நிலைகளிலிருந்தாலும், சாதாரண உணர்ச்சிகளிலும் சரி, ஆத்மார்த்த விஷயங்களிலும் சரி அவர்கள் இதயங்கள் ஒன்றுபட்டுத்தான் ஒலிக்கின்றன என்பதை விளக்க, ஆசிரியர் மேற்குக்கும், கிழக்குக்கும் வில் வளைக்கிறார்.

அம்மைய நாயக்கனூர்
13—10—1956 அ. ராமநாதன்

## அரிய பணி

மேலை நாட்டு இலக்கியச் செல்வத்தைத் தமிழ் மக்களுக்கு வழங்கும் தொண்டு மிகவும் போற்றற்குரியது. தமிழிலுள்ள பெருமைகளைப் பிறர் அறியுமாறு செய்தல் வேண்டும். அதனினும் பிறமொழிச்செல்வத்தைத் தமிழர் துய்க்குமாறு செய்தல் இன்றியமையாதது. ஆனால் அது எளிய பணியன்று. ஒரு மொழியிலுள்ள சொல் இன்னொரு மொழிக்குப் பெயர்க்கப்படுகையில் தன் ஆற்றலையும், ஏன், பொருளையுமே இழந்து விடுவதுண்டு. 'Long blue solemn hours' என்பதை எப்படித் தமிழில் சொல்வது?

இத்தகைய அரிய பணியைப் பேராசிரியர் வெற்றிகரமாகச் செய்திருக்கிறார். 'இரண்டது, எழுந்தது, சிவந்தது' போன்ற எளிய சொற்களாலேயே மூலத்திலுள்ள வேகத்தைக் கொணர்ந்து காட்டியது மிகவும் பாராட்டத்தக்கது.

சென்னை
18—10—56 எஸ். இராமநாதன்

## அருமையான நவீனம்

"அபலை அஞ்சுகம்" தொடர் கதையைப் படிக்கும் பொழுது, படிக்கும் நிலை மறந்து ஏதோ நல்லதொரு திரைக் காட்சியைப் பார்க்கும் நிலைக்கு வந்து விடுகிறேன். அபலை அஞ்சுகம் கதையிலே உயிர் மட்டுமல்ல, உள்ளமும் இருக்கிறது. இப்படிப்பட்ட அருமையான நவீனத்தை எங்களுக்கு அளிக்கும் திரு கி. ரா. கோபாலனுக்கு நன்றி.

மேலப்பாதி
14—10—56 ஜெகந்நாதன்

## விசைத்தறிப் பிரச்னை

திங்கள் 'கல்கி' 30-9-56 தேதி இதழிலும் 14-10-56 தேதி இதழிலும் வரைந்திருந்த கார்ட்டூன் சித்திரங்கள் உண்மையாகவே இப்பொழுது கைத்தறிக்குச் சூழ்ந்துள்ள அபாயத்தை அப்படியே தத்ரூபமாகக் காட்டுகின்றன. இப்பொழுதுதான் கைத்தறித் தொழிலாளிகள் நிம்மதி யடைந்தார்கள். ஆனால் கூடவே துன்பமும் தொடர்ந்து விட்டது. ஏற்கனவே மில்களிலே இருக்கும் மின்சாரத் தறிகள் போதாவென்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மேலும் 14,500 தறிகள் வைப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். இதை எதிர்த்துப் போராட்டமே ஆரம்பித்தாலும் ஆரம்பிக்கலாம்.

ஆனால் நெசவாளிகள் இதுவரை எந்தப் போராட்டத்திலும் கலந்து கொண்டதில்லை. "சாது மிரண்டால் காடு கொள்ளாது" என்று ஒரு பழமொழி உண்டு. தேர்தலுக்கு இன்னும் நான்கு மாதங்கள் இருக்கின்றன. இந்தச் சமயத்திலாவது விவேகமாக நடந்து கொண்டால் வோட்டுக் கிடைக்கும். இல்லையேல் இந்தத் தேர்தலில் தோல்வி பெறுவது திண்ணம். மில்களில் 36 அங்குலத்துக்கு மேல் ஓட்டாதே என்று சட்டம் போட இவர்களால் முடியாதா? முடியும். அப்படிச் செய்தால் மில் முதலாளிகள் அழுவார்களே! நெசவாளிகள் ஏழைகள்தானே! என்ன சொன்னாலும் கேட்பார்கள் என்ற தைரியம்தான். பணக்காரர் என்றாலே நம் அரசாங்கம் பயப்படுகிறது. ஏன் இவர்களால் மில்களில் வேஷ்டி, சேலைகள் ஓட்டக்கூடாது என்று சட்டம் போட முடியாதா? ஆந்திரா சர்க்கார்தான் தைரியசாலிகள்! தங்கள் நாட்டில் விசைத்தறி போட மாட்டோம் என்று தீர்மானம் செய்து விட்டார்கள். நம் சென்னை சர்க்கார் அவர்களைப் பின்பற்றுவார்களா?

வெண்ணனூர் வி. வி. ராமசாமி
29—10—56 வி. வி. வி. சுவாமி

# பிரத்தியேக புருஷர்

பத்துபேர் மத்தியில்
எடுப்பாகத் தோற்ற
மளிப்பவர் அவர்.
தன்னிலும், தன் உடை
நடை முறைகளிலும்
அவருக்குள்ள நம்பிக்கை
அவர் தோற்றத்தில்
பிரதிபலிக்கிறது.

**அவரது அழகுமிக்க உடைகள்
பின்னியின் துணியில் செய்தவை**

தி பக்கிங்ஹாம் அண்ட் கர்னாடிக் கோ., லிட்.
தி பங்களூர் உல்லன், காட்டன் அண்ட் ஸில்க் மில்ஸ் கோ., லிட்.
நிர்வாகிகள்: பின்னி அண்ட் கோ.,
(மதராஸ்) லிட்., மதராஸ்






**EPHRILIME**

**எப்ரிலைம்**



அவரது ஆஸ்த்மா உபாதை களைக் குணப்படுத்த எப்ரிலைம் மிகச் சிறந்தது. ஒரு பாட்டில் மருந்தை உபயோகித்தால் அதன் பூரண பலன்களைக் காண்பார்.

நீண்ட காலப்பட்டதும், மிக்க உபாதை தரக் கூடியதுமான மார்ச்சளி. ஆஸ்த்மா முதலிய ரோகங்களுக்கு ஓர் சிறந்த நாவிபற்ற மருந்து

**யூனியன் டிரக் கம்பெனி, லிட்.**

மதராஸ்டிப்போ: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1

வெளி வந்து விட்டது!

நவநாகரீக கவர்ச்சியுள்ள அழகிய மாடல்

**G.E.C.**





5 வால்வ் ரேடியோ

B. C. 5149 A. C.

நிகர விலை ரூ. 338/-

12 மாத உத்தரவாதத்துடன்

**வயர்லெஸ் சேல்ஸ் & சர்வீஸ் கம்பெனி**

1/11A-, மவுண்ட் ரோடு, சென்னை - 2

போன்: 86506 - தந்தி: "RADSALES"

கிளைகள்

பெஸண்ட் ரோடு, காந்தி நகர், விஜயவாடா ○ 28, கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி ரோடு, வேலூர் ○ செர்ரி ரோடு, சேலம்



HI DOME

Choice of other models and sizes

- *Available everywhere*

**Prestige**

PRESSURE COOKERS

FOR EVERY HOME

# படித்துப் பாருங்கள்

## திருப்புகழ் (தொகுதி 5)

வெற்றிவேற் பெருமானின் புகழை விரித்துரைக்கும் நூல்களில் அருணகிரி நாதர் இயற்றிய திருப்புகழ் தனிச் சிறப்புவாய்ந்தது.

முருகன் அடியார்களுக்குள் முதல்வரான அருணகிரிநாதரின் பெருமையை, "ஐயா அருணகிரி அப்பா உனைப்போல, மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்....!" என்ற தாயுமான அடிகளின் வாக்கிலிருந்து அறியலாம். அம் மகா புருஷர் கந்தன் அடிக் கமலங்களைச் சதா கருத்திற் கொண்டு, "தண்டாயுதமும் திரிசூலமும் விழத்தாக்கி, உன்னைத் திண்டாட வெட்டி விழ விடுவேன்" என்று காலனையும் காய்ந்த கலங்காத உள்ளத்தினர்; நீலச் சிகண்டியில் ஏறும் பெருமானை எந்த நேரமும் மறந்தறியாத மெய்யன்பர். அப் பெருந்தகையாளர் ஐயன் முருகனிடம் அகங் குழைந்து, அவன் குடி கொண்டிருக்கும் ஆறு படை வீடுகளையும் அற்புதத் தீந்தமிழ்க் கவிகளினால் புகழ்ந்து பாடினார். அதுவே அழியாப் புகழ் பெற்ற திருப்புகழ்.

சந்த நயத்தில் அமைக்கப்பட்டிருக்கும் திருப்புகழ்ப் பாடல்களுக்கு உரை காண்பது எளிய காரியமன்று; அதற்கு, தமிழ்ப் பண்பும், பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பரந்த புலமையும், பக்தி நூல்களில் பழுத்த அநுபவமும், முருகப் பெருமானிடம் மாறாத நேயமும் தேவை. இவை யெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறிஞர் தணிகை மணி. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் திருப்புகழுக்கு உரை யெழுதும் அரிய முயற்சியைத் தொடங்கி, பல நாள் உழைப்பின் நான்கு தொகுதிகள் எழுதி வெளியிட்டுள்ளார்.

முதல் தொகுதியில் முதல் மூன்று படை வீடுகளைப் பற்றிய இருநூறு பாடல்கள் இடம் பெற்றன; இரண்டாந் தொகுதியில், எஞ்சிய மூன்று படை வீடுகளைப் பற்றிய இருநூற்றைம்பது பாடல்கள் தொகுக்கப்பட்டன; மூன்றாந் தொகுதியில் பஞ்சபூதத் தலங்களைப் பற்றிய திருப்புகழ்ப் பாடல்கள் இருநூற்றுப் பத்துக்கு உரை விளக்கம் கூறப்பட்டிருக்கிறது. நான்காம் தொகுதியில் ஆறுபடை வீடுகள் அல்லாத ஏனைய தலங்களைப் பற்றிய முந்நூற்று நாற்பது திருப்புகழ்ப் பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இப்பொழுது ஐந்தாம் தொகுதி வெளி வந்து விட்டது. இதில் முந்நூற்றுப் பதினைந்து பாடல்களுக்கு உரை வளம் காணப்பட்டிருக்கிறது. வெறும் பதவுரை மட்டும் அல்லாமல், திருவாய் மொழி, திருவாசகம், தேவாரம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் முதலிய நூல்களிலிருந்தெல்லாம் மேற்கோள்கள் எடுத்துக் காட்டி விரிவுரையாகவே செய்திருக்கிறார் உரையாசிரியர்.

தமிழ் இலக்கியத்துக்கு அணி செய்யும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்றான திரு எழு கூற்றிருக்கை என்னும் சித்திரக் கவி விளக்கமும் (படத்துடன்) இந் நூலில் சேர்க்கப் பட்டிருப்பது முருகனடியார்களைப் பரவசப் படுத்துவதாகும்.

பதிப்பாளர்: மீனாக்ஷி கல்யாணசுந்தரம், நெ. 2, இரண்டாவது தெரு, கோபாலபுரம், சென்னை—6; விலை: ரூ. 8–8–0.

## பூதானமும் பொதுமையும்

உலகம் கண்டும் கேட்டுமிராத முறையில் இந்தியாவில் அஹிம்சா முறையில் நிலப் புரட்சி ஏற்பட்டு வருகிறது. விநோபா அடிகள் பூமிதான யக்ஞத்தை அதிசயிக்கத் தக்க முறையில் நிகழ்த்தி வருகிறார். இத்தகைய புண்ணிய புருஷரைப் பற்றியும் பூதான இலட்சியங்களைப் பற்றியும் அழகான கவிதைகளில் விளக்கி யிருக்கிறார் இந் நூலாசிரியர்.

நூலை எழுதியவர்: அ. அய்யாவு பி. ஏ., பி. டி.; கிடைக்குமிடம்: திரு அ. அய்யாவு-கோவை சர்வ ஜன உயர்நிலைப் பள்ளி, பீளமேடு, கோவை, விலை அணா 4.

## அரசன் விரும்பிய சேவை

ஏகபிரானைக் காணும் ஆவலினால் தேடி அலைந்தான் ஒருவன். வழி நெடுக அவன் புரிந்த சேவைகள் பல. அவன் பிறருக்குச் செய்த தொண்டுகளை யெல்லாம் ஏகநாதர் தமக்கே புரிந்ததாக ஏற்றுக் கொண்டார் என்பதை யறிந்து அவன் மனம் திருப்தி அடைகிறது.

தெளிந்த தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கும் இக் கவிதை நூல் தொண்டின் பெருமையை நன்கு விளக்குகிறது. பிரபல ஆங்கில நூலாசிரியர் ஹென்றி வான் டைக்கின் கதையைக் கவிதை நடையில் தமிழில் வழங்கி யிருக்கிறார் ஸ்ரீமதி காமாட்சி சீனிவாசன்.

கிடைக்குமிடம்: பாரதி புத்தக நிலையம், டவுன்ஹால் ரோடு, மதுரை. விலை அணா 8.

## தாமே பயின்ற தமிழ்ப் பேராசிரியர்

அண்மையில் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட அறிஞர் பெருந்தகையாளர்களில் திரு ந. மு. வேங்கடசாமி நாட்டார் தலை சிறந்தவர்; காலமெல்லாம் தமிழ்க் கல்விக்கே உழைத்த சிறந்த கல்விமான்; திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியிலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் தமிழாசிரியரா யிருந்து அருந் தொண்டாற்றிய அறிஞர்; நல்ல நாவன்மை பெற்ற நாவலர்; தமிழ்ப் பண்பில் ஊறிய தகைமையாளர்; சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு, திருவிளையாடற் புராணம் ஆகிய பெரிய நூல்களுக்கு உரை கண்ட பேராசிரியர்; சைவமும் தமிழும் தழைக்கச் சன்மார்க்க நெறி நின்ற சாந்த குணசீலர்; பிறைசூடிய பெருமானிடம் பேரன்பு பூண்டவர். இத்தகைய தமிழாசிரியரின் வாழ்க்கை வரலாற்றை அவரது மாணவர் வே. நடராஜன், இச்சிறு நூலில் நாவலரின் தோற்றம் முதல் மறைவு வரையில் விரிவாக எழுதியுள்ளார்.

கிடைக்கும் இடம்: வே. நடராஜன், நாட்டார் பதிப்பகம், 4, புதுப் பேட்டை தோட்டத்தெரு, ராயப்பேட்டை, சென்னை–14. விலை: ரூ. 1–0–0.



# வாழைப்பாடிக்

குணராஜ சோழன் காலத்தில் வாழைப் பாடி அக்கிரகாரத்தில் சில வைஷ்ணவர்கள் ஒரு புது சம்பிரதாயம் ஆரம்பித்தார்கள்.

"நாம் கடவுளுக்குத்தான் தலை வணங்க வேண்டும். நம்மைப் போன்ற மானிடர் யாருக்கும் நமஸ்காரம் பண்ணுதல் ஆகாது" என்று ஒரு தீவிர பக்திமார்க்கம் அவர்கள் பூண்டார்கள். பிரசாரமும் செய்தார்கள்.

அந்தச் சம்பிரதாயத்துக்கு 'வணங்காக் கலை' என்று ஒரு பெயரும் வைத்துக் கொண்டு தங்கள் கொள்கைப்படி நடந்தும் வந்தார்கள். வணங்காக் கலையார் யாருக்கும் நமஸ்காரம் செய்ய மாட்டார்கள். எந்தப் பெரியவர், எந்த வித்துவான் அல்லது ராஜ்ய அதிகாரியைக் கண்டாலும் நமஸ்காரம் செய்ய மாட்டார்கள். பிடிவாதமாக இப்படியே நடத்தி வந்தார்கள்.

வணங்காக் கலையார் இப்படிச் செய்வதைப் பார்த்து மற்றவர்கள் அதற்கு நேர்மாறாக யாரைக் கண்டாலும் நமஸ்காரம் செய்வது கடமை என்று முன்னைவிட அதிக தீவிரமாக ஒருவருக்கொருவர் நமஸ்காரம் பண்ணி வந்தார்கள். இந்தக் கட்சியே பெரிய கட்சியாக இருந்தது.

வணங்காக் கலையார் இதைக் கண்டு அசையவில்லை. தங்கள் விரதத்தைத் தைரியமாக நடத்தி வந்தார்கள். இரு கட்சிக்கும் விரோதம் முற்றிப் போயிற்று. ஒருவர் வீட்டுக்கு ஒருவர் சாப்பிடப் போக மாட்டார்கள். கொள்வனை கொடுப்பனையும் நிறுத்தி விட்டார்கள். அதற்கு முன்னமே சம்பந்தப்பட்டவர்கள் புருஷன் வணங்காக் கலையாயிருந்தால் மனைவியும் வணங்காக் கலை என்பதாகப் பிரிந்து விட்டார்கள்.



வரவர வணங்காக் கலையார்களின் எண்ணிக்கை அதிகமாயிற்று. நமஸ்காரிகள் எண்ணிக்கை குறைய ஆரம்பித்தது. இதனால் துவேஷம் இன்னும் அதிகமாயிற்று. "இந்த அநமஸ்காரிகள் நம்முடைய கிணற்றில் தண்ணீர் எடுக்கக் கூடாது" என்று நமஸ்காரிகள் தீர்மானம் செய்தார்கள்.

நமஸ்காரிகள் குடியிருந்த பக்கத்தில் தான் நல்ல தண்ணீர்க் கிணறு இருந்தது. ஆனபடியால் ராஜாவிடம் வணங்காக் கலையார் தகராறைக் கொண்டு போனார்கள்.

ராஜா விசாரித்தான். வணங்காக் கலையார் வழக்கில் தோற்றார்கள். "நீங்கள் தனியாக ஒரு புதுக் கிணறு வெட்டிக் கொள்ளுங்கள்" என்று அரசன் தீர்ப்புச் சொல்லி விட்டான்.

அதன்மேல் நமஸ்காரிகளுக்குத் தைரியம் அதிகரித்தது. யாராவது ஒரு வணங்காக் கலையாரைக் கண்டால் அவர் எவ்வளவு பெரியவராயிருந்தாலும் நமஸ்காரம் செய்வதை விட்டு விட்டார்கள். "இந்த மூர்க்கர்களுக்கு நாம் ஏன் நமஸ்காரம் செய்ய வேண்டும்?" என்று நமஸ்காரி கட்சித் தலைவர்கள் தீர்மானித்தார்கள்.

"இனிமேல் வணங்காக் கலையைச் சேர்ந்த ஒருவர் எவ்வளவு பெரிய கிழவரானாலும் சரி, அவரைச் சந்தித்தால் யாரும் அவரை வணங்க வேண்டியதில்லை" என்று கண்டிப்பாகத் தம் கட்சியில் கட்டுப்பாடு செய்து விட்டார்கள். எந்தக் குற்றத்துக்காக ஒருவரைத் தீவிரமாக எதிர்க்கிறோமோ, அந்தக் குற்றம் அந்த எதிர்ப்பினாலேயே நம்மைப் பற்றிக் கொள்ளுகிறது!

வணங்காக் கலையாருக்குக் கோபம், ஆனால் இதை ஆட்சேபிக்க அவர்களுக்கு இடமில்லாமல் போயிற்று. யாருக்குமே நமஸ்காரம் செய்யாதவர்கள் இதை எப்படி ஆட்சேபிக்க முடியும்? ஆனபடியால் நமஸ்காரிகளின் தீர்மானம் நன்றாக நிறைவேற்றப்பட்டு வந்தது.

## கதை

கொஞ்ச காலம் கழித்துச் சில நமஸ்காரிகள் தங்கள் கட்சியினரில் சிலரைச் சந்தேகித்து வர நேரிட்டது. "இவன் வணங்காக் கலையான் வீட்டில் வெற்றிலைபாக்கு போட்டுக்கொண்டான்", அல்லது "தாகத்துக்குத் தண்ணீர் கேட்டு வாங்கித் தீர்த்துக் கொண்டான்" என்று ஒருவரை ஒருவர் குற்றம் சாட்டி அவர்களையும் வணங்காக் கலையார்களாகவே பாவித்து வந்தார்கள். அவர்களுக்கும் நமஸ்காரம் செய்வதை நிறுத்தி வந்தார்கள். சிலர், "இல்லை, நான் அப்படிச் செய்யவில்லை. மன்னிக்க வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். சிலர் எங்கள் பேரில் சாட்டும் குற்றம் தவறு என்று பிடிவாதமாக இருப்பார்கள்.

இவ்வாறு ஊரில் இரு கட்சியிலுமே ஒருவருக் கொருவர் நமஸ்காரம் செய்வது முற்றிலும் நின்று போயிற்று. பார்ப்பதற்கு அநமஸ்காரிக் கட்சியே பலமாய்ப் போனதாகக் காணப்பட்டது!

## ராஜாஜி

"இதைத்தான் நாம் கோரினது" என்று வணங்காக் கலையார் வெற்றிக் கொண்டாட்டம் நடத்தினார்கள்.

த்வேஷம் பலமாகப் போயிற்று. அநமஸ்காரக் கட்சிக்கு மிகத் திமிர் பிடித்துப் போயிற்று என்று பழைய கட்சி தம் பகிஷ்கார நியமங்களையும் கட்டுப்பாடுகளையும் முன்னைவிட மிகக் கடுமையாகச் செய்து நிறைவேற்ற ஆரம்பித்தது. வயது வந்த மகனைத் தகப்பனை சந்தேகிப்பான். தம்பி அண்ணன் பேரில் சாட்சி சொல்வான். ஊர் த்வேஷமயமாகப் போயிற்று. அதுவரையில் கதவு மூடாத வீடுகளாயிருந்த வாழைப்பாடி அக்கிரகாரம் பொலிவு இழந்து, கறுப்பு மூடிக்கொண்டது. புழக்கடையிலுள்ள தென்னை மரங்களில் காய் திருட்டுப் போக ஆரம்பித்தது. பந்தலில் காய்த்த அவரை, புடலங்காய், பாவற்காய் மாலையில் இருந்தவை, காலையில் இடீர் என்று மாயமாகப் போகும். "அணில் தின்று விட்டது" என்பாள் மனைவி. "இல்லை. பக்கத்து வீட்டு வணங்காக் கலையான் வேலை" என்பார் எஜமானர்.

"தேங்காய் திருடும் இந்தப் பயல்களுக்கு முகத்தில் திருமண் வேறு?" என்பார் வணங்காக் கலை ஐயங்கார்.

"அப்படிச் சொல்லாதீர். வீட்டில் புகுந்து கலகம் செய்து கொள்ளையடிப்பார்கள். கேட்பார் யாரும் இல்லை" என்பாள் அவர் மனைவி.

பழைய கட்சிக்காரர்கள் தம்முடைய கோபாவேசத்தை அடக்கப் பார்த்தார்கள். முடியவில்லை.

ஒருநாள் இரவு வணங்காக் கலை ராமானுஜய்யங்கார் வீடு நெருப்புப் பற்றிக் கொண்டது.

அந்த வீட்டைச் சுற்றிலும் நமஸ்காரிகள் வீடு. யாரும் உதவிசெய்யவில்லை. நெருப்பு தகதகவென்று பெருகிற்று. கொஞ்ச நேரத்தில் பக்கத்து வீடும் பற்றிக் கொண்டது.

"ஆகவேண்டும். அப்படித்தான் ஆக வேண்டும்" என்றான் வணங்காக் கலை வீட்டுச் சிமாட்டி, தெருவில் நின்று கொண்டு.

பத்து வீடுகள் வெந்து சாம்பலாயின. பிறகு எப்படியோ நெருப்பு ஒருவாறு தணிந்து விட்டது.

அடுத்த ஆண்டு ஒருநல்ல மழை பெய்து வயல்கள் எல்லாம் நன்றாக விளைந்தன. குடியானவர்கள் பேசிக் கொண்டார்கள்.

"இந்த ஐயன்மார்கள் ஏன் இப்படிச் சண்டையிட்டுக் கொள்ளுகிறார்கள்?" என்றான் ஒருவன்.

"அவர்கள் ஏதோ சாஸ்திரங்களைப் பற்றிப் பேதங்கொண்டிருப்பார்கள். நமக்கு என்ன அதைப்பற்றி!" என்றான் இன்னொருவன்.



# அபலை அஞ்சுகம்

## 19. நினைவில் எழுந்த முகம்

அன்று மாலை நிர்மலா பார்வதியம்மாளை வண்டியில் ஏற்றிவிட்டு, அவளைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு போகும்படி சொக்கனுக்குப் பலதடவைகள் எச்சரிக்கை செய்து அனுப்பினாள். சொக்கனுக்கும் வண்டி ஓட்டுவதில் சிறிது பழக்கம் இருந்ததால் அந்தக் கிராமத்து மண் ரஸ்தாவில் ஆடம்பரமாகவும் உல்லாசமாகவும் அந்தப் பெட்டி வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு சென்றான்.

வெய்யில் தணியும் நேரத்துக்கு அந்த வண்டி எலிக் கோட்டையை அடைந்தது. அந்த மாலை வேளையில் அமைதி நிலவிய அந்த இடம் மனத்துக்கு மிகவும் உல்லாசத்தைக் கொடுக்கக் கூடியதாகத்தான் இருந்தது. சொக்கன் ஆற்றங்கரைக்குச் சமீபமாக இருக்கும் பெரிய தோப்பில் வண்டியை நிறுத்தினான். பார்வதியம்மாளின் கையைப் பிடித்துக் கொண்டு மெதுவாக வண்டியிலிருந்து கீழே இறக்கி விட்டான். அவள் ஓர் மரத்தடியில் சென்று உட்கார்ந்தாள். அவன் வண்டியில் கட்டப்பட்டிருந்த மாடுகளை அவிழ்த்து ஒரு மரத்தில் கட்டி விட்டுப் பார்வதியம்மாளுக்குப் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

பார்வதி அவனைப் பார்த்து, ''விஜயா! அதோ பார்! அந்தக் கட்டடங்களையெல்லாம் பார்த்தாயா? இந்த எலிக் கோட்டையைப் பற்றிய கதை உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''ஏதோ கொஞ்சம் கேள்விப்பட்டிருக்கிறேன். இங்கே எலிகள் அதிகம்



போலிருக்கிறது. ஒரு காலத்தில் இந்த இடத்தை எலிகளே அரசாட்சி புரிந்து வந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்!'' என்றான் அவன், பெயருக்கு ஏற்றாற் போல் அந்தக் கோட்டையின் கதை அப்படித்தான் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தில்.

பார்வதிக்கு அவனுடைய வார்த்தைகள் ஆச்சரியத்தை அளித்ததோடு மிகுந்த துக்கத்தையும் அளித்தன. அவள் சிறிது ஆத்திரத்தோடும் பச்சாத்தாபத்தோடும், ''விஜயா! இப்படி இருப்பாயா? உனக்கு இந்தக் கோட்டையின் பூர்வீக சரித்திரம் தெரிந்திருக்கும் என்றுதான் நினைத்தேன். தன் குலப் பெருமையை உணராத வாலிபன் உலகத்தில் எதற்குப் பிரயோசனம்? இந்த எலிக்கோட்டையைப் பற்றிய கதையை நம்முடைய குடும்பத்தில் பிறந்த யாரும் அறிந்து கொள்ளாமல்



இருக்க முடியாதே? சாதாரண கிராம வாசியைக் கேட்டால்கூட நேற்று நடந்தது போலச் சொல்வார்களே. நாட்டுப்புறத்திலுள்ளவர்களெல்லாம் அந்தக் கதையைப் பாட்டாகப் பாடிக் காட்டுவார்களே? சில வருடங்கள் எங்கோ போய் விட்டுத் திரும்பியதால் தன்னுடைய பூர்விகவரலாறுகள் மறந்துபோய் விடுமா? வெட்கக் கேடு. உன் தாயார் நீ சிறு குழந்தையாய் இருக்கும்போது குறைந்தது ஆயிரம் தடவைகளாவது உனக்கு இந்தக் கதையைச் சொல்லி இருப்பாளே! பாவம், நம்முடைய பெருமையெல்லாம் எலிகளுக்குத்தானு போய்ச் சேரவேண்டும்?'' என்றாள்.

சொக்கன் பரபரவென்று விழித்தான். பாவம்! உள்ளபடியே அவன் விஜயரங்கனாக இருந்தாலல்லவா அந்தக் குடும்பத்தின் பெருமையெல்லாம் அவனுக்குத் தெரியப் போகிறது? அவன் விஜயரங்கனாக வேஷம் போட்ட நாளில் இருந்து இதுவரையில் இப்படிப்பட்ட நெருக்கடியான கட்டம் ஏற்பட்டதே இல்லை. ஏதோ ஒரு விதமாகச் சமாளித்துக் கொண்டு வந்து விட்டான். இப்பொழுது ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டுவிட்டது. இதிலிருந்து எப்படிச் சமாளிப்பது என்று யோசித்தான். ''வெட்கப்பட வேண்டியது தான், பெரியம்மா! தெரியாத்தனமாகச் சொந்த ஊரையும் வீட்டையும் விட்டு எங்கெங்கோ சுற்றி அலைந்து நம்முடைய பூர்வீக நிலையையே மறந்துவிடக் கூடிய நிலைக்கு வந்து விட்டேன். பெரியம்மா! இப்பொழுது அந்தக் கதையை எல்லாம் கேட்க வேண்டுமென்று என் மனம் துடிக்கிறது'' என்றான் அவன்.

பார்வதியம்மாள் அவனிடம் இரக்கமும் பச்சாத்தாபமும் கொண்டவள் போல், ''ஐயோ, பாவம்! எப்படிப் பட்ட குலத்தில் பிறந்த நீ இப்படியாகி விட்டதுதான் வருத்தம். ஒரு காலத்தில் இந்த இடம் உன்னுடைய பாட்டனாரின் ஆட்சியில் இருந்தது. வெள்ளைக்காரர்கள் இந்த நாட்டுக்கு வந்த காலத்தில் அவர் இந்த இடத்தை இழக்கும்படியாக நேர்ந்தது. விஜய கோட்டை என்றிருந்த இந்த இடம் உன் பாட்டனாரின் ஆட்சிக்குப் பின் மனித சஞ்சாரமற்ற இடமாகி விட்டதால் இதற்கு எலிக்கோட்டை என்று பெயர் வைத்து விட்டார்கள். உன் பாட்டனார் விஜய மார்த்தாண்ட துரை உண்மையான வீரர் பரம்பரையில் வந்தவர். வெள்ளைக்காரர் இந்த நாட்டில் என்று காலடி எடுத்து வைத்தார்களோ அன்றிலிருந்து அவர்களுக்குப் பரம வைரிய

கவே உன் பாட்டனார் இருந்தார். வெள்ளைத் தோலுடன் யாரைக் கண்டாலும் வீரர்கள் அவர்களைப் பிடித்து விஜயகோட்டைச் சிறையில் அடைத்து விடுவார்களாம். அவர்கள் வெள்ளைக்காரர்களா, இல்லையா என்ற விசாரணையெல்லாம் அப்புறம்தானும். இப்படிப்பட்ட ஒரு எதிரியை வெள்ளைக்காரர்கள் வைத்திருப்பார்களா? திடீரென்று பீரங்கிப் படையுடன் வந்து இக்கோட்டையைத் தாக்க ஆரம்பித்தனர். உன்னுடைய பாட்டனார் அவர்களுக்குப் பணியாமல் வீரப் போர் நிகழ்த்திக் காலமானார். ஆயிரக் கணக்கான வெள்ளைக்காரர்களைக் கொன்று குவித்தார். இந்த இடம் மனித சஞ்சார மற்றுப் பாழடைந்தது. அன்றிலிருந்து இந்த இடம் வெள்ளைக்காரர் வசமாகி விட்டது. அதனால் என்ன புண்ணியம்? அவர்களின் முக்கியமான எதிரியைக் கொன்று விட்டோம் என்ற திருப்தியோடு போய் விட்டார்கள். அழகான சிறு நகரம் போலிருந்த இந்த இடம் இந்தக் கதிக்கு வந்திருக்கிறது. இதன் லக்ஷ்மீகரம் போய் விட்டது. எந்தக் கோழையோ பயித்தியக்காரனோ வீர சிங்கங்கள் வாழ்ந்த இந்த இடத்துக்கு எலிக் கோட்டை என்ற பெயரை வெட்கமில்லாமல் சூட்டி விட்டான். நம்முடைய பதவியும் செல்வமும் அழிந்தாலும் நம்முடைய பெருமையை அழிக்க முடியாது. இப்போது நமக்குள்ள செல்வம் போதுமானது. இதை வைத்துக் கொண்டு நம்முடைய பெருமையைக் காப்பாற்றும் வண்ணம் நீ வாழ்வாய் என்று நம்பித்தானே உன் மீது அளவற்ற அபிமானம் நான் வைத்துள்ளேன்!'' என்றாள்.



பார்வதி அம்மாளிடமிருந்து ஓரளவு அவர்கள் குடும்பக் கதையைக் கேட்டுத் தெரிந்து கொண்டபின் ஏதோ இயற்கையாக வீர உணர்ச்சி ஏற்பட்டவன் போல் சொக்கன் துள்ளிக் குதித்துத் துடித்து நடிக்கலானான். நெடுநாட்களாகச் சினிமாவில் நடிக்கத் தன்னைத் தயார் செய்து கொண்டிருந்த அவனுக்கா இது பிரமாதம்? இந்த மாதிரி நடிப்புக்கு அவன் ஒரு சந்தர்ப்பமல்லவா எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஆஹா! நான் கொஞ்சம் குலப் பெருமையை எல்லாம் மறந்திருந்தேன், பெரியம்மா. உங்கள் வாய்மொழியாக இதையெல்லாம் கேட்ட பிறகு என் வீர ரத்தம் எப்படிக் கொதிக்கிறது தெரியுமா? நம்முடைய மரபிலே சோர்வடைந்த சமயத்திலெல்லாம் ஆண் பிள்ளைகளைத் தட்டி எழுப்பி வீரம் செறிந்தவர்களாக்கியவர்கள் பெண் திலகங்களே! பெரியம்மா! நீங்கள் என்ன சாதாரணமா? வீரர் குலத்து உதித்த வீராங்கனையல்லவா? குல கௌரவத்தை மறந்திருந்த என் மன விளக்கை ஏற்றி வைத்த உங்கள் பெருமையே பெருமை. இனி நான் தாங்க மாட்டேன். என் உதிரம் கொதிக்கிறது. நரம்பு துடிக்கிறது. கையில் வாளில்லையே என்று மனம் கலங்குகிறது. பெரியம்மா! இனிமேல் நான் சும்மா இருக்க மாட்டேன். இப்பொழுதே எனக்கு உத்தரவு கொடுங்கள். இந்தக் கோட்டைக் கொத்தளங்களையெல்லாம் ஒரு தடவை சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன்...'' என்று வீராவேசத்தோடு பேசினான் சொக்கன்.

சொக்கனின் பேச்சு பார்வதியம்மாளுக்குப் பேரானந்தத்தைக் கொடுத்தது. ''விஜயா! இப்பொழுதுதான் நீ உண்மையான விஜயன். 'விஜய' என்ற அடைமொழிப் பெயரே குலப் பெருமையை விளக்கத்தான் என்பதை நீ மறந்து விடாதே. நீ இப்பொழுதே போய்ப் பார்த்து விட்டு வா. அப்பொழுதுதான் நம்முடைய முன்னோர்களின் பெருமையெல்லாம் உன் மனத்தில் சரியானபடி பதியும். நான் இப்படிக்காற்றுட உலாவிக் கொண்டிருக்கிறேன். நீ போய்ப் பார்த்து விட்டுச் சீக்கிரம் வந்துவிடு'' என்று கூறினாள்.

சொக்கன் அங்கிருந்து புறப்பட்டான். பார்வதி அந்த அழகான ஆற்றங்கரை ஓரமாக இருந்த புல்தரையில் மெதுவாக நடந்து கொண்டிருந்தாள். அவள் முகத்தில் என்றுமில்லாத ஆனந்தம் சூழ்ந்திருந்தது. 'குளுகுளு' என்று வீசிய இளங்காற்றும் பசுமை நிறைந்த காட்சிகளும்தான் அவள் மனத்துக்குப் பேரானந்தத்தை அளித்தன.

நெடு நாட்களாகக் கட்டடத்துக்குள்ளேயே அடைத்துக் கிடந்த அவ

ளுக்குச் சில நிமிட நேரம் அந்த மனோரம்மியமான இடத்தில் உலாவு வது, இழந்து போன தேக பலத்தை மறுபடியும் பெற்று விட்டது போலவும், தன்னுடைய முதுமைப் பருவம் நீங்கி இளமைப் பருவம் பெற்று விட்டது போலவும்தான் இருந்தது. உல்லாசத் தோடு நடந்து கொண்டிருந்த அவ ளுக்குச் சமீபமாக யாரோ வருவது போன்ற காலடியோசை கேட்கவே கோட்டை கொத்தளங்களைப் பார்க்கச் சென்ற சொக்கன்தான் அதற்குள் திரும்பி விட்டானோ என்று அவள் நினைத்தாள். தனக்கு எதிரே, தனக்குச் சமீபமாக யாரோ நடந்து வருவது அவளுக்குத் தெரிந்தது. எதிரே வந்த உருவம் அவளுக்குச் சமீபமாக நெருங் கியபோது அந்த உருவத்தை அவள் உற்றுப் பார்த்தாள்.

அவள் எண்ணியபடி விஜயரங்கனுக அவள் நினைத்துக் கொண்டிருக்கும் சொக்கனின் உருவம் அல்ல அது. ஆனால் அவனைப் போல இன்னும் ஏதோ சிறு மாறுதலோடு தோன்றிய ஒருவன் அவளுக்குச் சமீபமாக நின்று கொண்டு அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த வாலிபனை அவள் உற்று நோக்கிய போது அவன் தலையில் ஏதோ காயம் பட்டிருந்த தற்கு அறிகுறியாகக் கட்டு போடப்பட் டிருந்தது. அந்த உருவத்தை, அந்த முகத்தை அவள் எங்கோ எப்போதோ பார்த்த மாதிரி இருந்தது. அவள் சட் டென்று அந்த வாலிபனை நெருங்கி உற்று நோக்கினாள். புதிதாக வந்த அந்த வாலிபனும் அவளைப் பார்த்ததும் ஏதோ திகைப்படைந்தவன் போல நின்றான். பார்வதியின் ஒளி மங்கிய கண்களிலும் அவள் அப்பொழுது பார்த்த அந்த முகம் தன்னோடு நெடு நாட்களாக நெருங்கிப் பழகிய முகம் போலவே தோன்றியது. ஆம்! அவ ளுக்கு நன்றாக ஞாபகம் வந்தது. அந்த முகத்தைப் பார்த்ததும் அவளுடைய வீட்டுக் கூடத்தில் மாட்டப்பட்டிருக்கும் விஜயரங்கனின் புகைப்படத்திலுள்ள முகம் அவளுடைய நினைவுக்கு வந் தது. சில நிமிஷ நேரங்களுக்கு முன் அவளை விட்டுப் பிரிந்து கோட்டை களைச் சுற்றிப் பார்த்து விட்டு வருவ தாகச் சொன்ன விஜயரங்கனின் வேஷத்திலிருந்த சொக்கனின் முகமும் அவள் நினைவில் தோன்றியது. அவனா?.. அவனுக்குத் தலையில் இப்படிக் காயம் பட்டு அதற்குள் அந்தக் காயத்துக்குக் கட்டும் கட்டப்பட்டிருக்கும் விந்தை யென்ன..? அவளுக்கு ஒன்றும் புரிய வில்லை. கண நேரம் அவள் மனம் ஏதோ பெரிய குழப்பத்துக் குள்ளாகியது. அவள் ஆர்வத்தோடும் ஆவேசத்தோடும் பாய்ந்து தன்னுடைய நடுங்கும் கரங்க ளால் அந்த வாலிபனின் முகத்தைத் தொட்டுத் தடவி, ''விஜயா!'' என்று அலறினாள். அவ்வளவு பெரிய உணர்ச் சியை அவளுடைய முதுமைப் பருவத் தினால் தாங்க முடியாத காரணத்தி னாலோ என்னவோ சட்டென்று அந்த வாலிபனின் காலடியிலேயே விழுந்து மூர்ச்சையுற்றாள்.

அப்பொழுதுதான் தனிமையில் ஆற் றங்கரைக்குச் சென்று உலாவி விட்டு வரலாம் என்று கிளம்பிய விஜயரங்க னுக்கு எதிர்பாராதவண்ணம் ஏற்பட்ட அந்த நிகழ்ச்சி பெரும் திகைப்பைக் கொடுத்தது. அவன் மனம் படபட



வென்று அடித்துக் கொண்டது. அவன் உள்ளம் குழம்பியது. ஒன்றும் புரியாதவ னாகத் தத்தளித்தான். திடீரென்று அந்தக் கிழவி அவன் காலடியிலே பிரக்ஞை தவறி விழுவாள் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்க வில்லை. பிரக்ஞையற்ற நிலையில் விழுந்த அவளுக் குச் சட்டென்று எப்படிப்பட்ட உதவி செய்வதென்றும் அவனுக்குத் தெரிய வில்லை. மனிதசஞ்சாரமற்ற இடத்தில் தனித்திருக்கும் அவனால் என்ன செய்ய முடியும்? அவனுக்கு எல்லாம் விநோத மாகத்தான் இருந்தது. அவன் மெது வாகக் குனிந்து கீழே விழுந்து கிடக்கும் அந்தக் கிழவியைத் தூக்கி நிறுத்தப் பார்த்தான். சுயநினைவற்றுக் கிடந்த அந்தக் கிழவியின் வெளிறிய முகம்



ஆதி காலத்தில் இவ்வாறு ஆரம்பித்த நாட்டியக்கலை...



... இம்மாதிரி அழகு பெற்று..



.. மீண்டும் பழைய நிலைக்குப் போய்க் கொண்டிருக்கிறது.

அவன் மனத்தில் பயத்தை உண்டாக்கியது. அவள் இறந்து விட்டாளோ என்ற சந்தேகம் அவனுக்கு உண்டாகியது. அவள் நாசியில் கை வைத்துப் பார்த்த போது மூச்சுக் காற்று இருப்பதை அறிந்து சிறிது ஆறுதலடைந்தான். அவன் 'சட்டென்று எலிக் கோட்டைக்கு ஓடிச் சென்று மீனாச்சி முதலியவர்களை அழைத்துக் கொண்டு வந்து அந்தக் கிழவியைக் காப்பாற்ற வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாமா? அல்லது அந்தக் கிழவியைத் தானே தூக்கிக் கொண்டு போய் மீனாச்சியிடம்விட்டுத் தக்க சிகிச்சை செய்யச் சொல்லலாமா?' என்று யோசித்தான். அந்தக் கிழவியைச் சுமந்து கொண்டு போகுமளவுக்கு அவன் உடலில் அப்போது போதுமான பலமில்லை. தவிர அந்த வயதான கிழவியின் நிலை தொட்டு நகர்த்தினால் கூட அவள் உயிருக்கு அபாயத்தை ஏற்படுத்தி விடுமோ என்று அவன் சந்தேகம் கொள்ளும்படியும் இருந்தது. அந்தச் சமயத்தில் அவன் சட்டென்று எலிக் கோட்டைக்கு ஓடி மீனாச்சி முதலியவர்களை உதவிக்கு அழைத்து வருவதுதான் சிறந்ததாகத் தோன்றியது. தினமும் அஞ்சுகத்தோடு ஆற்றங்கரைக்கு உலாவ வருபவன் அன்று தனிமையில் வந்தது துரதிர்ஷ்டம்தான் என்று நினைத்தான். என்றுமில்லாதபடி அன்று அஞ்சுகம் அவனோடு வராதபடி மீனாச்சி அவனுக்கு ஏதோ வேலை கொடுத்து விட்டாள்.

அவன் பார்வதியை அந்த நிலையிலேயே, அந்த இடத்திலேயே விட்டு விட்டு அதிவேகமாக எலிக் கோட்டைக்கு ஓடினான். ஆனால் எவ்வளவு நேரம்தான் அப்படியே அந்தக் கிழவி அந்த இடத்தில் பிரக்ஞையற்றுக் கிடப்பாள் என்பதை அவன் அறியவே இல்லை.

விஜயரங்கன் அந்த இடத்தை விட்டுச் சென்ற சில நிமிட நேரங்களுக்குள் கோட்டையைச் சுற்றிப் பார்க்கச் சென்ற சொக்கன் அங்கு திரும்பி வந்து விட்டான். உருவத்தில் ஒருவரை ஒருவர் ஒத்தாற் போல் இருக்கும் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்க்காமற் போனது அதிர்ஷ்டமோ துரதிர்ஷ்டமோ!

பார்வதி அங்கு பிரக்ஞையற்றுக் கிடப்பது சொக்கனுக்குத் திகைப்பையும் நடுக்கத்தையும் கொடுத்

# குழந்தையின் குதூகலம்

ஆம் குழந்தை செல்வன் குதூகலத்திற்கு கேட்பானேன்! அவன் [illegible] ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் [illegible] வருகிறார். என்ன குதூகலம்! என்ன மென்மை! அவன் இளம் சருமத்திற்கு எவ்வளவு இன்பம்!

Johnson's

## ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்

**இலவசம்** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளது. சுலபமாகப்படித்து புரிந்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி. ஓ. பாக்ஸ் 1876, டிபார்ட்மெண்ட் 30 U.
பம்பாய்



# 1956 PLYMOUTH

## *with Aerodynamic styling*

The 1956 Plymouth has the advanced FORWARD LOOK. It's a better-looking car with many new performance features.

Here are its most important features:

★ New 12-volt electrical system gives quicker, easier starting, longer spark plug life, plenty of current

★ Independent hand brake provides real emergency brake function

★ Maximum vision with new horizon windshield wrapped around top and bottom

★ Safety-rim wheels, tubeless tyres and many other features

★ New safety door latch for passenger protection

★ Redesigned sealed beam headlights extend zone of lighting on left side by 80 feet

**More Economical Performance** *The 6-cylinder engine is dependable and economical. You will like its new pep with increased horsepower.*







New High-Sweep rear fenders contribute to impression of motion and speed

*Progressively Manufactured by:*

**THE PREMIER AUTOMOBILES LTD**

KURLA, BOMBAY

Messrs SUNDARAM MOTORS PRIVATE LIMITED
MOUNT ROAD, MADRAS

Messrs T. V. SUNDARAM IYENGAR & SONS PRIVATE LIMITED
WEST VELI STREET, MADURAI

தது. வயதான அந்தக் கிழவியை மனித சஞ்சாரமற்ற அந்த இடத்தில் தனியே விட்டு விட்டுச் சென்றது மிக பிசகான காரியம் என்பதை அவன் உணர்ந்தான். அவளைப் பார்த்ததும் அவள் இறந்து விட்டாளோ என்ற பயம்தான் அவன் மனத்தில் எழுந்தது. வயதான காலத்தில் திடீரென்று மரணம் ஏற்படுவது இயல்புதானே? அந்தக் கிழவி கூடிய சீக்கிரம் இறந்து விடுவாள் என்று நிர்மலா சொல்லிக் கொண்டிருந்தாளல்லவா? சொக்கன் அதிக நேரம் அங்கு தயங்கி நிற்கவில்லை. திடீரென்று அவன் புத்தியில் ஏதோ உதயமாகியது. பார்வதி உயிரோடு தான் இருக்கிறாள் என்பதைப் பரீட்சை செய்து அறிந்து கொண்டான். சொக்கனின் பேரதிர்ஷ்டத்துக்குக் காரணமாயிருப்பவள் பார்வதிதானே! அவள் இறப்பதற்கு முன்னால் அவன் பெயரில் எல்லாச் சொத்துக்களையும் எழுதிவாங்க வேண்டும் என்றல்லவா அவனும் நிர்மலாவும் திட்டம் போட்டிருந்தார்கள்? அந்த உயில் தயாரிக்கப்படுவதற்கு முன்னால் பார்வதி இறந்துவிட்டால் பின்னால் என்ன நேருமோ? அவர்கள் போட்ட திட்டமெல்லாம் பாழாய்ப் போய்விடுமல்லவா? ஒரு வேளை அவள் உயிர் போகும் தறுவாயில் இருந்தாலும், அவள் உயிர் போவதற்கு முன் அவளை எப்படியாவது வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட வேண்டும் என்று எண்ணியவனாகச் சட்டென்று வண்டியைப் பூட்டித் தன் மூச்சைப் பிடித்துக் கொண்டு அவளைத் தூக்கி வண்டியில் கிடத்தினான். தானும் ஏறி உட்கார்ந்து கொண்டு மாடுகளை விரட்டி அதிவேகமாக மேகராஜ புரத்தை நோக்கி வண்டியை ஓட்டினான்.

சொக்கன் எவ்வளவு வேகமாக வண்டியை ஓட்டினாலும் அந்த நீண்ட பாதைக்கு ஒரு முடிவே ஏற்படாது போல்தானிருந்தது. ஏனென்றால் அப்பொழுது அவனுடைய மன நிலை அப்படி இருந்தது. வீடு போய்ச் சேரும் வரையிலாவது பார்வதியம்மாள் உயிரோடு இருக்க வேண்டுமே என்பதுதான் அவனுடைய எண்ணம். எப்படியோ வண்டி மேகராஜபுரத்தை அடைந்ததும் தான் அவன் மனத்துக்கு நிம்மதி ஏற்பட்டது. வீட்டு வாசலில் வண்டி வந்து நிற்கும் சப்தம் கேட்டதும் உள்ளே இருந்த நிர்மலா வெளியே வந்தாள். அவளுடைய பார்வை வண்டிக்குள் சென்றதும் அவள் ஏதோ தாக்குண்டவள் போல் கலவரமடைந்து நின்றாள். வண்டிக்குள் பார்வதியம்மாள் மூர்ச்சையுற்றுக் கிடப்பதையும் சொக்கன் வண்டியை விட்டுக் கீழே இறங்கி மிரள மிரள விழித்துக் கொண்டிருப்பதையும் கண்ட அவளுக்குக் கலவரம் ஏற்படாமல் என்ன செய்யும்? பயத்தினால் வெளுத்திருந்த சொக்கனின் முகத்தைப் பார்த்து விட்டு, "என்ன நடந்தது?" என்றாள் நிர்மலா பதட்டத்தோடு.

"திடீரென்று அவங்களுக்கு ஏதோ மயக்கம் வந்து விட்டது. அவங்களை எப்படியாவது வீட்டில் கொண்டு வந்து சேர்த்தால் போதுமென்றாகி விட்டது" என்றான் சொக்கன்.

நிர்மலா அவன் வார்த்தையை லட்சியம் செய்யாமல் வண்டிக்குள் இருக்கும் பார்வதியம்மாளின் உடலைத் தொட்டுப் பார்த்தாள். உண்மையாகவே பார்வதியம்மாளின் உடல்நிலை கேவலமாகி விட்டதை அவள் உணர்ந்தாள். எதிர்பாராத வகையில் அவ

## "இவ்வளவு தானா?"



## குழந்தைக் கவிஞருக்குப் பரிசு

குழந்தை இலக்கிய வளர்ச்சி கருதி மத்திய சர்க்கார் ஆண்டுதோறும் குழந்தை நூல்களுக்குப் பரிசளித்து வருகின்றனர். இந்திய மொழிகளில் வெளியாகியுள்ள இருபத்து மூன்று நூல்களுக்கு ஒவ்வொரு நூலுக்கும் 500 ரூபாய் பரிசளித்தனர். அத்துடன் ஒவ்வொரு நூலிலும் இரண்டாயிரம் பிரதிகள் மத்திய சர்க்காரே வாங்கிப் பள்ளிக்கூடங்களுக்கு அன்பளிப்பாகத் தருவார்கள்.



இந்த ஆண்டு தமிழ்ச் சிறந்த குழந்தைநூல் என "மலரும் உள்ளம்" என்ற குழந்தைக் கவிதைத் தொகுதி தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளது. குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைவரும், குழந்தை இலக்கிய வளர்ச்சி கருதிப் பதினைந்து ஆண்டுகளாக இடைவிடாமல் தொண்டாற்றி வருபவருமான குழந்தைக் கவிஞர் திரு அழ. வள்ளியப்பா இயற்றியுள்ள இந்நூலில் ஏழு பகுதிகள் உள்ளன. குழந்தைகளின் வயதைப் பொறுத்து அப்பகுதிகள் பிரிக்கப்பட்டுள்ளன. குழந்தை இலக்கியத்தில் சிறந்த இந்நூலுக்கு மத்திய சர்க்கார் பரிசளித்திருப்பது பாராட்டத்தக்கது. இதே நூலுக்கு இந்த ஆண்டு சென்னை சர்க்காரும் முதற் பரிசு வழங்கியுள்ளனர்.

ளுக்கு ஏதோ அதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. "சரி! அவளை எப்படியாவது மெதுவாக உள்ளே கொண்டு வாருங்க. அவங்க மனத்துக்கு எதிர்பாராத விதமாக ஏதோ அதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும்" என்றாள் நிர்மலா அதிகாரம் நிறைந்த தொனியில் அவனுக்குக் கட்டளை யிடுவது போல்.

சொக்கன் பார்வதியம்மாளை மெதுவாகத் தூக்கிக் கொண்டு வந்து அவளது அறையிலுள்ள கட்டிலில் கிடத்தினான். அந்தச் சமயம் பார்வதியம்மாள் தன் பாதுகாப்பில் இருந்தால்தான் மறுபடியும் பிழைக்க முடியும் என்ற கருத்துக் கொண்டவள் போல நிர்மலா அவள் படுக்கைக்குச் சமீபமாகத் தான் உட்கார்ந்து கொண்டு, "நீங்கள் வெளியே போங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று சொன்னாள். உண்மையாகவே பார்வதியம்மாள் அப்பொழுது உயிர் பிழைக்க வேண்டுமென்பதில் அவளுக்குச் சிரத்தை இருந்தது. அவ்வளவு சிரத்தை அவளுக்கு ஏற்பட்டதற்குக் காரணம் உள்ளந்தரங்கமாக ஏற்பட்ட அன்போ பாசமோ அல்ல. பார்வதியம்மாளிடம் உள்ள செல்வத்தின் மீதுள்ள பற்றுத்தான்.

அந்த அறையை விட்டு வெளியே வந்த சொக்கன் அங்கு நிர்மலா என்ன செய்யப் போகிறாள், தன்னை ஏன் வெளியே போகச் சொன்னாள் என்பதைப் பற்றிச் சிறிது கவலை கொண்டான். உள்ளபடியே அப்பொழுது அவன் மனத்தில் ஒரு பயம் எழுந்து வாட்டியது. நிர்மலா பார்வதியம்மாளை என்ன செய்வாளோ என்று அஞ்சினான். உடல் நிலை கெட்டு உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் அவளுக்கு ஏதேனும் தகாத மருந்தைக் கொடுத்து விடப் போகிறாளோ என்று அவன் பயந்து நடுநடுங்கினான்.

அரை மணி நேரம் சென்றது. நிர்மலா பார்வதியின் அறையிலிருந்து வெளியே வந்தாள். அவள் ஏதேனும் திடுக்கிடக்கூடிய செய்தியைச் சொல்லப் போகிறாளோ என்று அவளது முகத்தை உற்று நோக்கினான் சொக்கன். மிகவும் சாகசக்காரியான நிர்மலாவின் முகத்தில் எவ்வித மாறுதலான குறியும் அவன் காண முடியவில்லை.

"அவர்களுக்கு எப்படி இருக்கிறது? உயிருக்கு அபாயமில்லையே? எனக்கு என்னவோ சந்தேகம்தான். நான்..."

நிர்மலா முகத்தைத் திருப்பிக் கொண்டு அவனுக்குப் பதில் சொன்னாள்: "அவர்கள் பிழைத்து விட்டார்கள், கடவுள் கிருபையால். இப்பொழுதுதான் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டது. அதிருக்கட்டும். அங்கு என்ன நடந்தது? உண்மையைச் சொல்லுங்கள்."

சொக்கன் தயங்கித் தயங்கி தான் எவ்வளவு ஜாக்கிரதையாக வண்டியை ஓட்டிக் கொண்டு போனான் என்பதைச் சொல்லி விட்டு, "அவங்களுக்கு ஏதோ எதிர்பாராத விதமாய்த்தான் அதிர்ச்சி ஏற்பட்டிருக்கணும். அது அவர்கள் மனசைத் தாக்கி யிருக்கிறது. நான் வந்து பார்த்த போது அவங்க மயக்கமுற்றுக்கிடந்தாங்க. அப்புறம்.." என்று இழுத்தான்.

"என்ன அப்புறம்? நீங்கள் அவங்களைத் தனியே விட்டு விட்டு எங்கேயாவது போனீர்களா?" என்றாள் நிர்மலா ஆத்திரத்தோடு. (தொடரும்)



# நாங்கள் அறியோம் ...!

கருமை நிறமுள்ள ரோமம் கவலையினால் நரையாகும் ஆகாது என்பதை நாங்கள் அறியோம். ஆனால் நரை ஏற்படுவதற்குக் காரணம் எதுவாயினும், நரைத்த ரோமங்களை, லோமா நிச்சயமாக மீண்டும் கருமையடையச் செய்கிறது என்பதை நாங்கள் அறிவோம்.

TAM




உலகப் பிரசித்தி பெற்ற லோமா கேசத்திற்கு இயற்கையாகவே கருமையையும் வனப்பையும் தருபவை.

லோமா ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா அஹமதாபாத் 1

ஏஜெண்டுகள் : வி. நரோத்தம் அண்டு கோ பம்பாய் 2

ஸ்டாக்கிஸ்டுகள் :

மதராஸ் : ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ் - 1

திருவனந்தபுரம் : ராஜன் மெடிகல் ஸ்டோர்ஸ், ஹாஸ்லோர் வீடு, திருவனந்தபுரம்

கோயமுத்தூர் : எஸ். ஒட்டாஜி பிரான்ச், தபால் பெட்டி நெ. 7, கோயமுத்தூர்

சேலம் : விஜய் ஸ்டோர்ஸ், மார்க்கெட், சேலம்




முதலாவது...

நமக்குத்

தேவையாயிருப்பது

# எஃகு

இரண்டாவது ஐந்து வருஷ திட்டத்தில் இரும்பு, எஃகுத் தொழில் விஸ்தரிப்புக்கு முதல் ஸ்தானம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே மூன்று புதிய இரும்பு எஃகு தொழிற்சாலைகள் நிறுவப் படும். அவை ஒவ்வொன்றும் 10 லக்ஷம் டன்கள் எடையுள்ள வார்ப்புக் கட்டிகளை உற்பத்தி செய்யும் சக்தி வாய்ந்ததாய் இருக்கும். மேலும் ஏற்கனவேயுள்ள தொழிற்சாலைகளின் உற்பத்தி அதிகரிக்கப்படும். அதாவது 1961 வருஷத்தில் இந்தியாவின் இரும்பு-எஃகு உற்பத்தி சக்தி மூன்று பங்கிற்கு மேல் பெருகிவிடும். அதாவது தற்போதைய 13 லக்ஷம் டன் உற்பத்தி 45 லக்ஷம் டன்களாக அதிகரிக்கப்படும். இந்தியாவில் தயாரிக்கப்படும் கைத்தொழில் சம்பந்தமான இயந்திர உற்பத்தியின் மதிப்பு தற்போதையதைவிட ஐந்து அல்லது ஆறு மடங்கு பெருகி விடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த முன்னேற்றத்திற்கும் எண்ணெய்க்கும் என்ன சம்பந்தமெனில் சாமான்களைத் தயாரிப்பதற்கான மூலப்பொருள்களை ஏற்றிச் செல்ல பியுயல்ஸ், லூப்ரிகேடிங் எண்ணெயும் உதவுகின்றன. கட்டிங் மற்றும் க்வென்சிங் எண்ணெய்கள் உற்பத்தி இயந்திரங்களை இயக்க பயன்படுகின்றன. புதிய இயந்திரங்களை பராமரிக்க கிரீஸ், லூப்ரிகேடிங் எண்ணெய் மற்றும் தொழில் நுணுக்க சேவையும் தேவை. சக்கரங்களைச் சுழல மட்டுமல்ல எண்ணெய் உதவுகிறது, அச்சக்கரங்களை உற்பத்தி செய்வதற்கே அத்தியாவசியமாயிருப்பது எண்ணெய்தானே. எண்ணெய் உபயோகப்படுத்தப்படும் இடங்களிலெல்லாம் பர்மா-ஷெல் ஸ்தாபனத்தாரின் எண்ணெய்களையே காண்பீர்கள்.

பர்மா–ஷெல்...

பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது

# ரகுபதி ராகவ

[ அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது ]

52

எல்லாருமே ஒரு பராசக்தியை நம்பிப் பிழைத்து வருகிறார்கள். கடவுளைப் பற்றி நம்பிக்கை இல்லை என்று சொல்லிக் கொள்பவர்களுங் கூடத் தங்களையும் அறியாமல் கடவுளை நம்பித்தான் வருகிறார்கள்.

ஒவ்வொருவனுக்கும் தன்னம்பிக்கையுண்டு. அந்தத் தன்னம்பிக்கையை மனித வர்க்கம் முழுவதற்கும் வைத்துப் பெருக்கிக் கணக்கிட்டோமானால் அதுவே கடவுள் நம்பிக்கை யாகிறது. ஜீவராசிகள் அனைத்தும் சேர்ந்தால் அதுவே கடவுள். உயிர்கள் அனைத்துமே பராசக்தியின் அம்சம். நீர்த் துளிகள் எல்லாம் சேர்ந்து சமுத்திரமாகிறது. கடலினின்று பிரிந்து போன நீர்த்துளிகளைப் போல் உயிர்கள் சக்தியற்று நிற்கின்றன. ஆயினும் கடலுக்கும் நீர்த்துளிக்கும் உள்ள சம்பந்தம் அழிந்து போகாது. தெய்வத்தினின்று பிரிந்து நிற்கும் உயிர்களும் தெய்விக சக்தியை முற்றிலும் இழந்து விடவில்லை. நம்முடைய 'தன்னம்பிக்கை' யெல்லாம் அந்தத் தெய்விகத்தினுடைய அம்சமேயாகும். நீர்த்துளிக்கு யாரேனும் ''நீ கடலைச் சேர்ந்த பொருள்'' என்று சொல்லி ஊக்குவித்தால் அதுவும் தன் பெருமையை அறிந்து களிக்கூத்தாடும்.

[ஹரிஜன் 3—6—39]

பகவானுடைய தரிசனம் அடைவது எப்படி? நம்முடைய உள்ளத்தில் ஆண்டவன் கோயில் கொண்டிருப்பதை நிச்சய புத்தியுடன் உணர்வதே கடவுள் தரிசனம்.

தாயின் அன்பைக் குழந்தை எவ்வாறு அறிகிறது? பிறர் வந்து நிரூபித்து அறிவதில்லை; தானும் அதைப்பற்றி விமரிசனம் செய்வதில்லை. தாயின் அன்பைத் தானாகவே உணர்ந்து அனுபவிக்கிறது. தாயின் அன்பைப் பிறருக்கு எடுத்து விளக்கக் குழந்தைக்குத் தெரியாது. தாயின் அன்பு குழந்தைக்குப் பிரத்தியட்ச தரிசனம் தருகிறது. அவ்வாறே கடவுளின் உண்மையும். கடவுள் ஒரு நிருபணப் பொருள் அல்ல. அனுபவப் பொருள். துளஸிதாஸர் அனுபவித்திருக்கிறார். சைதன்ய பகவான் அனுபவித்திருக்கிறார். ராமதாஸர் அனுபவித்திருக்கிறார். இன்னும் எத்தனையோ மகான்கள் அனுபவித்து மக்களுக்கு உபதேசமும் செய்திருக்கிறார்கள். பள்ளிக்கூட ஆசிரியர்களின் பாடங்களை மாணவர்கள் ஒப்புக் கொள்வது போல் பக்தர்களுடைய அனுபவங்களையும் சமய தேசிகர்களுடைய உபதேசங்களையும் நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். ஆசாரியர்களுடைய அனுபவங்களை நாம் இல்லை என்று சொல்லலாகாது. ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அவர்கள் அடைந்த பேரானந்த அனுபவத்தை நாமும் அடைய முயல வேண்டும். [யங் இந்தியா, 9—7—25]

''உங்கள் சாஸ்திரங்களுக்குள் எது பிரமாணம்?'' என்று பாஸில் மாத்யூஸ் என்பவர் கேட்டார்.

காந்திஜி அதற்கு விடையாகத் தம் மார்பைத் தொட்டு, ''பிரமாணம் இங்கே யிருக்கிறது'' என்றார்.

கீதையுள்பட சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட எதையுமே என்னுடைய அறிவைக் கொண்டுதான் பார்க்கிறேன். என்னுடைய பகுத்தறிவுக்கு விரோதமாயிருந்தால் அதை நான் ஒப்புக் கொள்வதில்லை. சாஸ்திரமாகக் கருதப்படும் நூல்கள் தெய்விக உணர்ச்சியைப் பெற்று எழுதியவைதான். ஆயினும் அவற்றில் இருவகையான குற்றங்களுக்கு இடமுண்டு. தெய்வப் பிரசாதம் பெற்றதாயினும் ஒரு மானுடன் வழியாகத் தானே வந்துள்ளது. மேலும் அதற்கு உரை எழுதியிருப்பவர்கள் மானுடர்கள். கடவுளிடமிருந்து நேராக எந்த சாஸ்திரமும் வந்ததில்லை. ஒரே விஷயத்தை மாத்யூ ஒரு மாதிரி எழுதலாம்; ஜான் மற்றொரு மாதிரி எழுதலாம். ஆனபடியால் புனித நூல்களைச் சாஸ்திரமாக நான் ஒப்புக் கொண்டாலும் என்னுடைய பகுத்தறிவைத் துறக்க முடியாது.

எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம் ஒன்றுண்டு. சாஸ்திரங்

களின் பொருளே பிரதானம். அதுவே உயிர். சொற்களும் வாக்கியங்களும் அவற்றின் மேல்வாரியான அர்த்தமும் உண்மைப் பொருளை அழித்து விடும். "சொல்லானது கொல்லும்; பொருளானது உயிரைத் தரும்" என்று பைபிளில் காணப்படும் கொரிந்தியனருக்கு எழுதிய நிருபத்தில் பால் முனிவர் சொல்லியிருக்கிறார் அல்லவா?

"இப்படி நான் சொன்ன போதிலும் எல்லாமே பகுத்தறிவைக் கொண்டு முடிவு செய்ய வேண்டும்; பக்திக்கும் நம்பிக்கைக்கும் இடமில்லை என்று நான் சொல்லவில்லை. சில விஷயங்கள் அறிவுக்கு எட்டாதவை. கடவுள் உண்டா இல்லையா என்று முடிவு செய்வதற்குப் பகுத்தறிவுப் பிரமாணம் போதாது. அந்த விஷயத்தில் என்னுடைய நம்பிக்கையையும் பக்தியையும் வாதங்களினால் அசைக்க முடியாது. வொர்ட்ஸ்வொர்த் பாடிய செய்யுள் தெரியுமல்லவா? அதில் ஒரு சிறிய பெண் 'நாங்கள் ஏழு பேர்' என்று இறந்து போனவர்களையும் சேர்த்தே திரும்பத் திரும்பப் பிடிவாதமாகச் சொல்லுகிறாள் அல்லவா? அந்தப் பெண்ணின் பிடிவாதமே என்னுடைய பிடிவாதம். யார் என்ன வாதம் செய்து என்னைக் குழப்பப் பார்த்தாலும் கடவுளின் உண்மையை நான் கைவிட மாட்டேன். ஈசன் இருக்கிறான் என்றே சொல்லுவேன். [ஹரிஜன், 5—12—36]

புஸ்தகம் படிப்பதினின்று ஞானம் வராது. அதுவாகவே நம் உள்ளத்தில் தோன்ற வேண்டும். நூல்களைப் படிப்பது ஓரளவு உதவும். அவ்வளவே. சில சமயம் படிப்பானது ஞானம் உதயமாவதற்குத் தடையாகவும் இருக்கும். [யங் இந்தியா, 17—7—24]

திரும்பத்திரும்பச் சொல்லப்படுவதனால் அல்லது எழுதப்படுவதனால் உண்மையில்லாதது உண்மையாகி விடாது. உண்மையை யாரும் காணாததால் அது பொய்யாகி விடாது. உண்மை என்றும் உண்மையே. [யங் இந்தியா, 26—2—25]

பகுத்தறிவுக்காவது மனச்சாட்சிக்காவது விரோதமான சாஸ்திர வசனத்தை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். விவேகத்துக்கு இசைந்த சாஸ்திரப் பிரமாணங்கள் பயன்படும். விவேகத்தைப் புறக்கணிக்கும் சாஸ்திரப் பிரமாணம் பயன் தராது. நம்முடைய உள்ளத்தில் பேசும் மனச் சாட்சியின் குரலுக்கு விரோதமான சாஸ்திரப் பிரமாணங்களை நான் ஒப்புக் கொள்ள முடியாது. [யங் இந்தியா, 8—12—20]

---

## நாசரத்பேட்டையில் கவர்னர்

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பாகவே காந்திமகாத்மா ''கிராமத்துக்குப் போங்கள்; கிராம முன்னேற்றம்தான் நமது நாட்டின் முன்னேற்றம்'' என்று வற்புறுத்தி வந்தார். அதையே ஒரு இயக்கமாக நடத்தியும் வந்தார். அவர் நடத்திய இயக்கம் சுதந்திரம் பெற்ற பாரத நாட்டில் வெற்றி பெற ஆரம்பித்திருக்கிறது. கிராம முன்னேற்றத்துக்காகச் 'சமூக நலத் திட்டம்' என்று ஒரு திட்டம் வகுத்துச் சிறந்த முறையில் தொண்டாற்றி வருகிறார்கள்.

சமூக நலத் திட்டத்தின் கீழ் எத்தனையோ கிராமங்கள் முன்னேறி வருகின்றன. கூரை வீடுகள் ஓட்டு வில்லை வீடுகளாக மாறுகின்றன. ஆஸ்பத்திரிகள், சிறு கைத்தொழில்கள் பெருகுகின்றன. ஆகையால் மேலும் மேலும் சமூக நலத் திட்டத்தை விஸ்தரித்து வருகிறார்கள். செங்கற்பட்டு மாவட்டத்தில் மூன்றாவது சமூக நலத் திட்டத்தின் கீழ் ஏற்கனவே நான்கு விடுதிகள் திறந்திருக்கிறார்கள். அக்டோபர் 19உ ஐந்தாவது விடுதித் திறப்பு விழா நடைபெற்றது.

பூந்தமல்லிக்கு அருகில் உள்ள நாசரத்பேட்டை என்னும் கிராமத்தில் நடைபெற்ற இந்த ஐந்தாவது சமூக நலத் திட்ட விடுதித் திறப்பு விழாவுக்கு கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசா தலைமை வகித்துச் சிறப்பித்தார். விவசாய மந்திரி கனம் பக்தவத்சலம் வரவேற்புரை நிகழ்த்தினார். நாசரத்பேட்டையில் சமூக நலத் திட்ட விடுதி நடத்துவதற்குத் திரு சி. நா. வரதப்பன் பலவகைகளில் உதவிகள் புரிந்து வருகிறார். இந்தச் சமூக நலத் திட்டத் திறப்புவிழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம் :—

1. நாசரத்பேட்டையில் சமூக நலத் திட்ட விடுதி திறப்பதற்குமுக்கிய பொறுப்பாளரான திருமதி சரோஜினி வரதப்பன் வரவேற்புரை நிகழ்த்துகிறார். 2. கவர்னர் திறந்து வைத்த சமூக நலக் கட்டடத்துக்குள் சமூகநல சேவகிகள் செய்து வைத்திருந்த கலைமணம் கமழும் பொம்மைகள். 3-4. விழாவுக்குத் திரளாகவந்து குழுமியிருந்த பெரும் கூட்டம்.





கடிதத்தைப் படித்து முடித்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்து போனார் திருமுகம். அவருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. திரிவேணி செய்யும் காரியங்கள் யாருக்குப் புரிகின்றன?

''குழந்தை என்ன எழுதியிருக்கிறாள்? சௌக்கியம் தானே!'' என்று கேட்டுக் கொண்டே கூடத்துப் பக்கம் வந்தாள் அவர் மனைவி லோகசுந்தரி.

''என்ன எழுதி யிருப்பாள்? எல்லாம் வழக்கப்படி தான்'' என்று அலுத்துக் கொண்டார் திருமுகம்.

''வழக்கப்படி என்றால்..?''

திருமுகம், மனைவியின் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே சொன்னார். ''போன வருஷம் இங்கு வந்திருந்தபோது அவள் சிநேகிதி ஒருத்திக்குப் பண உதவி செய்ய வேண்டும் என்று சொன்னாளே, அந்தச் சிநேகிதிக்கு இந்த வருஷமும் பண உதவி செய்ய வேண்டுமாம். அதைப் பற்றித்தான் பக்கம் பக்கமாகக் கடிதத்தில் எழுதியிருக்கிறாள். பெண்ணுக்கு, அப்பன் குபேரன் என்று ஞாபகம்...''

கணவரின் பேச்சு, லோகசுந்தரிக்கு வேம்பாகத்தான் இருந்தது. குடும்பம் ஒளிவிட்டுப் பிரகாசிக்க அவர்களுக்கு இருப்பது ஒரே குழந்தை திரிவேணிதான். அவள் ஆசையாகக் கேட்கும் கோரிக்கைக்கு ஏன் கணவர் குறுக்கே நிற்க வேண்டும்? செல்வத்துக்குக் குறைவு இருந்தால் யோசனை செய்ய வேண்டியது தான். லோகசுந்தரியின் கணவர் நல்ல ஒரு சீமான். வியாபாரத்தில் நிறையப் பொருள் ஈட்டியிருக்கிறார். தர்ம காரியமாக இருக்கட்டும் என்று ஏதாவது உதவி செய்தால் அது வீணாகவா போய் விடும்?

''ஆமாம். உங்கள் பணப் பெருமையை நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். திரிவேணி சிநேகிதிக்குச் சகாயம் செய்தால் நமக்கு ஓர் ஆயிரம் ரூபாய் செலவழியுமா? அந்த ஆயிரம் செலவழிந்தால்தான் என்ன? இன்னும் இரண்டு குழந்தைகள் இருந்தால் என்ன செய்திருப்பீர்கள்? திரிவேணியின் சிநேகிதியும் நமக்குப் பிறந்த ஒரு குழந்தையென்று நினைத்துக் கொள்வோமே?'' என்றாள் லோகசுந்தரி.

''நீ இப்போது என்ன சொல்கிறாய்? இந்த வருஷமும் திரிவேணி எழுதியிருக்கிறபடி அவள் சிநேகிதிக்குப் பண ஒத்தாசை செய்ய வேண்டும் என்றுதானே சொல்கிறாய்...'' விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நோக்கத்தில் கண்டிப்பாகப் பேசிவிட்டு முகத்தைச் சுவர்ப்பக்கம் திருப்பிக்கொண்டார் திருமுகம்.

தன் வழி திரும்பிய கணவனைக் காணக் காண லோகசுந்தரிக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அவளுக்கு எப்போதுமே உதார குணம்.



திருமுகம் சம்மதம் காட்டிப் பேசி விட்டால் அது அவளுக்குப் போதாதா ?

"உங்களுக்கு மட்டும் திரிவேணியிடத்தில் பாசமில்லையா? அவள் கேட்டு எழுதியிருப்பதை நீங்கள் ஏன் மறுக்கப் போகிறீர்கள் ? இன்றே கடிதம் எழுதி விடுங்கள். பாவம் ! அவள் இதே இதி உங்கள் பதிலுக்காக ஏங்கிக் காத்துக் கொண்டிருப்பாள்..."

அந்த வருஷம் முடிவடைந்தது. திரிவேணி 'இண்டர்' பரீட்சை கொடுத்து விட்டுக் கிராமத்துக்குத் திரும்பி வந்தாள். பெண்ணைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போனாள் லோககந்தரி.

திரிவேணியின் விஜயத்தால் வீடு கோலாகலத்தில் மிதந்து கொண்டிருந்தது. இவ்வளவு நாட்கள் 'ஷெட்'டில் தூங்கிக் கொண்டிருந்த காருக்கு இப்போது நிறைய வேலை இருந்தது. மாலை வேளைகளில் ஓயாமல் கார் சவாரி திரிவேணிக்கு இருந்து கொண்டே இருந்தது.

தங்கப் பதுமை போல் கையில் மலரோடு காட்சியளிக்கும் பெண்ணைக் கண்டு லோககந்தரி பெருமையடைந்தாள் என்றாலும், அந்தப் பெண்ணைப் பற்றி ஓயாத கவலையும் அவளுக்கு இருக்கத்தான் செய்தது.

மாலை வேளைகளில் ஆற்றங்கரையோரம் காரில் சென்றுவிட்டு வீடு திரும்புவாள் திரிவேணி. கையில் கொத்து மலர்களோடு அவள் வீடு திரும்பும்போது, அந்தக் காட்சி கண்கொள்ளாததாக இருக்கும். "அம்மா! ஆற்றில் புது வெள்ளம் வந்து விட்டது; எவ்வளவு ரமணீயமாக இருந்தது தெரியுமா?" என்று கூறிக்கொண்டே திரிவேணி கண்களை மூடிக்கொண்டு, இரண்டு கைகளிலும் உள்ள வண்ண வண்ண மலர்களைத் தன் மார்போடு அணைத்துக் கொள்வாள். மொட்டாகவும், மலர்ந்தும் இருக்கும் பூக்கள் அவள் முகத்தை முத்தமிட்டு அசையும்போது முகத்துக்கும் மலர்களுக்கும் உள்ள வித்தியாசமே தெரியாது !

இப்படித் தினமும் ஏதாவது ஒன்றைச் சொல்லிக் கொண்டே இருப்பாள் திரிவேணி. இவற்றுக்கெல்லாம் லோககந்தரி என்ன பதில் கூறமுடியும் ? ஒரு நீண்ட பெருமூச்சு தான் பதிலாக வெளி வரும்.

'என்ன தொழில்? என்ன பணம்?' ஓயாமல் வியாபாரமே குறியாக இருக்கும் கணவனைக் காணக் காண லோககந்தரிக்கு வெறுப்புத்தான் மேலிட்டது.

# அன்பு வென்றது

நா. ராமச்சந்திரன்

திரிவேணியைப் பற்றி அவருக்குக் கொஞ்சங் கூட அக்கறை இல்லையே? எப்போதும் இப்படியேதான் இருந்து விடுவாரா? லோகசுந்தரி கணவனின் அருகே செல்லவே பயப்பட்டாள். அவரோ அசாத்திய முன்கோபக்காரர்.

ஒருநாள் நல்ல சமயம் கிடைத்தது. சதா வேலை வேலை என்று சுற்றித்திரியும் திருமுகத்துக்கு அன்று எப்படியோ ஓய்வு கிடைத்திருந்தது. லோகசுந்தரி அந்த ஓய்வை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டாள்.

"என்ன, இந்த வருஷமாவது முயற்சி எடுக்கப் போகிறீர்களா?" என்று திருமுகத்தின் அமைதியைக் கலைத்தாள் லோகசுந்தரி.

அவர் தம் மனைவியின் குரல் கேட்டு அவள் பக்கம் திரும்பினார்.

"திரிவேணி என்ன குழந்தை என்று நினைத்துக் கொண்டீர்களா? இருபது வயது ஆக இன்னும் இரண்டுதான் பாக்கி. இப்போது முதல் முயற்சி எடுத்தால்தானே நல்ல இடமாகக் கிடைக்கும்?"

"சரி, கவனிக்கிறேன். நம்ப ராஜாளி பிள்ளை நவநீதம் இருக்கிறானே, அவனைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?"

"ராஜாளி வீட்டுச் சம்பந்தம் நமக்கு எதற்கு? கைமேல் ராஜா இருக்கும்போது தூர இடங்களுக்கு எதற்குப் போகணும்?"

ராஜா என்ற பெயரைக் கேட்டவுடன் நல்லபாம்பு சீறுவதைப் போலச் சீறினார் திருமுகம். "லோகு! பைத்தியம் மாதிரி உளறாதே! திரிவேணியை மணம் செய்து கொள்கிறவன் உயர்ந்த படிப்பாளியாகவும், நல்ல உத்தியோகம் வகிப்பவனாகவும் இருக்க வேண்டாமா? ராஜா என்னத்தைப் படித்திருக்கிறான்? படிப்புதான் இல்லை. சொத்தாவது உண்டா? அதுவும் இல்லை. இரண்டும்தான் இல்லை என்றாலும் குடும்ப கௌரவமாவது இருக்கிறதா? தலைதூக்க முடியாத அவமானம் வேறு அவர்கள் குடும்பத்துக்கு வந்து விட்டது. இந் நிலையில் அவனுக்குப் பெண் கொடுக்க வேண்டும் என்கிறாயே..."

திருமுகத்தின் சகோதரி, கோதாவரியின் பிள்ளை ராஜா. கோதாவரி எவ்வளவோ சீரும் சிறப்புமாகத்தான் குடித்தனம் செய்து கொண்டிருந்தாள். விதி யாரைத்தான் விட்டு வைத்தது? போஸ்ட்மாஸ்டர் வேலை பார்த்து வந்த அவள் கணவர் மீது தபாலாபீஸ் பணத்தைக் கையாண்டு விட்டதாக அபாண்டம் சுமத்தப்பட்டு இரண்டு வருஷங்கள் சிறைத் தண்டனை கிடைத்தது.

கணவரின் நிலை கண்டு கோதாவரி கதறி அழுதாள். ஆபத்துக்கு உதவி செய்ய வேண்டும் என்று அண்ணன் திருமுகத்தினிடம் வந்து முறையிட்டுக் கொண்டாள். கோதாவரியின் மீளாத் துக்கத்தைக் கண்டு திருமுகத்தின் கல் நெஞ்சம் இளகவே இல்லை. 'எந்த உதவியும் என்னால் செய்ய முடியாது' என்று அவர் கண்டிப்பாகச் சொல்லி அவளை அனுப்பி விட்டார். அதன் பலனாகப் பள்ளியில் படிக்கும் பாலகனான ராஜாவை வைத்துக்கொண்டு அவள் பட்ட கஷ்டங்களைச் சொல்லி முடியாது.

இரண்டு வருடங்கள் கழித்துக் கோதாவரியின் கணவருக்கு விடுதலை கிடைத்தது. சிறையிலிருந்து வெளி வந்த அவர் வெறும் மனிதனாக வெளி வரவில்லை; ஞானியாக வெளி வந்தார். உலகத்தைப் பார்க்கவே அவர் வெட்கப் பட்டார். மனைவியையும் குழந்தையையும் பரிதவிக்க விட்ட தம் அவல நிலையைக் கண்டு மனம் வெதும்பினார். துக்கத்தின் மிகுதியில் உளுத்துப்போன அவர் இதயம் உயிரை அதிக நாள் பிடித்து வைத்திருக்கவில்லை. சிறையிலிருந்து வெளி வந்த மூன்றாம் மாதமே கோதாவரியையும் மகன் ராஜாவையும் தனியே தவிக்க விட்டு விட்டு அவர் இறைவனடி சேர்ந்து விட்டார்.

பேதைப் பெண் என்ன செய்வாள்? அண்ணனிடம் அடைக்கலம் அடைய ஓடி வந்தாள். பணமே குறி என்ற பண்பில் ஊறிய திருமுகத்துக்குத் தங்கையின் துயரம் ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. பழைய பல்லவியையே பாடி வீடு தேடி வந்த கோதாவரியைத் திருப்பி அனுப்பி விட்டார்.

லோகசுந்தரிக்குக் கோதாவரியின் மீது இரக்கம் பிறந்தது. கணவரிடம் இதமான வார்த்தைகள் பல சொல்லிப் பார்த்தாள். அவர் காதில் வாங்கிக் கொண்டால்தானே?

"ராஜாளியின் பிள்ளை நவநீதம் வந்து பார்த்துவிட்டுப் போனானே? திரிவேணி அதற்கு என்ன சொன்னாள்?" என்று கேட்டார் திருமுகம்.

"என்னை ஏன் கேட்கிறீர்கள்? அவளையே கேளுங்களேன்" என்றாள் லோகசுந்தரி.

"ஏன் ஏதாவது தகராறு?"

"பின்பு என்னவாம்? அந்தப் பிள்ளையை அவளுக்குப் பிடிக்கவில்லையாம். கல்யாணம் செய்து கொண்டால் ராஜாவைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதமாகச் சொல்கிறாள் அவள்."

திருமுகத்தின் கோபம் உச்ச நிலையை அடைந்து விட்டது. "திரிவேணி, திரிவேணி" என்று கூவிக்கொண்டே மாடியை நோக்கி ஓடினார். "திரிவேணி! உன் அம்மா சொல்வதெல்லாம் வாஸ்தவம்தானா?" என்று அதட்டிக் கேட்டார் திருமுகம்.

திரிவேணிக்கு ஒன்றும் புரியவில்லை. "எதைப்பற்றி, அப்பா?" என்றாள் அவள் திருதிருவென்று விழித்துக் கொண்டே.

"ராஜாவைப் பற்றி உனக்குத் தகவல் தெரியுமாமே? அவன் கண்ணியமாக வாழ்க்கை நடத்துகிறான் என்று நீ சொன்னாயாமே..."

"இதை நான் சொல்வானேன்? இந்தப் பத்திரிகையைப் பாருங்களேன். உங்களுக்கும் தெரிகிறது" என்று ஒரு தினசரியைத் திருமுகத்திடம் நீட்டினாள் திரிவேணி.

தினசரியைக் கையில் வாங்கிப் பிரித்தவுடன் திருமுகம் திகைத்துப் போனார். அந்தச் செய்தித் தாளின் கீழ்க்கோடி ஓரத்தில் ராஜாவின் புகைப்படம் பெரியதாக வெளியிடப்பட்டிருந்தது. அதன்கீழே, அவன் அரசாங்கத்தின் உதவியால் மேல் நாடுகள் சுற்றி வந்ததும், தற்போது அரசாங்கத்தில் வகித்துக் கொண்டிருக்கும் பெரிய உத்தியோகத்தைப் பற்றியும் ஒரு சிறு குறிப்பு எழுதப்பட்டிருந்தது. திருமுகம் திரும்பித் திரும்பி அக்குறிப்பையே வாசித்துக் கொண்டிருந்தார்.

திருமுகம் கல்லாய்ச் சமைந்து போனார். கனவு உலகத்தில் இருக்கும் பிரமையே அவருக்கு அப்போது உண்டாயிற்று. 'நினைத்து

# கால்கேட் குளோரோபில்*

# ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப் பலப்படுத்துகிறது.

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிகமிகத் தீவிரமாகவாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொருமுறையும், சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனாமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

## வேறு எந்த பற்பசையிலும் இதைவிட வீரிய குளோரோபில் இல்லை

குழந்தைகள் விரும்பும் மதுரமான சுவை. மதுரமான இனிய சுவையுள்ள கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை குழந்தைகள்கூட விரும்புவார்கள்.




**குளோரோபில் டூத்பேஸ்டின் பூரண நன்மைகளைத்தரும் விசேஷ கால்கேட் சூத்திரம்!**

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

CTPA/c/5



# தேநீர் அருந்தி காலையைப் புத்துணர்வுடன் தொடங்குங்கள்

உங்களுடைய சொந்தப் பிரச்னை எதுவாயிருந்தாலும் சரி . . . காலையை ஒருவித வெறுப்புணர்ச்சியுடன் தொடங்காதீர்கள். புத்துணர்ச்சி யளிக்கும் ஒரு கோப்பை தேநீருக்காக கையை நீட்டுங்கள். நீங்கள் என்னை அருந்தும்போது, உங்களுக்கு தெளிந்த மனப்பான்மையையும், நம்பிக்கை இருந்தால் உங்களால் வெல்லமுடியாத தனிப் பிரச்னை எதுவுமில்லை என்ற உறுதியையும் அளிக்கிறேன்.



நல்லதோர் டீ — காலை நேரப் புத்துணர்ச்சியின் சின்னம்.



என குடும்பம் தலைமுழுகி விட்டதே! ராஜா உண்மையில் அவ்வளவு கெட்டிக்காரனா?'

''என்ன யோசிக்கிறீர்கள்? இன்னொரு சேதி தெரியுமா? நம்ம இருக்கை ஜமீன்தார் இருக்கிறாரே, அவர் ராஜாவுக்குப் பெண் கொடுக்கப் போகிறாராம்...'' என்று ஒரு வெடிகுண்டைத் தூக்கிப்போட்டாள் லோகசுந்தரி.

இருக்கை ஜமீந்தார் என்றவுடன் திருமுகத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. அந்த ஜமீன்தார் திருமுகத்தை விடப் பத்துமடங்கு அதிகப் பணக்காரர். அவரே ராஜாவுக்குப் பெண் கொடுப்பதென்றால்....!

''கோதாவரி என்ன இருந்தாலும் உங்கள் தங்கை. நீங்கள் அவள் வீடுதேடிச் சென்றால், உங்களை அவள் அவமானம் செய்வாளா? அப்படி ஏதாவது அவமானம் சம்பவித்தாலும் நாம் கொஞ்சம் தலைகுனிந்துதான் போக வேண்டும். நமக்குக் காரியம்தானே பிரதானம்? நான் அப்போதே முட்டிக் கொண்டேன். கேட்டீர்களா? அந்தப் பிள்ளைக்குச் சகாயம் செய்திருந்தால் இப்போது சௌகர்யமாக இருக்குமே?'' என்றாள் லோகசுந்தரி.

திருமுகத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. 'கோதாவரியின் முகத்தில் எப்படி விழிப்பது?' இந்தப் பிரச்னைதான் அவருக்குப் பெரியதாக இருந்தது. ''லோகூ! இப்போது எந்த முகத்தை வைத்துக் கொண்டு நான் கோதாவரியிடம் போவேன்? ராஜா வெறு பிடிவாதக்காரன் ஆயிற்றே! என்னைக் கட்டாயம் அவமானப் படுத்துவானே!'' என்றார்.

இவ்வளவு நேரம் மௌனமாய் நின்று கொண்டிருந்த திரிவேணி இப்போதுதான் பேசினாள். ''அவர் ஒன்றும் அவமானம் செய்யமாட்டார், அப்பா. நீங்கள் வேண்டுமானால் போய்ப் பாருங்களேன்!'' என்றாள்.

ராஜாவின் மீதுதான் திரிவேணிக்குக் கண் இருக்கிறது என்பதை அறிந்த திருமுகத்தின் மனம் சொல்லொணாத வேதனையடைந்தது. அவள் விருப்பத்தை அவரால் பூர்த்தி செய்ய முடியவில்லையே! எவ்வளவு பணமிருந்து என்ன பயன்?

அடுத்த நாள் காலை திருமுகம் கொஞ்சமும் எதிர்பார்க்காத அதிசயம் நிகழ்ந்தது.

கோதாவரியைப்பார்க்கப்போகத் திருமுகம் ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தபோது, கோதாவரியும் அவளுடைய மகன் ராஜாவுமே அவர் வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

திருமுகத்துக்கு ஒரே ஆச்சரியம்! ''கோதாவரி, வா. இப்போதுதான் வருகிறாயா? ராஜா சௌக்கியமாக இருக்கிறானா?'' என்று அவர்களை வரவேற்றார் அவர். லோகசுந்தரி ஒரே திகைப்பில் மூழ்கி விட்டாள்.

''அண்ணா! உன்னைப்பார்க்கத்தான் வந்தேன். இருக்கை ஜமீன்தார் தம் பெண்ணை ராஜாவுக்குக் கொடுக்கிறேன் என்று தொந்தரவு செய்கிறார். ராஜாவுக்குத் திரிவேணியைக் கல்யாணம் செய்து கொள்ளத்தான் விருப்பம். அதைப்பற்றி உங்களைக் கேட்கவே வந்தேன்!'' என்றாள் கோதாவரி.

திருமுகத்துக்கும் லோகசுந்தரிக்கும் பழம் நழுவிப் பாலில் விழுவதைப் போலிருந்தது.

திருமுகத்தின் கண்களில் கண்ணீர் துளித்து விட்டது. ''ராஜா! உனக்கு உதவி செய்யாமல் போனேனே! உனக்குத்தான் என் குடும்பத்தின் மீது எவ்வளவு பற்று?'' என்று கூறினார் நாத் தழுதழுக்க.

''மாமா! நீங்களா உதவி செய்யவில்லை? உங்கள் உதவி மட்டும் இல்லாமல் போனால் நான் இந்தப் பதவிக்கு வந்திருக்க முடியுமா? நீங்கள்தான் மாமா, என் வளர்ச்சிக்கே காரணம். அந்த நன்றிக்காகத்தான் நான் இப்போது இங்கு ஓடி வந்தேன்!'' என்றான் ராஜா உணர்ச்சி பொங்க.

திருமுகம் ஒன்றும் புரியாமல் விழித்தார். ''ராஜா, நீ என்ன சொல்கிறாய்! என்னைப் பரிகாசம் செய்கிறாயா? நான் என்னப்பா உனக்கு உதவி செய்தேன்?''

''என்ன மாமா இது! இரண்டு வருஷங்கள் எனக்காகக் கல்லூரிச் சம்பளம் கட்டினீர்களே, அதைக் கூடவா மறந்து விட்டீர்கள்?''

''ஆமாம், அப்பா! நீங்கள் என் பெயருக்கு என்று பணம் அனுப்பி வந்தீர்களே, அது இவருக்குத்தான் பயன் பட்டது'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள் திரிவேணி.

திருமுகமும், லோகசுந்தரியும் வியப்புக் கடலில் ஆழ்ந்து போனார்கள். அப்பொழுது அன்பினால் வென்ற திரிவேணியின் கண்களைப் பார்க்க வேண்டுமே! தூண்டி விட்ட தீபம் போல அவை சுடர் விட்டுப் பிரகாசித்தன.

நாடக மேடை

# பிரெசிடெண்ட்

சாதாரணமாக நாடகம் பார்க்கப் போகிறவர்கள், பொழுது போக்குக்காகப் போவார்கள்; அல்லது இலவச டிக்கட் கிடைத்திருக்கிறதே என்று போவார்கள்; நண்பர்கள், நடிகர்கள் ஆகியவர்களின் நிர்ப்பந்தத்தின் மேல் போவார்கள். ஆனால் யாரும் துக்கத்தை அநுபவிப்பதற்கென்று நாடகத்துக்குப் போக மாட்டார்கள்.

ஆகையினால்தான் மனசுக்கு உற்சாகம் ஊட்டும் கதைப் போக்கையும் உல்லாஸமான காட்சிகளையும் கொண்ட நாடகங்கள்தான் மேடைக்கு வர வேண்டும் என்று பலர் அபிப்பிராயப் படுகிறார்கள்.

நவரஸங்களுக்குள் சோகரஸம் உயர்ந்தது தான். ஆனால் முற்றிலும் அந்த ரஸத்தையே அநுபவிக்க முடியாது. அதனால்தான், அந்த நாளிலிருந்தே, அரிச்சந்திர நாடகத்தில் மயான காண்டமாயிருந்தாலும், ஹாஸ்ய கட்டத்தைத் தனியாக அந் நாடகத்தின் இடை இடையே புகுத்தி வந்திருக்கிறார்கள்.



சோகம், ரௌத்ரம் முதலிய ரஸங்களை ஆதாரமாகக் கொண்ட நாடகங்களை நாம் மேடைகளில் அடிக்கடி பார்க்கலாம். ஆனால் முற்றிலும் ஹாஸ்ய உணர்ச்சியையே ஆதாரமாகக் கொண்ட நாடகம் பார்ப்பது அருமையிலும் அருமை. முன்பெல்லாம் நாடகப் பேராசிரியர் ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார் அவர்கள் எழுதிய "சபாபதி" நாடகத்தை நடிப்பார்கள். அது முற்றிலும் ஹாஸ்ய நாடகம்.

புதிதாக இயற்றப்பட்ட ஹாஸ்ய நாடகங்களைக் காண்பது அரிதாயிருக்கிறது. மனிதனை உணர்ச்சியற்ற மரமாகி விடாமல் காப்பாற்றும் சக்தி வாய்ந்தது ஹாஸ்ய ரஸம்தான்; மனிதன் மனிதனாக வாழ்வதற்கு ஹாஸ்யரஸம் இன்றியமையாதது.

மனிதப் பிறவியை உயர்வாகச் சொல்லுவதற்குக் காரணம் எந்த ஜீவராசிகளிடமும் இல்லாத அபூர்வத் திறமை ஒன்று மனிதனிடம் இருப்பதனால்தான். அது என்ன திறமை என்கிறீர்களா?

அதுதான் சிரிக்கும் திறமை. சிரிப்பு எவ்வளவு உயர்ந்தது என்பதை, திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் சிரித்துப் புரம் எரித்த கதையிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அத்தகைய சிரிப்பை நாடக மேடையில் கொண்டு வருவது இலேசான காரியமல்ல. வெறும் கோமாளித்தனமான கோணங்கிக் கூத்துக்கும், கேலிக் கூப்பாட்டுக்கும் மகாஜனங்கள் சிரித்த காலம் மலையேறி விட்டது.

நான் முன்பு ஒரு சமயம் பார்த்த நாடகத்தில் ஒரு ஹாஸ்ய நடிகர் மேடையில் தோன்றி, கரகோஷத்தை எதிர்பார்த்து, தம் மேதை முழுவதையும் செலவு செய்து ரஸிகப் பெருமக்களைச் சிரிக்க வைக்க முயன்றார். தோல்விக்கு மேல் தோல்வி ஏற்படவே, அந்த நடிகருக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. மேடையில் 'ஓ' வென்று வாய் விட்டுக் கதறி விட்டார். நாடகம் பார்க்க வந்தவர்கள் அந்த அழுகையில் என்ன ஹாஸ்யத்தைக் கண்டார்களோ தெரியவில்லை! 'பட பட' வென்று ஒரேயடியாகக் கைகொட்டி ஆரவாரம் செய்தார்கள். அதைக் கண்ட அந்த நடிகருக்கும் சிரிப்பு வந்து விட்டது!

இதிலிருந்து சிரிப்பூட்டும் கலை எவ்வளவு சிரமம் என்பதை அறிந்து கொள்ளலாம்.

சேவா ஸ்டேஜ் ஸர்விஸ் நாடகக் குழுவினர் நடிக்கும் "பிரெஸிடெண்ட் பஞ்சாக்ஷரம்" என்னும் நாடகம் 21-10-56 அன்று அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது.

நாடகக் கதை, மிகவும் நூதனமாகப் புனையப் பட்டிருக்கிறது.

ஜில்லா போர்டு பிரெஸிடெண்ட் பஞ்சாக்ஷரம் தான் நாடகத்தின் ஜீவநாடி. நாடகத்தில் அவருக்குக் காதலிக்கவோ, கஷ்டப்படவோ, கண்ணீர் உகுக்கவோ சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஆனால் பயத்தினால் கை, கால்கள் உதற, மேடையில் இங்குமங்கும் உலாவச் சந்தர்ப்பம் கிடைத்தது.

சுதந்திர சர்க்கார் நம் நாட்டில் ஜில்லா போர்டு, தாலூக்கா போர்டுகள் நடைபெறும் விதம் பற்றி ரகசிய விசாரணை நடத்த அதிகாரிகளை அனுப்பி விருப்பதாக டெல்லியிலிருந்து மிஸ்டர் பஞ்சாக்ஷரத்துக்கு ஒரு கடிதம் வருகிறது; பஞ்சாக்ஷரம் 'வெல வெலத்து'ப் போகிறார்; ஜில்லா போர்டு அதிகாரிகளை யெல்லாம் அழைத்து மந்திராலோசனை நடத்துகிறார்; யார் அந்த ரகசிய அதிகாரி என்று துப்புக் கண்டு பிடிக்க முயல்கிறார்: கடைசியில் சிகாமணி என்ற ஒரு இளைஞன், பஞ்சாக்ஷரத்தின் கண்ணில் தென்படுகிறான். திக்கற்ற சிகாமணிக்கும் அவன் காரியதரிசிக்கும் அதிலிருந்து அமோகமாக அதிர்ஷ்டம் அடிக்கிறது. என்னத்துக்காகத் தனக்கு இத்தனை உபசாரணைகள் நடக்கின்றன என்று அவனுக்குப் புரியா விட்டாலும், சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், ரகஸிய அதிகாரியைப் போலவே நடிக்கிறான். அவனுடைய அதிர்ஷ்டம், பவழக் கடல் ரயில்வே ஸ்டேஷனிலே ஆரம்பமாகி விடுகிறது; அங்கே மிஸ்டர் பஞ்சாக்ஷரத்தின் புதல்வி மேகலையைச் சந்திக்கிறான். கண்டதும் காதல் பிறந்து விடுகிறது. வேலையற்று ஊர் ஊராகத் திரிந்த சிகாமணி கடைசியில் மேகலையின் கரம் பற்றுகிறான்.

தலைப்பாகையுடன் சகஸ்ரநாமத்தைப் பிரெஸிடெண்ட் பஞ்சாக்ஷரமாக மேடையில் கண்டதும், 'இந்த நாடகத்தில் இவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பாகம் ஸ்வாரஸ்யப்படாது போலிருக்கிறதே!' என்று நினைத்தேன். ஆனால் அந்த நினைப்பை உடனே மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. ரகசிய அதிகாரி டில்லியிலிருந்து வரப் போகிறார் என்று கடிதம் வந்ததும், ஜில்லா போர்டு பிரெஸிடெண்டின் பரபரப்பையும், உதறலையும் கண்டு சகஸ்ர

# பஞ்சாக்ஷரம்

காந்தன்

நாமத்தின் நடிப்புத் திறமையை வியந்தேன். அதிகாரி வந்து விசாரணையை நடத்தினால் என்ன ஆகுமோ என்ற வேதனையை அவர் முகபாவம் தத்ரூபமாக எடுத்துக் காட்டியது.

ஜில்லா போர்டு அதிகாரிகளுடன் மிஸ்டர் பஞ்சாக்ஷரம் டில்லியிலிருந்து வரப் போகும் ரகசிய அதிகாரியைப் பற்றி மந்திராலோசனை நடத்தும் காட்சி ரொம்பவும் சுவாரஸ்யமாக இருக்கிறது. கடைசி வரையில் திரு சகஸ்ர நாமம் பிகுவுடனும், குழைவுடனும் நடித்து நாடகத்துக்கு விறுவிறுப்பையூட்டியிருக்கிறார்.

அடுத்தபடியாகக் குறிப்பிட வேண்டிய நடிகர் டி. கே. பாலசந்திரன். அவர்தான் தறிதலை சிகாமணியாக நடித்தவர். பவழக் கடல் ஸ்டேஷனில் மேகலையைக் கண்டதிலிருந்தே அவர் நடிப்பில் களைகட்டி விட்டது; நாடகத்திலும் களைகட்டி விட்டது. தம் பாத்திரத்துக்கு ஏற்ப அவர் நன்றாய் நடித்தார். மேகலையைக் காதலித்தது, போலி அதிகாரியாக நடித்தது, கடைசியில் நிஜமாகவே அதிகாரியானதும் அவர் விறைத்த விறைப்பு எல்லாம் நன்றாயிருந்தன.

மேகலையின் பாகத்தை ஏற்ற மைனாவதி, சினிமா வானில் மின்னும் இளந் தாரகை. ஆகவே அவரைப் பற்றி விசேஷமாகக் கூற எதுவுமில்லை. மிகவும் கச்சிதமாக, கனகுஷியாக நடித்தார் மைனாவதி. அவர் நடிப்பையும் துள்ளல் நடையையும் கண்ட போது, நந்தவனத்தில் வளைய வரும் மைனாவின் நினைவே வந்தது.

இந்த நாடகத்தில் காட்சிக்குக் காட்சி ஹாஸ்ய ரஸம், நல்ல சாத்துக்குடிப் பழத்தின் ரஸம் போலத் ததும்புகிறது; முயற்சியில்லாமல் இயல்பாக வரும் ஹாஸ்யமாதலால் சிரிப்பும் இயல்பாகவே வருகிறது.

மேகலையின் மாமன் மகன் ரகுவாகவும் அத்தை மகன் கருவாகவும் நடிக்கும் வி. ஆர். ராஜகோபால், டி. ஆர். நடராஜன் இருவரும் காதலில் தோல்வி அடைந்தாலும் நாடகத்தின் ஹாஸ்ய ரஸத்துக்குப் பிரதம பாகஸ்தர்களாயிருக்கிறார்கள். இவர்கள் இருவரில் ரகுவாக நடிக்கும் வி. ஆர். ராஜகோபால் பிரமாதப் படுத்தி விட்டார்.

இந்த நாடகத்தை எழுதியவர் சிறந்த சிறு கதை எழுத்தாளரான ஸ்ரீ பி. எஸ். ராமையா அவர்கள். சுவை குன்றாமல் நவம் நவமான கருத்துக்களை அமைத்துச் சிறுகதை எழுதுவதில் ஸ்ரீ பி. எஸ். ராமையா ஏற்கனவே பிரசித்தி பெற்றவர். இலேசான பின்னணியை வைத்துக் கொண்டு இந் நாடகத்தை அருமையாக எழுதியிருக்கிறார். அது முதல் வெற்றி. ஹாஸ்யமாகப் புனைந்திருப்பது இரண்டாவது வெற்றி.

நாடகபாத்திரங்கள் பேசும் வசனங்களும் மிகவும் நன்றாயிருக்கின்றன; சுருக்கமாகவும் விறு விறுப்பாகவும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இந்த நாடகத்தில் இரண்டொரு பாடல்களைத் தவிரப் பாடல்களே இல்லையென்று கூறலாம். முக்கியமாக இன்னொரு விஷயம். இந் நாடகத்தின் காட்சி ஜோடனைகளுக்குக் கலாசாகரம் ராஜகோபால் அவர்கள் பொறுப்பு வகிக்கிறார். வர்ண ஓவியங்களால் திரைகளை அலங்கரிக்காமல், புது விதமாகச் சில ஒட்டு வேலைகளால் நிறம்பட அமைத்திருக்கிறார்.

"வலிமையற்ற தோளினாய் போ, போ, போ!" என்றும் "ஒளிபடைத்த கண்ணினாய் வா, வா, வா!" என்றும் மேடையின் இரு புறங்களிலும் நின்று பாடி அபிநயம் பிடித்த இரண்டு சிறுமிகளும் ரஸிகர்களின் பாராட்டுக்கு விரைவில் பாத்திரராயினர். சிகாமணியை வா, வா, என்று வரவேற்றும், ரகுவையும் கருவையும் போ, போ என்று துரத்தியும் அபிநயம் அமைந்தது நாடகம் பார்ப்பவர்களைக் குலுங்கக் குலுங்க நகைக்க வைத்தது.

மிஸ்டர் பஞ்சாக்ஷரம் வீட்டு வேலைக்காரன் நாதமுனியை அவர் மனைவி "நாதா" என்று அழைத்து அதனால் விளையும் தமாஷ்கள் கொட்டகையை அதிரச் செய்தன. நாதமுனியாக நடித்தவர் ரொம்ப நன்றாக நடித்தார். வேஷப் பொருத்தம் அவருக்குப் பிரமாதமாக இருந்தது.

நாடக நிகழ்ச்சிகளைப் பார்க்கும்போது திரையைப் பார்த்தமாதிரி உணர்ச்சி ஏற்படுகிறது. ஆங்கிலப் படங்கள் மாதிரி விறு விறு என்று ஓடும் "பிரெஸிடெண்ட் பஞ்சாக்ஷரம்" நாடகம் முடிந்த பிறகுதான் அதிக நேரம் ஆகவில்லை என்று தெரிகிறது. மூன்று மணி நேரத்தில் நல்ல சுவையுள்ள விருந்தைக் கண்ணுக்கும் கருத்துக்கும் அளிக்கும் சேவா ஸ்டேஜ் ஸர்விஸ் நாடகக் குழுவினர், மேலும் மேலும் இத்தகைய புதுநாடகங்களை அளிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.



தேவியின் கடிதம்

# நாத்தனாரின் அதிகாரம்

வசுமதி ராமசாமி

அன்புமிக்க சுஜாதா,

உன் கடிதத்தில் மிகவும் வேடிக்கையான கேள்விகளைக் கேட்டிருக்கிறாய். "மாமி, மருமகள் உறவைப் பற்றி ஏன் தொடர்ந்து எழுதவில்லை? நாத்தனார் உறவு முறையின் சாதக பாதகமெல்லாம் எழுது."—இவைகளெல்லாம் உன் கேள்விகள். நான் எழுதுவது உனக்கு ஒரு பொழுதுபோக்காக இருக்கும் என்று நினைக்கிறேன்.

ராமாயண மகா காவியத்தில் ஒரு ஆதர்சப் புதல்வனாகவும், அரசனாகவும் கணவனாகவும் ஸ்ரீராமனைச் சிருஷ்டித்திருக்கிறார்கள். லட்சிய மாமியாகக் கௌசல்யா தேவி இருக்கிறாள். ஆதர்ச மனைவியாகச் சீதை இருக்கிறாள். இணையற்ற சகோதரர்களாகப் பரதனும் லக்ஷ்மணனும் இருக்கிறார்கள். இன்னும் எவ்வளவோ. அத்தகைய மகிமை வாய்ந்த ராமாயணக் கதையில் எனக்கு ஒரு குறை உண்டு. ஸ்ரீராமனுக்கு ஒரு தங்கை, அல்லது அக்காள் இருந்து அவளையும் ஆதர்ச நாத்தியாகச் சீதைக்கு அமைத்துக் காட்டியிருந்தால், அந்த மகத்தான சித்திரம் பூரணத்துவம் பெற்றிருக்கும் என்பது என் கருத்து.

பூரி ஜகந்நாத க்ஷேத்திரத்தில் சுபத்திரை அண்ணன் வீட்டுக்கு வருகிறாள். உடனே ருக்மிணி அவளுடைய சாப்பாட்டுக்குக் கீரையை எடுத்துக் கொடுத்து விட்டுப் பிறந்தகம் போய் விட்டதாக ஸ்தலபுராணம். இது இடைச் செருகல் என்பதில் ஐயமில்லை. நாத்தனார் அண்ணி உறவைப் பற்றி மக்களுக்கு அப்படி ஒரு திடமான எண்ணம்.



ஒரு பெண்ணுக்கு மாமியாவது வேண்டியவளாக இருக்கிறாள். நாத்தி அப்படி அமைவதில்லை. அதற்குக் காரணம் சில்லறை விஷயங்கள்தான். பெண்களில் இல்லாத சமயத்தில் மாமிமருமகளிடம் அன்பாக நடந்து கொள்வது இயல்பு. ஒரு சமயம் பெண் புருஷன் வீட்டிலிருந்து வருகிறாள். அப்போது மகளிடம் அன்பு செலுத்துகிறாள். அது வரை தவறில்லை. ஆனால் மாமி, பெண் பாசத்தில் மருமகளை அந்தச் சமயம் அன்புக் குறைவாக நடத்துகிறாள். அங்கேதான் தவறு வருகிறது. இந்தத் திடீர் மாறுதல் மருமகளின் மனத்தைக் குட்டையாகக் குழப்பி விடுகிறது. சின்னப் பெண்ணானதால் மனக் கசப்பு வளருகிறது. மாமியினுடைய அன்புக் குறைவுக்கு நாத்தனார் வருகைதான் காரணமென நினைக்கத் தோன்றுமல்லவா? அந்தப் பொருமையினால் அவளும் சில குற்றங்களைச் செய்ய முற்படுகிறாள். இவைகளெல்லாம் நாளடைவில் முற்றி விடுகின்றன.

இரண்டாவது, அநேகமாக நாத்தனாரும், அண்ணியும் கிட்டத்தட்ட ஒரே வயதுடையவர்களாக இருப்பார்கள். அதனால் ஆசைகள் ஒரே தரமாக இருக்கும். ஆடை அலங்காரங்களில் போட்டி மனப்பான்மை இருக்கும். இச் சிறு காரணங்கள் அன்பான உறவு முறைமைக்குத் தடங்கலாக ஆகிவிடுகின்றன. இவைகளை யெல்லாம் குறைப்பதற்கு நம்முடைய முயற்சிதான் தேவை.

மேல் நாடுகளில் இம்மாதிரி சில்லறைத் தொந்தரவுகள் குறைவு. தன் மருமகளானாலும் மகளானாலும் குழந்தை பெற்றிருந்தால் தாய் ஒரேமாதிரி நடத்துகிறாள்! அதிகச் சிரமமின்றி இருவரையும் நர்ஸிங் ஹோமில் போய்ப் பார்த்துக் குழந்தையைக் கொஞ்சிக் குலாவி விட்டு வருகிறாள். அப்படி ஒட்டுதலின்றி வளருவதால் பிற்காலத்தில் வேறு சிக்கல்கள் வருகின்றன. அதைத் தவிர்க்க மனோதத்துவ நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். அதை விட்டுவிடுவோம்.

ஒரு தாய் மகத்தான பொறுப்பை வகிக்கிறாள். ஒரு அழகான குடும்பத்தின் வேராக இருக்கின்றாள். அந்த நிலையின் கௌரவத்தைக் காப்பாற்றுவது அவள் கையிலேயே இருக்கிறது. வருகிற பெண்ணும் தன் குடும்பத்தை விளங்க வைக்க வந்த கிருஹலக்ஷ்மி என நினைத்துக் கொண்டால் அன்பு மாறாது. அப்படி வருகிற பெண் குணவதியாக இருந்தால் கஷ்டம் குறைவாக இருக்கும்.

பெரிய பெரிய சாம்ராஜ்யமெல்லாம் தன் கொள்கையை மாற்றிக் கொள்ளுகிறது. ஏன் நாத்தனார் தன் அதிகார புத்தியை விட்டு விடக் கூடாது? தன் அண்ணியுடன் அவள் அன்புடனும் பிரியத்துடனும் பழகலாமல்லவா? அண்ணிக்கு அன்பான சகோதரியாக இருக்கத்தான் முயற்சி செய்யட்டுமே! சுஜாதா, அப்பொழுது எவ்வளவு அழகான சூழ்நிலை உண்டாகும், தெரியுமா? இப்படிக்கு,

பூமாதேவி.

# குன்றாத கவர்ச்சி கொண்ட புடவை!

**பின்னியின்** ஜார்ஜெட் புடவைகளை வீட்டிலேயே சுத்தம் செய்யலாம். உடல் கட்டை தழுவி நிற்கும் அதன் எழிலும், வசீகரிக்கும் வர்ணங்களும் ஒருபொழுதும் குன்றாது.

பின்னியின் ஜார்ஜெட் புடவையை அணிவதால், உங்கள் எழிலோங்குகிறது. உறுதியான இழை கொண்ட இந்த புடவை நெடுங்காலம் நீடித்து உழைக்கிறது.

பின்னியின் ஜார்ஜெட் புடவையை எத்தனை தடவை வீட்டிலே சுத்தம் செய்தாலும், அதன் வசீகரிக்கும் வர்ணங்கள் மங்கவோ அழியவோ செய்யாது. அதன் புத்தப்புதிய தன்மையும் ஒரு பொழுதும் மாறுவதில்லை.

அழியா அழகிற்கு பின்னியின் ஜார்ஜெட் புடவையைத் தேர்ந்தெடுங்கள்!



எல்லா அசல் பின்னி புடவைகளிலும் இந்த அடையாளம் தங்க நிறத்தில் முத்திரையிடப்பட்டிருக்கும்

# கார்த்திகை ஜோதி

○*○

கார்த்திகைக்கு வானமெல்லாம் தீபம் ஏற்றிடும்
  கைவிளக்கோ வானவெளியில் ஒளிரும் வெண்ணிலா ?
வார்த்தெடுத்த தங்கம்போல மின்னும் மின்னலும்
  வானம் ஈச னுக்களிக்கும் சோதிமாலையோ ?

சோதி யுள்ள கதிரைவீசி வானில் உதித்த
  சூரியனும் ஈசனுரின் கோயில் விளக்கோ ?
சோதிவடி வான பொருளைப் போற்ற வேண்டியே
  சொலிக்கும் மீன் விளக்குகளோ வானவெளியிலே?

இடிக்கும் இடிகள் வானக்கோயில் முரசொலிகளோ ?
  எல்லையற்ற கடலின் ஓசை வேத நாதமோ ?
வெடிக்கும்மலை*யும் காட்டுத்தீயும் வாணவெடிகளோ ?
  விண்ணும் மண்ணும் ஈசனுரைப் போற்றுகின்றவோ?

சோதிவடி வான பொருளைப் போற்ற நாளுமே
  சோதி ஏற்றி வைத்தேன் சிறிய அகல்விளக்
சோதியுள்ளே சோதிப் பொருளை நாளும் கண்
  சோதிமூர்த்தி நீ அருள வேண்டும், ஐயனே.

* எரிமலை

●*●

தம்பி சீநிவாசன்




## 11. இதுவும் கனவா?

விஜயனைக் கண்டதும் கனவில் வந்த ராஜகுமாரி ஓட்டம் பிடித்தாள் அல்லவா? அவனைத் தொடர்ந்து சென்று விஜயன் பிடித்து விட்டதும், அவள் முகத்தைக் கோபம் கொண்டவள் போல் சிணுங்கினாள். "ஊம்! நான் ஒன்றும் உன்னிடம் அகப்பட்டுக் கொள்ளவில்லை; நீதான் என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய்!" என்று கூறி விட்டு ராஜகுமாரி 'கலகல' வென்று நகைத்தாள். முத்துக்களைக் கோத்தது போல் இருந்த அந்தப் பற்கள் தான் எவ்வளவு அழகாக இருந்தன!

அவன் பரபரப்புடன் எதையோ கூற வேண்டுமென்று வாய் இறந்தான். அடுத்த கணமே அவனுக்கு விழிப்பேற்பட்டு விட்டது. அதன் முக்கிய காரணம், அவனது முதுகுப்புறத்தில் 'சுரீ' லென ஒரு கட்டெறும்பு வந்து கடித்து விட்டதுதான்.

ராஜகுமாரன் ஏமாற்றத்துடன் எழுந்து உட்கார்ந்து, கண்களைக் கசக்கியபடியே நாலாபுறங்களையும் பார்த்தான். பொழுது விடிந்து வெகு நேரம் ஆகி யிருந்தது. தலைக்கு நேரே பறவைகளெல்லாம் கூட்டம் கூட்டமாகப் பறந்து கொண்டிருந்தன.

இனி என்ன? வழக்கம் போல் கால் போன வழியே நடக்கவேண்டியதுதானே?

அவன் கொஞ்ச தூரம் நடந்து வந்தான். கனவில் கண்ட காட்சிகள் எல்லாம் அவன் கண் முன்பு தோன்றிக் கொண்டிருந்தன. அங்கிருந்த கற்பாறையின் மீது உட்கார்ந்தபடியே சிறிது நேரம் யோசனையில் ஈடுபட்டான். வெகு தூரத்துக்கப்பால், பனி பெய்வது போன்ற புழுதிப்படலம் கிளம்பிக் கொண்டிருந்தது. அவன் அத்திசையையே உன்னிப்புடன் பார்த்தான். எத்தகைய அதிசயம்! ஆட்டு மந்தைகள் போன்று ஒரு யானைக்கூட்டம் வேகத்துடன் எங்கேயோ ஓடிக் கொண்டிருந்தது. ஒரு வேளை புலி, சிங்கம் போன்ற மிருகங்கள் துரத்தித்தான் அவை அவ்வாறு ஓடுகின்றனவோ?

விஜயன் எழுந்து மீண்டும் மேற்குத் திசையை நோக்கிக் கிளம்பினான். ஏறக்குறைய அரைக் காத தூரம் வந்து விட்டான். அங்கேயும் நெருக்கமான மரங்கள் நிறைந்திருந்தன. பெரும்பாலான இடங்கள் மேடு பள்ளமின்றி, சம தரைபோலவே யிருந்தன. இவை அவனுக்குப் பெரும்

வியப்பையே அளித்தன. எதிரே தெரிந்த ஒரு பெரும் மரத்தைப் பார்த்தவாறே வந்து கொண்டிருந்தான். திடீரென்று அவனது கால்களின் கீழே ஏதோ மெல்லிய பொருள்கள் ஓடுவது போன்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டது. ஒரு இமைப் பொழுதுதான், அடுத்த கணம் அவன் மிதித்துக் கொண்டிருந்த பூமியின் பாகம் அவனைச் சரசர வென்று கீழே இழுத்துக் கொண்டு சென்றது. ஏறக்குறைய இருபதடி ஆழத்துக்குக் கீழே வந்து விட்ட அவன் மேலே வருவதற்கு வழியே யில்லை. அது யானை பிடிப்பதற்காக ஏற்படுத்தப் பட்டிருந்த வஞ்சகமான பள்ளம். பாவம்! 'வீல் வீல்' என்ற பரிதாபமான ஓலக்குரல் அவன் தொண்டையை விட்டு வெளியாயிற்று! விடியற்காலை அவன் கண்ட கனவின் நனவா இது?

அந்தப் பாதாளப் பள்ளத்தில் விழுந்த ராஜகுமாரன் வெகு நேரம் வரையில் கூச்சலிட்டு விட்டான். ஒரு வழியும் பிறக்கவில்லை. அண்ணாந்து பார்த்துப் பார்த்து அவனுக்குக் கழுத்துத்தான் வலி யெடுத்தது. அவன் மிகுந்த சோர்வுடன் கன்னத்தில் கைகளைப் புதைத்த வண்ணம் உட்கார்ந்து விட்டான்.

வெகு நாழிகைக்குப் பின், ஒரு சிறு கல் அவனது பார்வைக்கு எதிரில் விழுந்தது. அதனால், அவன் வெருண்டவாறு மேல் புறத்தைப் பார்த்தான். அங்கே ஒரு அழகான பெண்ணின் முகம் தெரிந்தது. அவள் சைகையிட்டவாறு அவனை நோக்கி ஏதோ கூறிக் கொண்டிருந்தாள்.

இதென்ன ஆச்சரியம்! இந்த நிலையில் ஒரு பெண் எங்கிருந்து தோன்றினாள்?

விஜயன் தன் கண்களைக் கசக்கியவாறு நாலைந்து முறைகளாகப் பார்த்தான். கனவில்லை, நனவுதான். ஆனால், அந்த முகமும் திடீரென்று மறைந்து விட்டது.

ராஜகுமாரனுக்குத் துயரம் நெஞ்சை அடைத்துக் கொண்டது. இப் பாதாளச் சுரங்கத்துக்குள் எத்தனை யுகங்கள் கிடக்க வேண்டுமோ? இதிலேயே கிடந்து அணு அணுவாக உள்ளம் மாய்வதைக் காட்டிலும் ஒரு புலியிடமோ, சிங்கத்தினிடமோ கணத்தில் உயிரைக் கொடுத்து விடலாமே? ஏன் கடவுள் அவனை இப்படியெல்லாம் சித்திரவதை போல் தண்டிக்க வேண்டும்?

அவன் தலை குனிந்தவாறே சிந்தனை செய்து கொண்டிருக்கையில், அவனது சமீபத்தில் ஒரு நீளமான மூங்கிற்கழி வந்து இறங்கி, தரையில் குத்திட்டபடி நின்றது. அவன் வியப்புடன் மேலே நோக்கினான். முதலில் தெரிந்த அதே பெண்ணின் முகம் சைகை காட்டி, அம் மூங்கிலின் வழியாக ஏறி வருமாறு கூறியது. அவன், விஷயத்தை ஒருவாறு புரிந்து கொண்டு விட்டான். அச் சமயம், தெய்வமே மனம் இரங்கி உதவ வந்திருப்பது போன்று அவனுக்குத் தோன்றியது. மறு கணமே, அவன் அம்மூங்கிலைக் கெட்டியாகப் பற்றிய வண்ணம், ஒவ்வொரு கணுவிலும் காலை ஊன்றி மேலே ஏறிக் கொண்டு வந்தான். ஏறக்

துரோணன்

குறைய மேல் மட்டத்தின் பக்கத்திலே வரும் போது, அவனது கால்கள் வழுக்கி விழுந்துவிடும்போலாகி விட்டன. கைகளின் வலியோ, தோள்களை விட்டே பிய்ந்து விடும் போலிருந்தன. இன்னும் ஒரு இமைப் பொழுது நேரம் தான் பாக்கி—அவன் மீண்டும் பள்ளத்தின் அடிவாரத்துக்குச் சென்றிருப்பான். ஆனால், மேலே நின்ற பெண் 'சரே'லென்று தன் கையை நீட்டி ஒரு கையால் அவனது கையையும் மற்றொரு கையால் மரத்தின் அடி வேரையும் பிடித்தவாறு அவனை வெளியே இழுத்து விட்டாள்.

சென்ற இதழ் பாலர் மலரில் வெளியான புதிருக்கு விடை

அம்பு !

அவனது உடலில் சிறிதே காயமும் ஏற்பட்டிருந்தது. அவன் அதை இலட்சியமே செய்யவில்லை. அவன் முகத்தில் வகையறியாத வெட்கம் நிறைந்திருந்தது. எங்கேயோ பார்த்த வண்ணம், தன் உடைகளில் படிந்திருந்த மண்ணைத் தட்டி விட்டுக் கொண்டான்.

அவளது வாய் அசைவதிலிருந்து, அவள் ஏதோ கேட்கிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டான். ஆனால் அவன் பதில் அளிக்காமல் வேறு புறமாகத் தன்னுடைய முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டான். (தொடரும்)

# நிலக்கரி எப்படி உண்டாகிறது?

கரி நமக்கு எங்கிருந்து கிடைக்கிறது தெரியுமா? நிலத்திலிருந்து கிடைக்கிறது. நிலத்தில் சுரங்கம் வெட்டித் தோண்டினால் அங்கே ஏராளமாகக் கரி கிடைக்கிறது. இந்தியாவில் பீகார், மத்தியப் பிரதேசம், ஹைதராபாத், பஞ்சாப், அஸ்ஸாம் முதலிய இடங்களில் கரிச் சுரங்கங்கள் ஏராளமாக இருக்கின்றன. சமீபத்தில் தமிழ் நாட்டில், சேலம் ஜில்லாவிலும் பழுப்பு நிலக்கரி இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.



சுரங்கத் தொழிலாளர்கள் நிலத்தை ஆழமாகத் தோண்டிக் கொண்டு போகும் போது, இலைகள், வேர்கள், குச்சிகள் இவற்றின் அடையாளங்களைக் கரிக்கட்டிகளின் மீது காண்கிறார்கள். அந்தக் கரிக் கட்டிகளைப் பூதக்கண்ணாடி கொண்டு பார்த்தால், அவை மரங்களின் அமைப்பு போலவே இருக்கின்றன. ஏன் தெரியுமா? இந்தக் கரிகள் ஒரு சமயம் மரங்களாயிருந்ததால்தான்

இது உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கலாம். மரங்கள் கீழே விழுந்த பிறகு அவை சின்னாபின்னமாகி மறைந்து விடுகின்றன என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? ஆனால், அப்படியில்லை. மரங்கள் எப்படிக் கரிகளாக மாறுகின்றன என்பதைப் பார்க்கலாம். விஞ்ஞானிகள் கரிச் சுரங்கங்களை நன்றாக ஆராய்ந்து பார்த்து மரங்கள் கரியாக மாறும் விந்தை எப்படி என்பதைக் கண்டு பிடித்துக் கூறியிருக்கிறார்கள்.

இருபத்தைந்து கோடி வருஷங்களுக்கு முன்னால் பூமியின் சில பாகங்கள் சதுப்பு நிலங்களாயிருந்தன. அந்தப் பிரதேசங்களில் அடர்த்தியாக வளரும் காட்டு மரங்கள் அழிந்து அந்தச் சதுப்பு நிலங்களில் விழுகின்றன. அவ்வாறு விழும் மரங்களைச் சேறும் மண்ணும் மறைத்து அழுத்தி விடுகின்றன.

பூமியில் அழுந்தி விடும் மரங்கள் பிறகு எவ்வாறு கரியாக மாறுகின்றன?

இரண்டு தீக்குச்சிகளை எடுத்து அவற்றின் தலையிலுள்ள மருந்து பாகத்தைக் கிள்ளித் தூர எறிந்துவிடு. பிறகு அக் குச்சிகளை ஒரு தட்டில் போட்டுத் தட்டை அடுப்பின் மீது வைத்துச் சூடு செய். இப்போது குச்சியிலிருந்து புகைவருவதையும் குச்சி வரவரக் கறுப்பாக மாறுவதையும் காணலாம். குச்சி முழுதும் கறுப்பான பிறகு தட்டை அடுப்பிலிருந்து எடுத்து விடு. குச்சி ஆறின பிறகு அதை எடுத்து ஒரு வெள்ளைக் காகிதத்தில் கரி என்று எழுது. ஏனெனில் இப்போது அது கரி ஆகிவிட்டதல்லவா? குச்சியிலுள்ள ஈரமும் மற்ற அம்சங்களும் மறைந்து வெறும் கரி மட்டும் மிஞ்சுகிறது.




இதே மாதிரிதான் பூமிக்கடியில் அழுத்தப்படும் மரங்களும் கரியாக மாறுகின்றன என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். பூமியின் ஆழத்தில் மிகவும் உஷ்ணமாக இருக்கும். பூமியிலுள்ள அழுத்தமும் உஷ்ணமும் சேர்ந்து அங்கே செல்லும் மரங்களைக் கரியாக மாற்றுகின்றன. மரங்கள் கரியாக மாறுவதற்குப் பலவருஷங்கள் ஆகின்றன.

# Jaifabs

# ஜெய்பேப்ஸ்

## உயர்தரமான ரேயான் ஸில்க்குகள்

ஒவ்வொரு கஜத் துணியிலும் பளபளப்பு இருக்கிறது: ஒவ்வொரு பீஸிலும் கவர்ச்சி இருக்கவே செய்கிறது. ஒவ்வொரு அங்குலத்திலும் அழகும் இருக்கிறது! ஆம், அவ்வளவும் ஜெய்பேப்ஸ் ஸில்குகளில்தான்! நவநாகரிக மோஸ்தரில் ஒரு அடி முன்னணியில் இருக்கக் கூடியவை. வீட்டிலேயே துவைக்கக் கூடியவை....நீடித்து உழைக்கக் கூடியவை....சிக்கனமானவை!

* ★ கிரேப் டி சின்
* ★ கிரேப் புரோகேட்ஸ்
* ★ ஜார்ஜெட் புரோச்
* ★ டபேட்டா கிரேப்
* ★ டபேட்டா
* ★ ஸாட்டின்
* ★ நாகரிக மோஸ்தரில் கிரேப்

**ஜெய் ஹிந்த் ஸில்க் மில்ஸ்**
ஆக்ரா ரோடு, காட்கோபார், பம்பாய்-39




# ஒரு ரேடியோ உங்களுக்கு அவைகளை அறிவிக்கின்றது

இந்நாட்களில் பல இடங்களில், பலவித திட்டங்கள் வகுக்கப் படுகின்றன—பல சம்பவங்கள் நிகழ்கின்றன. அவைகளை எல்லாம் உடனுக்குடன் அறிவதற்கு உங்களுக்கு ஒரு ரேடியோ அவசியம். ஒரு ரேடியோ இருப்பதால் அதன் மூலம் உங்களையும், உங்கள் குடும்பத்தையும் பாதிக்கும் பலவித திட்டங்கள், புதிதாக வெளிவரும் பல சாமான்களைப்பற்றி அறிய முடிகிறது.
மேலும் ஞாபகமிருக்கட்டும்—நீங்கள் மின்சார சக்தியில்லாத இடத்திலிருந்தாலும், பாட்டரி சக்தியால் இயங்கும் ரேடியோ மூலம் நீங்கள் அதே ஆனந்தத்தை அடையலாம்.

"NINE LIVES"
TRADE-MARK

இன்றே உங்கள் ரேடியோ வியாபாரியிடம் இதைப்பற்றி கேளுங்கள்

**EVEREADY**
TRADE MARK

'எவரெடி' ரேடியோ பாட்டரிகள்

நாஷனல் கார்பன் தயாரிப்புகள்

NCH 885

# கடல் கண்ட கனவு

பதினொன்றாம் அத்தியாயம்

## தூதின் விளைவு

"மந்திரநாயகம் இப்பொழுது இங்கில்லை" என்ற செய்தி அந்தப் பிரதிநிதிகளுக்குப் பெரும் வியப்பைக் கொடுத்தது அல்லவா? அதிலிருந்து மகாராணி ஒரு விஷயத்தை யூகித்துவிட்டார். இந்தப் பிரதிநிதிகளை அனுப்பும்போது வீர விக்கிரமனுக்கு மந்திரநாயகம் இந்தத் தீவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் புறப்பட்டு விட்ட விவரம் தெரியாது! மந்திரநாயகம் மிகவும் முக்கியமான பிரதானி என்றும், அவரைச் சந்தித்து அவரோடு எல்லா விவரங்களையும் பேசும்படிக்கும் வீர விக்கிரமன் இந்தப் பிரதானிகளிடம் சொல்லியனுப்பியிருக்க வேண்டும். அதனால்தான் மந்திரநாயகம் இங்கில்லை என்றதும் இந்தப் பிரதிநிதிகள் அத்தனை தூரம் வியப்பில் ஆழ்ந்தார்கள் என்று யூகித்தார் மகாராணி. எனவே அதையே ஒரு முக்கிய காரணமாக வைத்துக் கொண்டு பிரதிநிதிகளிடம் பேசி விடலாம் என்று தீர்மானித்தார். அவசரமாகத் தளபதியைக் கூப்பிட்டு அனுப்பி, அவரிடம் இரகசியமாக இந்த யோசனையைக் கூறினார்.

மறுநாட் காலை தமிழ் நாட்டுப் பிரதிநிதிகள் மீண்டும் அரசியாரைச் சந்தித்தார்கள். தெளிவையும் நம்பிக்கையையும் குரலிலே வரவழைத்துக் கொண்டு வலம்புரி அரசியார் அவர்களோடு பேசினார்:

"வேளிர்களின் பிரதிநிதியே! பாண்டியர்களின் தூதுவரே! உங்கள் இருவருடைய வரவினால் நானும் எங்கள் மந்திரச் சுற்றமும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்! எந்தச் சந்திரகுடனுடைய துரோகத்தினால் இந்தத் தீவு இந்தக் கதிக்கு வந்ததோ, அந்தச் சந்திரகுடனின் பிழைக்குத் தண்டனை கொடுக்கும் நோக்கத்தோடு நீங்கள் வந்திருக்கிறீர்கள். அது என் உள்ளத்தை ஆனந்தப் படுத்துகிறது. எந்தப் பாண்டியர்களின் படையினால் இந்தத் தீவு அழிந்ததோ, அதே பாண்டியர்களின் படை இப்பொழுது இந்தத் தீவுக்குப் புனர் வாழ்வு தருவதற்கு விரும்புகிறது. இதை எண்ணும்போது நாங்கள் பரவசம் அடைகிறோம். நீங்கள் சொன்னதிலிருந்து உங்கள் இலட்சியம் இதுதான் என்று அறிகிறேன். இந்த இலட்சியத்துக்கு நான் வேறு என்ன மறுப்புச் சொல்ல முடியும்? முழு மனத்தோடு வரவேற்க வேண்டியதுதான் என்னுடைய கடமை. ஆனால் ஒரு சிறு சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. எங்கள் இளவரசர் பேரியாழை நாடி உங்கள் தமிழ் நாட்டுக்குச் சென்றிருக்கிறார். அவர் எதிரிகளின் சூழ்ச்சியில் விழுந்துவிடக் கூடாதே என்று கருதி அவரைப் போய்ச் சந்திப்பதற்காக எங்கள் மந்திர நாயகம் இப்பொழுது உங்கள் நாட்டுக்குப் போயிருக்கிறார். முத்தரையர்களிடமிருந்து இங்கு வந்த தூதுவர்கள் தமிழ் நாட்டின் இன்றைய நிலையைப் பற்றிச் சொன்னதிலிருந்து, மந்திரநாயகத்தை அங்கே அனுப்ப வேண்டியது அவசியம் என்று எண்ணியே அனுப்பியிருக்கிறோம். எங்கள் இளவரசரோ ஏற்கனவே உங்கள் வீர விக்கிரமருக்கு நெருங்கிய நண்பராகவே இருக்கிறார் என்று அறிகிறேன். இந்த முறையில் எங்கள் மந்திர நாயகம் வீர விக்கிரமரைச் சந்திப்பார் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் நான் உங்களுக்குச் சொல்ல விரும்பும் யோசனை இதுதான். அதாவது, நீங்கள் உடனே தமிழ்





நாட்டுக்குத் திரும்பிச் சென்று நான் சொன்ன விவரங்களை மந்திரநாயகத்திடம் தெரிவித்துச் சித்திராங்க பூபதி எதிரிகளின் கையிலே சிக்கி விடாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்து விட்டால், எங்கள் இளவரசரும் யாழும் யாழுக்குரிய நங்கையும் இந்தத் தீவை நோக்கி வரும்போது உங்கள் தலைவரே அவர்களோடு இங்கு வந்து வலம்புரித் தீவின் உறவுக்கு அஸ்திவாரக் கல் நாட்டிவிடலாம். இந்தக் காரியத்தை எவ்வளவுக்கு எவ்வளவு தாமதம் இன்றி நிறைவேற்றுகிறீர்களோ, அவ்வளவுக்கு நம் அனைவருக்குமே நன்மை !''

இந்த வார்த்தைகளை நிதானத்தோடும் சாதுர்யத்தோடும் பேசினார் மகாராணி. பிரதிநிதிகளுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ஏதாவது குழப்பமான விடை கிடைத்தால், மேற்கொண்டு போர் நடவடிக்கைகள் எடுக்கலாம் என்று எண்ணிய பிரதிநிதிகள் இங்கிதமான இந்தச் சொற்களைக் கேட்டு மனம் மகிழ்ந்தார்கள். ஆனாலும் அவர்கள் உள்ளத்தில் ஒரு சிறு சந்தேகம் எழுந்தது. இப்படியே தமிழ் நாட்டுக்குத் திரும்பிச் சென்று விட்டால், உடனே முத்தரையர்கள் வந்து இந்தத் தீவை ஆக்கிரமித்துக் கொண்டு விடலாம் அல்லவா? வலம்புரி மகாராணியின் வார்த்தைகளை முழு மனத்துடன் நம்புவதற்குத் தடையில்லை. ஆனால் முத்தரையர்களை எப்படி நம்புவது?

இப்படி நினைத்ததும் பிரதிநிதிகளின் உள்ளத்தில் குழப்பம் ஏற்பட்டது. இதைக் கவனித்த மகாராணியார் பிரதிநிதிகளைப் பார்த்துக் கேட்டார் :

'' பெருமக்களே ! உங்களுடைய மனத்தில் ஏதோ குழப்பம் ஏற்படுகிறது என்பதைக் காணுகிறேன். தாராளமாகச் சொல்லுங்கள். உங்கள் மனத்தில் என் வார்த்தைகளைக் குறித்து ஏதாவது சந்தேகம் ஏற்படுகிறதா ?''

இப்படி நேருக்கு நேராகவே தைரியமாக மகாராணி கேட்கவே, பிரதிநிதிகளுக்கு விடை சொல்வது கஷ்டமாக இருந்தது. ஆனாலும் அந்தக் கஷ்டத்தைச் சமாளித்துக் கொண்டு பாண்டியர்களின் தூதுவர் பேச ஆரம்பித்தார் :



# உங்களுக்காகவே...





## லக்மி

# டால்கம் பவுடர்

அகில உலக புகழ்பெற்ற பிரஞ்சு வாசனைத் தயாரிப்பாளர் கூட்டுடன் பல ரக நவீன வாசனைப் பொருள்களை டாடா தயாரிக்கிறது.

லக்மி பிரைவேட் லிமிடெட். — டாடா ஸ்தாபனம்

பாம்பே ஹவுஸ், போர்ட், பம்பாய்-1.

"மகாராணியாரே! உங்களுடைய வார்த்தைகளிலும் உங்களுடைய சம்மதத்திலும் எங்களுக்கு எவ்விதமான சந்தேகமும் இல்லை. ஆனால் நாங்கள் இப்படியே இந்தப் படைகளோடு தமிழ் நாட்டுக்குத் திரும்பிச் சென்றுவிட்டால் உங்கள் வலம்புரித் தீவு காவல் இல்லாத படி நிற்கும். எதிரிகள் வந்து இந்தத் தீவை ஆக்கிரமித்து விட்டால் என்ன ஆகும்? இது பற்றித்தான் உள்ளம் குழம்புகிறோம்!"

பாண்டியர் பிரதிநிதி இப்படிச் சொன்னதும், வேளிர்களின் தூதுவருக்குத் தைரியம் ஏற்பட்டது. அவர் சொன்னார்:

"பேரரசியாரே! நாங்கள் எங்களோடு வல்லமை மிகுந்த ஒரு கடற்படை கொண்டு வந்திருக்கிறோம். இந்தக் கடற்படை இங்கேயே வலம்புரித் தீவுக்குக் காவலாக இருக்கட்டும். எதிரிகளின் படை இந்தத் தீவை நோக்கி வருகிற பட்சத்தில், எங்களுடைய படை அந்த எதிர்ப்பைச் சமாளிக்கும். அவசியப்பட்டால் இன்னொரு படையும் இதற்குச் சகாயமாக நாங்கள் இங்கே விரைவில் அனுப்புகிறோம். இப்பொழுது உங்களுடைய சம்மதத்தைப் பெற்று விட்டதால், எங்கள் தூது வெற்றிகரமாக முடிந்து விட்டது. இனி நாங்கள் புறப்படுகிறோம். உங்களுடைய புதல்வரையும் மந்திரநாயகத்தையும் வெகு வேகமாகச் சென்று சந்திக்க வேண்டிய கடமை எங்களுக்கு இருக்கிறது. அவர்களை நாங்கள் சந்தித்துப் பேரியாழோடு அவர்களை இங்கே அனுப்புகிற வரை எங்களுடைய இந்தக் காவற் படை வலம்புரித் தீவைச் சுற்றிக் கடலிலே காவல் புரியும்!"

மகாராணியார் இந்த ஏற்பாட்டை எதிர்பார்க்கவில்லை. என்றாலும், அவசியமும், சந்தர்ப்பமும் நேரும்போது ஆடவர்களை விடப் பெண்களுக்குச் சமயோசித புத்தி அதிகம் என்று மனத் தத்துவம் தெரிந்தவர்கள் சொல்வதுண்டு. அந்த உண்மைக்கு ஏற்ப மகாராணியின் மனத்தில் ஒரு யோசனை உதித்தது. சொன்னார்:

"அப்படியே செய்யுங்கள், பெருமக்களே! சித்திராங்க பூபதியைச் சந்தித்து இந்த விவரங்களை யெல்லாம் எடுத்துச் சொல்வதற்காக உங்களோடு நானும் ஒரு பிரதானியை அனுப்புகிறேன். அப்படியானால்தான் உங்கள் வார்த்தைகளில் எங்கள் இளவரசருக்கு எந்தவிதமான சந்தேகமும் ஏற்படாது!"

"மகாராணியாரே! அற்புதமான யோசனை! எங்கள் பொறுப்பு அந்த அளவுக்குக் குறைகிறது! வெற்றியும் அந்த அளவுக்கு நிச்சயம்!"

பாண்டியர் பிரதிநிதி கேட்டார்:

"மகாராணியாரே! அப்படியானால் உங்களுடைய தூதுவரும் எங்களுடனேயே எங்கள் மரக்கலத்திலேயே வரலாம் அல்லவா?"

"ஆகா! அதில் என்ன சந்தேகம்! இனி உங்கள் மரக்கலம் எங்கள் மரக்கலம் என்றெல்லாம் யோசிக்கலாமா? நாளைக் காலையில் உங்களோடு எங்கள் தூதுவரும் வலம்புரித் தீவிலிருந்து புறப்படுவார்!"

இவ்வாறு சொன்னார் மகாராணி. தந்திரமான யோசனைதான். வலம்புரித் தீவின் தூதன் மூலமாகவே சித்திராங்க பூபதிக்கும் மந்திரநாயகத்துக்கும் இரகசியமாக எல்லா விஷயங்களையும் தெரியப்படுத்தி விடலாம். அதற்கு இதை விடச் சிறந்த ஏற்பாடு இருக்க முடியாது. ஆனால் இதன் விளைவு தமிழ் நாட்டின் சரித்திர நிகழ்ச்சிகளையே மாற்றி விட்டது. அந்த எதிர்பாராத மாற்றம் நந்திவர்ம பல்லவனுடைய அரசாட்சியையே ஆட்டி விட்டது! அதே சமயம் உதய சந்திரனுடைய மகத்தான திறமையும் அதில்தான் பூரணமாக வெளியாயிற்று!

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# சந்திப்பு

நல்ல திறமைசாலிகளான தூதுவர்களைத் தேர்ந்தெடுத்து வலம்புரித் தீவுக்கு அனுப்பிய வீரவிக்கிரமன் அதோடு சும்மா இருந்து விடவில்லை. தனக்கு முன்பு வலம்புரித்தீவை நாடி உதயசந்திரனின் தூதுவர்கள் அல்லவா சென்றார்கள்? அந்த முதலாவது தூதுவர் என்ன முடிவோடு வலம்புரித் தீவிலிருந்து திரும்புகிறார் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகப் பல இரகசிய ஏற்பாடுகளைச் செய்திருந்தான் வீர விக்கிரமன்.

பாண்டியர்களின் பிரதிநிதியும், வேளிர் பிரதானியும் பெரிய படையோடு வலம்புரிக்குச் சென்றிருந்த போதிலும் வீரவிக்கிரமனுக்கு மனத்தில் நிம்மதியில்லை. உதய சந்திரனுடைய தூது என்ன ஆயிற்று என்பதிலேயே சிந்தனையாக இருந்தான்.

இப்படியிருந்தபோதுதான் ஒருநாள் அவனுடைய இரகசிய உளவுத் தலைவன் ஒருவன் வந்து விவரத்தைத் தெரிவித்தான். முத்தரையர்களின் குமாரியை வலம்புரி இளவரசருக்குத் திருமணம்

செய்விக்கிற யோசனையை வலம்புரி அரசி ஒப்புக்கொண்டு விட்டார் என்றும், சித்திராங்க பூபதியின் சம்மதத்தைப் பெறுவதற்காக மந்திர நாயகம் வலம்புரித் தீவிலிருந்து புறப்பட்டுத் தமிழ் நாட்டுக்கு வந்து விட்டார் என்றும் தெரிந்தது வீர விக்கிரமனுக்கு. அப்பொழுது அவன் மனம் குழம்பியது. அந்தக் குழப்பத்தோடு அவன் நேரே மதுரைக்குச் சென்றான். சென்று பாண்டியர்களின் முக்கியமான படைத் தலைவர்களோடெல்லாம் இது குறித்து ஆலோசனை செய்தான்.

பாண்டியர்கள் சொன்ன கருத்து வீர விக்கிரமனுக்கு முதலில் திகைப்பைக் கொடுத்தது. பிறகு நன்றாக ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்ததில் அந்த யோசனையைத் தவிர வேறு வழி இருப்பதாகத் தோன்றவில்லை.

பாண்டியர்கள் கூறிய யோசனை இதுதான். எதிர்பாராத விதமான இந்தச் சிக்கலுக்கு இரண்டு வழிகள் உண்டு. ஒன்று வலம்புரித் தீவைப் பற்றிய எண்ணத்தையே மறந்து விட்டு, தமிழ் நாட்டில் காஞ்சிமா நகரத்திலே கருத்தைச் செலுத்துவது. அதாவது நந்திவர்ம பல்லவனுக்கு எதிராகத் தமிழ் நாட்டுக் குறுநில மன்னர்களையெல்லாம் ஒன்று திரட்டிக் காஞ்சியின்மேல் படையெடுக்க வேண்டும். இந்த யோசனையை மேற்கொள்வதானால் வலம்புரித் தீவைப்பற்றிக் கவலையே இல்லை. அங்கே வலம்புரி அரசியின் யோசனை எதுவாயிருந்தாலும் கவலையில்லை. சித்திராங்க பூபதி யாரை மணந்தால் என்ன, அந்தத் தீவுக்குப் பெரியாழ் போய்ச் சேர்ந்தாலும் சரி, போய்ச் சேராவிட்டாலும் சரி, அதெல்லாம் அந்த நாட்டு விஷயங்கள். அவற்றைப் பற்றிப் பாண்டியர்களோ அல்லது கொடும்பாளூர் வேளிர்களோ, வீர விக்கிரமனோ மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டியதில்லை. இங்கே வந்திருக்கிற மந்திர நாயகம் பூபதியைச் சந்தித்து விட்டுப் போகட்டும். முத்தரையர்களுடைய திருமண உறவை ஒப்புக் கொண்டு, பூபதி முத்தரையர்களின் அரச குமாரியைத் திருமணம் செய்து கொண்டு வலம்புரித்தீவுக்குப் போய்ச்சேரட்டும். அதனால் தமிழ்நாட்டு அரசியல் மாறிவிடாது! இங்கே நந்திவர்மனுக்கும் சித்திரமாயனுக்கும் ஏற்பட்டுள்ள எதிர்ப்பைச் சமாளிப்பதற்கு, இந்தத் தமிழ் நாட்டிலேயே பெரும் படை திரட்டிப் போர் நடவடிக்கைகளை மேற்கொண்டு விடலாம்!

பாண்டியர்கள் தெரிவித்த முதலாவது கருத்து இதுதான். இது வீர விக்கிரமனுக்குப் பிடிக்கவில்லையென்றால், இப்பொழுதே வலம்புரித் தீவின் எதிர்காலத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட வேண்டும். அதாவது தங்களோடு உறவு கொண்டு, நந்திவர்மனுக்கு எதிராக வீர விக்கிரமனோடு உடன்படிக்கை செய்து கொள்ளுவதற்கு வலம்புரி அரசி இசையா விட்டால், வலம்புரித் தீவைத் தாக்கி அந்தத் தீவை அடிமைப்படுத்தி, பாண்டியர்களின் ஆட்சிக்குள்ளே அதைக் கொண்டு வந்துவிட வேண்டும். அப்படிக் கொண்டு வந்துவிட்டால், யுத்தம் சம்பந்தமான எல்லா இரகசிய ஏற்பாடுகளுக்கும் வலம்புரித் தீவையே இரகசியப் படைத்தளமாக உபயோகித்துக் கொள்ளலாம்.

இதுதான் பாண்டியத் தலைவர்கள் சொன்ன இரண்டாவது கருத்து. இந்த இரண்டு யோசனைகளில் வீர விக்கிரமனுக்கு எந்த யோசனை சரியாகப் படுகிறதோ, அதன்படி ஒரு முடிவுக்கு வந்து விடலாம் என்றார் பாண்டிய நாட்டின் படைத் தலைவர்.

வீர விக்கிரமன் ஆழ்ந்து சிந்தனை செய்து பார்த்தான். குங்கும மாளிகையிலே கொண்டுவைத்திருக்கும் பூபதியை மந்திரநாயகம் சந்திப்பது என்றால் அது மிகவும் கஷ்டமான காரியம். தன்



# தளதளக்கும் ஈனோ வயிற்றுக் கோளாறுகளிலிருந்து எட்டே விநாடிகளில் நிவாரணமளிக்கிறது!

அஜீர்ணம், நெஞ்செரிச்சல், அல்லது வாயுப் பொருமல் இவைகளில் எதையும் ஈனோ நிவர்த்திக்கிறது!

ஒரு கிளாஸ் தளதளக்கும் ஈனோ ப்ரூட் ஸால்ட் சாப்பிட்டால் எட்டே விநாடிகளில் வயிற்றுக் கோளாறுகள் சீராகின்றன. மிதமாக பேதி ஏற்படவிரும்பினால் வெறும் வயிற்றில் சிறிது பெரிய 'டோஸ்' ஈனோ அருந்தினால் போதும். எப்பொழுதும் உங்கள் வீட்டில் ஒரு பாட்டில் ஈனோ வைத்திருங்கள்.

## ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

அமித அமிலங்களை அடக்கும்
தளதளக்கும் பானம்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்




இப்பொழுது மோசடியைத் தடுக்கும் புதிய பாட்டிலில் விற்கப்படுகிறது

(2 சைஸ்களில் கிடைக்கும்)

னுடைய அனுமதியில்லாமல் அது நடைபெறாது. இந்த நிலையில் மந்திரநாயகம் பூபதியைச் சந்தித்து, முத்தரையர்களின் திருமண உறவுக்குச் சம்மதம் பெற்று விடுவார் என்று கவலைப்பட வேண்டிய அவசியமே யில்லை. அப்படியே சந்தேகப்படுவதற்குச் சற்று இடம் இருந்தாலும், வீர விக்கிரமன் இப்பொழுதே குங்கும மாளிகைக்குச் சென்று பூபதியைக் கண்காணாத ஓர் இடத்துக்குத் தூக்கிச் சென்றுவிடலாம். வலம்புரித் தீவின் விதியை நிர்ணயிக்கும் வரை பூபதியை மறைவான ஓர் இடத்திலேயே வைத்து விடலாம். அதில் ஒன்றும் கஷ்டமில்லை. இப்பொழுது செய்ய வேண்டிய யோசனை, வலம்புரித் தீவின் சிக்கலை அவிழ்ப்பதா அல்லது அந்தத் தீவையே மறந்துவிடுவதா என்பது! அந்தத் தீவை மறந்து விட்டு இங்கே சித்திரமாயனுக்கு உதவியாகப் படைபலம் திரட்டுவதில் மனத்தைச் செலுத்தலாம் என்றால், எந்தக் குறுநில மன்னர்களைப் போய்ச் சந்தித்து உறவு பேசினாலும் அங்கே உதயசந்திரன் ஏதாவது இடையூறு செய்ய வந்துவிடுகிறான். தமிழ் நாட்டில் உதயசந்திரனுடைய இரகசிய உளவுப் படை அத்தனை தீவிரமாக வேலை செய்கிறது! கொடும்பாளூர்க் கானகத்தில் எத்தனை கவனத்தோடும் கண்காணிப்போடும் வீர விக்கிரமன் ஓர் இரகசியக் கூட்டம் நடத்தினான்! அந்த விவரத்தைக் கூட எப்படியோ தெரிந்து கொண்டு அங்கே வந்துவிட்டானே உதயசந்திரன்! இந்த நிலையில் தமிழ் நாட்டுக்குள்ளே படை விஸ்தரிப்புச் செய்வது என்றால் அது பல தொல்லைகளுக்கு இடம் தருகிற முயற்சி! எனவே வலம்புரித் தீவை உபயோகப்படுத்துகிற யோசனையைக் கைவிடுவதற்கில்லை. தவிரவும் இலங்கையிலிருந்தும், மற்றும் கடல் கடந்த நாடுகளிலிருந்தும் பாண்டியர்களுக்கு உதவி செய்யக்கூடிய அரசியல் நண்பர்கள் பலர் உண்டு. இவர்களோடு எல்லாம் உறவு செய்து கொண்டு, ஒரு பெரிய அளவிலே படை திரட்டினால்தான் பல்லவ அரசைக் கவிழ்க்க முடியும். அவசரப்பட்டுக் காஞ்சிமா நகரத்தின் மீது படையெடுப்பதில் பயன் இல்லை.

இவ்வாறெல்லாம் பலமாக யோசனை செய்தான் வீர விக்கிரமன். ஒரு பகலும் ஓர் இரவும் சிந்தனை செய்தான். கடைசியில் பாண்டியர்களிடம் தனது முடிவைத் தெரிவித்தான்.

"வலம்புரித்தீவை மறந்து விடுகிற யோசனை எனக்கு அவ்வளவு தூரம் சரியாகப் படவில்லை. சித்திரமாயனுக்கும்



பல்லவனுக்கும் ஏற்பட்டு விட்ட பகையானது, எளிதில் தீர்ந்து விடுகிற பகையில்லை. தொடர்ந்து இந்தப் பகை பல வடிவங்களில் பல போர்களாக மூளும். எதிர்காலத்தில் நந்திவர்மனுடைய ஆட்சி ஒரே யுத்தமயமான ஆட்சியாகவே இருந்தது என்று நம்முடைய பின் சந்ததியார்கள் சொல்லப் போகிறார்கள். அந்த அளவுக்கு இந்தப் பகை நெருப்பாக மூள இடமுண்டு. இன்று நாம் நந்திவர்மனைப் படையெடுத்துச் சென்று முறியடித்து விட்டாலுங்கூட, பிறகு உதயசந்திரன் சும்மா இருந்து விடுவான் என்று சொல்ல முடியாது. அரசியல் சாமர்த்தியம் மிகுந்த அந்தத் தந்திரசாலி, மறுபடியும் பதுங்கியிருந்து மீண்டும் நம்மை முறியடிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வான். ஆகையால் நாம் வலம்புரித்தீவை மறந்துவிட்டால், நிச்சயம் உதயசந்திரன் அந்தத் தீவோடு உறவு செய்து கொண்டு, அதையே தன்னுடைய இரகசியப் படைத் தளமாக உபயோகிப்பான். கடல் கடந்த நாடுகளுக்கு ஒரு மையமான இடம் வலம்புரித்தீவு. படையெடுப்பு என்று ஏற்பட்டு விட்டால், அந்தத் தீவுக்கு எத்தனையோ முக்கியம் உண்டாகி விடும். அத்தனை முக்கியம்

வாய்ந்த தீவை நாம் உதய சந்திரனின் கையில் விட்டு விட்டால், நமக்கு எதிராகக் கடல் கடந்த நாடுகளையெல்லாம் நண்பர்களாக்கிக் கொண்டு நம் மீது அபாரமான வேகத்தோடு பாய்ந்து வருவதற்கு இரகசிய வேலைகள் செய்து விடுவான், அந்தப் பொல்லாத உதய சந்திரன்! எனவே, வலம்புரித் தீவை எப்படியும் நமது ஆட்சிக்குக் கீழ்க் கொண்டு வரவேண்டியதுதான் இப்பொழுது உடனே செய்யவேண்டிய காரியம். அது முடிகிறவரை நந்திவர்மனைக் கூடச் சற்று மறந்து விடலாம். ஏனென்றால் நந்திவர்மனை ஒழிப்பதற்காகத் தானே இத்தனை பலமான ஏற்பாடு செய்கிறோம் நாம்!''

இவ்வாறு பேசினான் வீர விக்கிரமன். அவன் கூறிய வார்த்தைகளில், உண்மை இருந்தது என்று பட்டது பாண்டியர்களுக்கு. நந்திவர்மனைத் தாக்குவதில் அவசரப்படக்கூடாது, சரியான பெரும் அளவில் படை திரட்டிக் கொண்டு தான் காஞ்சியின் மீது மோத வேண்டும் என்பதைப் பாண்டியர்கள் நன்றாக உணர்ந்தார்கள். எனவே வீர விக்கிரமனுக்கு ஒரு முக்கியமான உறுதிமொழி கொடுத்தார்கள்.

''வீர விக்கிரமரே! இப்பொழுது நம்மிடம் உள்ள படை பலம் மகத்தானது. இந்தப் படை பலத்தையெல்லாம் நந்திவர்மனுடைய வீழ்ச்சிக்காகவே திரட்டி வைத்திருக்கிறோம். எப்படியும் சித்திர மாயனை அந்தப் பல்லவ பீடத்திலே அமரச் செய்தால் ஒழிய நிம்மதி ஏற்படாது. ஆகவே, எங்கள் படை பலத்தை எந்த முறையில் உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டுமோ, அப்படியே செய்யுங்கள். எந்தக் கணத்தில் நமது பாண்டியப் படை வலம்புரித் தீவை நோக்கிச் செல்ல வேண்டுமோ, அந்தக் கணமே புறப்படச் சித்தமாயிருக்கிறோம். ஆனால் ஒரு சிறு விஷயம். வலம்புரித் தீவை நமது ஆட்சியின் கீழ் கொண்டு வருவதற்கு அதிகமான படை அவசியமில்லை. அந்தச் சிறிய தீவு இன்றிருக்கும் நிலையில், ஏற்கனவே நாம் அனுப்பியிருக்கும் படையே போதுமானது. அவசியப்பட்டால் அவர்களே வலம்புரித் தீவை அடிமைப் படுத்திக் கொண்டுதான் திரும்புவார்கள். ஒரு வேளை அவர்கள் அப்படிச் செய்யாமல் வலம்புரித் தீவோடு உறவு செய்து கொண்டே வந்து விட்டார்களானால், அதுவும் நலமே. மந்திர நாயகம் தமிழ் நாட்டுக்கு வந்திருப்பதைப் பற்றி நாம் ஏன் கவலைப் பட வேண்டும்? அவர் மீண்டும் அந்தத் தீவுக்குத் திரும்பிச் செல்வதற்குள், நாம் அந்தத் தீவின் கதியை நிர்ணயித்து விடுவோம். எந்தக் கணத்தில் நாம் இங்கிருந்து புறப்படவேண்டுமோ, புறப்பட்டு விடுவோம்!''

இப்படிச் சொன்னார் பாண்டியர்களின் தலைமைத் தளபதி. இந்த வார்த்தைகள் வீர விக்கிரமனுக்கு அளவு கடந்த மகிழ்ச்சியைத் தந்தன. அவன் சொன்னான்:

''சரியான முடிவு. நம்முடைய படை எந்தக் கணமும் வலம்புரித் தீவுக்குப் புறப்பட்டுச் செல்ல ஆயத்தமாக இருக்கட்டும். இப்பொழுது நாம் செய்ய வேண்டியது, மந்திர நாயகம் பூபதியைச் சந்தித்துவிடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். அது என் பொறுப்பு. பூபதியைக் குங்கும மாளிகையிலிருந்து வேறு இரகசியமான ஓர் இடத்துக்குத் தூக்கிச் சென்று விட வேண்டும். அவசியப் பட்டால் இந்தப் பாண்டியத் தலைநகரத்துக்கே கொண்டு வந்து விடுகிறேன். பிறகு வலம்புரித் தீவிலிருந்து நமது தூதுவர்கள் என்ன முடிவோடு திரும்புகிறார்கள் என்பதைக் காத்திருந்து பார்ப்போம். அவர்களுடைய தூதின் முடிவைத் தெரிந்து கொண்டு; பிறகு நம்முடைய போர் நடவடிக்கைகளை மேற்கொள்ளுவோம்!''

இப்படி முடிவு செய்து விட்டுக் கொடும்பாளூருக்குத் திரும்பினான் வீர விக்கிரமன்! ஆனால் அவனுக்கு அங்கே ஒரு திகைப்பு ஏற்பட இருந்தது! யாழ் நங்கையின் முன் யோசனையான ஏற்பாட்டினால், வீர விக்கிரமன் கொடும்பாளூருக்குப் போய்ச் சேர்ந்த அன்று இரவே குங்கும மாளிகையி லிருந்து பூபதி இரகசியமாகத் தப்பிச் சென்று விட்டான் அல்லவா? வீர விக்கிரமன் தன்னுடைய யோசனையை நிறைவேற்றுவதற்கு முன்பு, சித்திராங்கபூபதி சித்தன்னவாசல் மலைக்கு வந்து விட்டான்! அது மட்டுமில்லை. எந்த மந்திரநாயகத்தைப் பூபதி சந்தித்துவிடக் கூடாது என்று வீர விக்கிரமன் நினைத்தானோ, அதே மந்திர நாயகத்தையும் அவன் சந்தித்தான்! அந்தச் சந்திப்புக்காகவே உதயச் சந்திரன் குதிரை வீரர்களோடு, அதிகாலை நேரத்தில் சித்தன்ன வாசலின் குகைக்கு வந்தார்! ஏழடிப் பட்டத்திலிருந்து சுரங்கப் பாதை வழியாகச் சமணத் துறவியோடு நடந்து வந்த பூபதி குதிரை வீரர்களையும் உதயசந்திரனையும் பார்த்துத் திகைத்தான்! இதைப் புரிந்து கொண்ட உதயசந்திரன் புன்முறுவலோடு இவர்களை நோக்கி நடந்து வந்தார். சித்திராங்க பூபதி கைகூப்பியவாறு வணக்கம் செலுத்தினான்.

(தொடரும்)



# சமநிலைப் படுத்தும் பிரச்னை...

ஒரு பைசைகிள்மீது சமநிலை யாக வீற்று சவாரி செய்வது சுலபமே. ஆனால் உங்கள் பைசைகிளின் விலையையும் அது கொடுக்கும் சேவையின் மதிப்பையும் சரிகட்டுவது அவ்வளவு சுலபமல்ல. மூலப்பொருள்களை மிகுந்த கவனத்துடன் தெரிந்தெடுத்து உபயோகித்து, தயாரிப்பு நிலையில் ஒவ்வொரு உறுப் பையும் கடுமையான பரி சோதனைக்கு உட்படுத்து வதால், ஸென்-ராலே பைசைகிள்கள் மிக நன்றாக உழைப்பது மட்டுமன்றி, செப்பனிடும் செலவும், புதுப்பிக்கும் செலவும் மிகக் குறைந்து, இதன் பயனாக, அவற்றின் விலைக்கு சரிசமான மான மதிப்புடையதாக விளங்குகின்றன.

## ராலே ராபின் ஹூட்




S.R.C-39 TM

# யோக சிகிச்சை

## சுந்தரம்

### 13. புஷ்டியும் பாதுகாப்பும்

சீரான உணவு டி. பி. வராமல் தடுக்க எவ்வாறு அவசியம், அது எப்படி அமைய வேண்டும் என்ற ஆராய்ச்சியை ஒட்டியே, இந்தச் சீரான உணவை ஏழைகளும் பெற முடியும் என்று குறிப்பிட்டேன். இத்தகைய டி. பி. தடுப்பு உணவின் விலை மதிப்பு அதிகம் அல்ல. இதற்கென்று காசு மிகுத்தும் வழிகளையும் குறிப்பிட்டுள்ளேன். டி. பி. யைத் தடுக்க விரும்பும் ஒவ்வொருவரும் இந்த ஆராய்ச்சியைப் பல முறை படித்து, மனத்தில் ஊன்றச் செய்ய வேண்டும்.

பிரதான உணவு, பாதுகாப்பு உணவு என்ற பிரிவினைகளை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். பாதுகாப்பு உணவில் சம்பந்தப்பட்டவையே ரசமுள்ள பழங்கள், கீரைகள், காய்கள். கீரைகளும் காய்களும் அதிக விலை இல்லை. காய்கள் வாங்கக் காசு இல்லாவிட்டாலும், கீரைகள் வாங்கக் காசு இல்லை என்று யாரும் கூற முடியாது. ஏழை பாட்டாளிகூடத் தினம் இரண்டணாவுக்குக் குறையாமல் மிளகாய்க்கும், ஒரு அணா மசாலாப் பொருள்களுக்கும் செலவழிக்கிறான். இரண்டணாவுக்குக் கீரை வாங்கினால், தினம் வைட்டமினில் அயம், கால்ஷியம், பாஸ்பரஸ், உப்பு, உலோகம் முதலியவையும் கிடைத்து விடும். கீரையை உண்பவருக்கும் சில சமயங்களில் பல சத்துக்கள் கிடைக்காமற் போகலாம். இதற்குக் காரணம் கீரை உணவைத் தயார் செய்யும் பிழைகளைச் சார்ந்தது.

டி. பி.யைத் தடுக்கும் முறையில் உணவைத் தயாராக்கும் வழியும் இடம் பெறுகிறது. பிரதான உணவு தயாரிப்பு விதிகளில் தீட்டாத அரிசியைக் கஞ்சி வடிக்காது தயாரித்து உண்ண வேண்டும் என்றும் ஒன்று. ஒரு வருஷமாவது அறுவடையான பின்பு சேமிக்கப்பட்ட நெல்லை முளை முறியாமல் மேல் உமி மட்டும் நீக்கி உபயோகிக்கவும். இந்த விஷயத்தில் அரசாங்கம்தான் உதவி செய்ய வேண்டும். கோதுமையைக் குத்தாது அழுக்கு நீக்கி, அவ்வாறே மாவாக அரைத்து, சலிக்காமல் சப்பாத்தி செய்து உண்பது எல்லாச் சத்துக்களையும் பெற உத்தமமான வழி. ஒன்றுக்குப் பாதி இந்தக் கோதுமை மாவுடன் கடலை மாவையும் கலந்து சப்பாத்தி செய்தால், அவசியமான புஷ்டிச் சத்து அதிகரிக்கும். ராகியைத் தூசு நீக்கி மாவரைத்து, களி செய்து உண்பது ஜீரணத்துக்கும், சக்திக்கும் மேலான முறை.

கீரைகள், காய்கள் தயாரிப்பில், சில அவசியமான திட்டங்களை நிறைவேற்றியே தீர வேண்டும். இல்லையேல், காய், கீரை இவற்றில் சக்கையைத்தான் பெறுவோம். சத்தைப் பெறமாட்டோம். கீரைகளை வேக வைத்து, வெந்தபின் மிச்சமாகும் நீரைப் பிரித்து விடுவது, உண்பவருக்குப் பயன் தராது. உப்புக்கள், உலோக வகை, பாஸ்பரஸ், கால்ஷியம், சில வைட்டமின் பொருள்கள் பெரும்பாலும் நீருடன் சென்று விடுகின்றன. அரிசிக்குக் கஞ்சி வடித்தல் எவ்வளவு விபரீதமோ, அவ்வளவு மோசமானது, காய் கீரைகள் வெந்த நீரைக் கழித்தலும். நீரை அதிகம் கூட்டாமல் வேக வைக்கலாம். வெந்த கீரை அத்துடன் கலந்தே உண்ண வேண்டும். வெந்த நீரைக் கழிக்கும் 'கறி' என்ற வகைத் தயாரிப்பைக் காட்டிலும், 'கூட்டு' என்று நீருடன் இருக்கும் தயாரிப்பே உத்தமமானது. கீரை காய் வேகுங்கால் மிகச் சிறு புளி நீர் தெளித்தால் வைட்டமின்கள் நசியா.

பழங்களில் மலிவானவை தக்காளிப் பழம், எலுமிச்சம் பழம். கீரைகளை வீட்டிலேயே செலவின்றிப் பயிர் செய்து உண்ண வசதி உண்டு. அது போலத் தக்காளிப் பழத்தையும், சட்டியில் கூடப் பயிராக்கலாம். ஒவ்வொரு பழத்திலும் எந்தெந்தச் சத்து எந்த அளவு இருக்கின்றது என்று கணக்கிட்டு மூளையைக் குழப்பிக் கொள்ளத் தேவை இல்லை. மலிவான ரசமுள்ள பழங்கள் தேவையைத் தரும். வசதியுள்ளவர்கள், சாத்துக்குடி, ஆரஞ்சு, திராக்ஷை (பச்சை அல்லது கறுப்பு) சேர்க்கலாம். கீரைகளில் எதுவும் தன்மையானதும் மணத்தக்காளி பொன்னாங்காணி இவ்விரண்டும் அடிக்கடி சேர்ப்பது நன்மை. தினம் பச்சைக் கொத்துமல்லி அதிகம் சேர வேண்டும். இது தரும் வைட்டமின் 'ஸி' வேறு எந்தப் பொருளும் தராது. இதையும் சட்டியில், பாத்தியில்

வளர்க்கலாம். கொதி ரஸம், கூட்டு, குழம்புகளில் போட்டு, சத்தைப் பெறுவது முடியாது. வைடமின் 'ஸி' சூட்டால் எளிதில் நசித்து விடுகிறது.

நன்றாகக் கழுவிய இலையையும், தக்காளியையும், தயிரிலோ, மோரிலோ பச்சடி செய்து உண்பது, பாதுகாப்புச் சத்துக்களைப் பெற உள்ள வழி. எத்தனையோ வைடமின்கள் உள்ளன. முக்கியமான வைடமின், ஏ. பி. ஸி. டி. இவைகளைக் கவனித்தால், இவை தரும் பொருள்களே மற்ற ஜாதி வைடமின்களையும் தந்துவிடும். வைடமின் 'ஏ' தானியங்களிலிருந்தும் மீன் எண்ணெய்களிலிருந்தும் பெறலாம். வைடமின் 'பி' வகைகள், பிரதான உணவுப் பொருளான கைக்குத்தல் தீட்டாத அரிசி, முழு கோதுமை, ராகி, தவிடுகள், பால் முதலியவைகளிலிருந்து எளிதாகப் பெறலாம். வைடமின் 'ஸி' பச்சைக்



கொத்துமல்லி, கீரைகள், பழ ரசங்களிலிருந்து பெறலாம். வைடமின் 'டி' சூர்ய ஒளி, மீன் எண்ணெய், சூர்ய ஒளியிலுண்டாகும் பயிர்களைப் புதிய துளிர்த் தன்மையில் ஏற்பதால் பெறலாம்.

டி. பி.யைத் தடுப்பதற்கு, பிரதான உணவுடன் போதுமான அளவில் பருப்புகள், காய், கீரைகள், பால், மோர், ரசமுள்ள பழங்கள், எண்ணெய், வெண்ணெய், தேங்காய் சேர்க்க வேண்டியது அவசியம். ஏழைகளும் இவற்றைப் பெற முடியும்.

புஷ்டிக் குறைவால், டி. பி. யால் தாக்கப்படுகிறார்கள் என்பது விஞ்ஞான விளக்கம்; அனுபவ சித்தாந்தம். பிரதானப் பொருள் மட்டும் புஷ்டிக்குப் போதாது. புலால் வகைகள் விலையுயர்ந்தவை. இதில் உத்தம வகை ஏழைகளுக்குக் கிட்டாது. அத்துடன் அசைவ உணவே அவசியமில்லை என்று கருதுகிறேன். இப்புஷ்டியைக் கூட்டி நிறுத்த, பருப்புக்கள் உபயோகமாகும். ஆனால் பருப்புக்களோ பிரதான பொருளைக் காட்டிலும் விலை அதிகமானவை. ஏழைகள் ஓரளவுதான் பருப்பைச் சேர்த்துக் கொள்ள முடியும். பாரத புண்ணிய பூமியில், ஏழைகளுக்கும் புஷ்டி மலிவாகத் தர ஒரு பருப்பு உள்ளது. அது தான் நிலக் கடலை. வேர்க்கடலை என்கிறார்கள் சிலர்.

இதை ஏழைகளும் பணக்காரரும் கூட உபயோகிக்கின்றனர். இதில் புஷ்டிச் சத்து இருக்கிறது. இதற்கீடாகப் பாதம் பருப்பும், இதற்கு மேல் ஸோயாக் கொட்டையும்தான் உள்ளவை. இவற்றைச் சிறிது தினம் உணவில் விருப்பம் போல் கலந்து நல்ல பயன் பெறலாம். பாலின் புஷ்டி மிக உயர்ந்தது. புஷ்டியில் தானிய புஷ்டி, மிருக புஷ்டி என இருவகைப்படும். தானிய புஷ்டி உள் சென்ற பிறகு மிருக புஷ்டியாக மாற்றப்பட்டு உபயோகமாகிறது. மிருக புஷ்டியாக மாறும் பொழுது தானிய புஷ்டி சத்துக் கணக்கு மிகக் குறைகின்றது. ஆனால் அரிசியில் மற்றத் தானியங்களைக் காட்டிலும் ஒரு புஷ்டி மேன்மையுள்ளது. இது மூளை முறியாத, உமி அகற்றப்பட்ட, தீட்டாத பச்சை அரிசியில்தான் உள்ளது. கஞ்சி வடிக்காது உண்ணும்போதுதான் பயனாகிறது. மூளை முறியாத பச்சை அரிசியின் மூளை பாகத்தில் இருக்கும் அரிசியிலும், தவிட்டிலும்தான் 'அமினோ ஆஸிட்' மிருக புஷ்டி சத்து அதிகம் உள்ளது. மூளை முறியாத, தீட்டாத, கஞ்சி வடிக்காத பச்சை அரிசி உணவு, கோதுமை உணவைக் காட்டிலும் மேலானது. இத்தகைய அரிசியை யாரும் விரும்பாததால், ருசிக்காததால், இத்தகையது கிடைக்காததால் தான் பிரதான உணவு கோதுமை சேர்ந்த கலப்பு உணவாக அமையவேண்டும்என்கிறேன்.

புஷ்டிக் குறைவான உணவு டி. பி. தாக்குதலுக்கு ஒரு முக்கிய காரணம். சாதாரண ஜீரணமுடையவர்களுக்கே பொதுவாகக் கூறி வருகிறேன். அஜீரணமுள்ளவர்களுக்குத் திட்டமாக வேண்டியது என்ன என்பதை நிபுணர்களுடன் ஆலோசித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். பசி இருந்தாலும், எவ்வளவு சத்தாகத் தின்றாலும், சத்துக்கள் உள் இழுக்கப் படாவிட்டால் சீரான உணவைச் சாப்பிடுவதால் பயனேற்படாது.

டி. பி. தாக்கியவருக்கு ஜீரண சக்தி குறைவது சாதாரணம். பசி உண்டாக்கவும், ஜீரணத்தை ஏற்படுத்தவும், சத்தை இழுக்கவும், சிகிச்சைத் திட்டத்தில் கவனிப்போம். (தொடரும்)



# அவள் சிரிப்பு

ஜி.கே. பொன்னம்மாள்

அந்தப் புது நீல நிறச் சட்டையை அணிந்து கொண்டு, கண்ணாடிமுன் நின்றேன். தையற்காரன் அதை நன்றாகத் தைத்திருந்தான். அதன் நிறமும் என் உடலுக்குப் பொருந்தியிருந்தது. நன்றாக உடை உடுத்திக் கொண்டு காரியாலயத்துக்குச் செல்வதில் ஏற்படும் ஆனந்தமே தனியானதுதான்.

உடை அலங்காரத்தை முடித்துக் கொண்டு கடிகாரத்தைப் பார்த்தால் மணி ஒன்பது ஆகியிருந்தது. சரியாகப் பத்தரை மணிக்குக் காரியாலயத்தில் இருக்கவில்லை யென்றால் புது மானேஜர் பிலு பிலு வென்று பிடித்துக் கொள்வார். இந்த நிலையில் மழை வேறு பெய்ய ஆரம்பித்து விட்டது.

'' இந்தா. சிற்றுண்டி பொட்டலம். உனக்குப் பிடிக்குமே என்று வெல்ல அவல் செய்து வைத்திருக்கிறேன். காரியாலயத்தைப் பஜனை மடம் என்று நினைத்துக் கொண்டு, கூட இருக்கிறவர்களுக்கெல்லாம் விநியோகம் செய்து விடாதே. நீயே சாப்பிடு. உன் அக்காள் பெண்ணை உனக்குப் பிடிக்கவில்லை என்றால் அந்த விவரத்துக்கும் இன்றைக்கே இரண்டு வரி எழுதிப் போட்டு விடு. வீணாக அவள் உன்னை நம்பிக் கொண்டிருக்க வேண்டாம், பார்!'' என்று ஒரே மூச்சில் பேசி முடித்தாள் என் தாயார்.

மெதுவாகப் பெய்து கொண்டிருந்த மழை இப்பொழுது நன்றாகக் கொட்ட ஆரம்பித்தது. மேஜையடியில் அமர்ந்து அக்காளுக்குக் கடிதத்தை எழுதி முடித்தேன்.

மணி ஒன்பதரை. மழை சற்றுக் குறைந்திருந்தது. விடுவிடு வென்று தெருவில் இறங்கிக் குடையுடன் புறப்பட்டேன். தெருவெல்லாம் தண்ணீர் தேங்கிக் கிடந்தது. என் அழகான புதுச்சட்டை தாராளமாக வெளியே தெரியும்படி நிமிர்ந்து நடக்காமல் இப்படி மழைக்குப் பயந்து குடையால் மறைத்துக் கொண்டு கூனிக் குறுகி நடக்க வேண்டியதை நினைக்கும் போது எனக்கு வருத்தமாகத்தான் இருந்தது. வரும் கார்களெல்லாம் 'அழுக்கு ஜலத்தை வாரி இறைத்துத் தெளித்து விடுவேன்' என்று பயமுறுத்துவது போல் போய்க் கொண்டிருந்தன.

ஆயிற்று. பஸ் ஸ்டாண்டின் சமீபத்தில் வந்து விட்டேன் என்கிற தெம்பில் சற்று நிமிர்ந்து நடந்தேன். 'சர்' ரென்று ஒரு கறுப்பு நிறக் கார் அசுர வேகத்தில் வந்து கணப்பொழுதில் சேறு கலந்த ஜலத்தை என் மீது வாரி யிறைத்து விட்டு, கர்வத்துடன் சென்று மறைந்தது.

என் உடை யெல்லாம் சேறாகி விட்டது. முகம், கண் எல்லாம் அழுக்கு ஜலம். கைக்குட்டையால் துடைத்துக் கொண்டேன். நீலச் சட்டையைப் பார்க்கப் பார்க்க என் வருத்தம் அதிகமாயிற்று.

'' கலீர் '' என்ற சிரிப்புச் சத்தம் கேட்டுத் திரும்பினேன். ரிக்ஷாவில் போய்க் கொண்டிருந்த ஒரு இளம் பெண்தான் அப்படி என் கோலத்தைப் பார்த்துச் சந்தோஷப்பட்டது. எனக்குக் கோபமும் அவமானமும் சேர்ந்து உடல் பதறியது.

'' அடடா! இந்தக் கார் ஓட்டுகிறவர்களே இப்படித்தான். கண்மூடித்தனமாக நடந்து கொள்கிறார்கள். நல்ல சட்டை யெல்லாம் இப்படி வீணாகப் போய்விட்டதே! பேசாமல் வீட்டுக்குப் போய் வேறு உடைகளை மாற்றிக் கொள்ளுங்கள்'' என்று எனக்கு யோசனை கூறினார், பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருந்த ஒரு பெரியவர்.

விடுவிடென்று திரும்பி நடந்தேன். தாயார் பயந்து போய் விட்டாள். '' என்னடா நாகு! எதையாவது மறந்து விட்டாயா? ஏன் திரும்பி வந்து விட்டாய்?'' என்று கேட்டாள். எனக்கு எரிச்சலாக இருந்தது.

''இலேசாகத் தலை வலிக்கிறது. இன்றைக்கு ஆபீஸுக்குப் போகவில்லை'' என்று பதில் அளித்து விட்டு என்னுடைய அறைக்குப் போய் அந்த அழகான சட்டையைக் கழற்றி மூலையில் வேகமாக எறிந்து விட்டுக் கட்டிலில் படுத்துக் கொண்டேன்.

சுவர்க் கடிகாரம் மணி பத்தடித்ததும் எனக்குக் காரியாலய நினைவு வந்தது. எழுந்து உட்கார்ந்து ஒரு 'லீவு லெட்டர்' எழுதினேன். பக்கத்து வீட்டுப் பையனை அழைத்து அதை ஆபீஸில் கொடுத்துவிடும்படி சொன்னேன்.

அந்தப் பெண்ணின் சிரிப்பொலி நினைவுக்கு வந்து என் கோபத்தை அதிகப்படுத்தியது. காரியாலயத்துக்குப் போகும் ஒருவருக்கு இந்தமாதிரி நேர்ந்து விட்டதே என்று வருத்தப்படாமல், என்ன சிரிப்பு வேண்டியிருக்கிறது? கொஞ்சங்கூட வருத்தம் தெரியாத பெண் என்று நினைத்தேன். அப்பொழுது தான் என் தமக்கை பெண் நினைவும் வந்தது. சாதுப் பெண். 'அடித்தால் அழக்கூடத்

தெரியாது' என்று அம்மா அவளைப் பற்றிச் சொல்லுவாள். அவளாக இருந்தால் இப்படிச் சிரித்திருப்பாளா? படித்த பெண்களுக்கே கர்வம் அதிகம்தான் என்று நினைத்தேன். இந்த நினைப்பில் படித்த பெண்களை நினைத் தாலே எனக்கு வெறுப்பாக இருந்தது. முதலில் "இப்பொழுது கலியாணம் வேண் டாம்" என்று எழுதியிருந்த கடிதத்தைக் கிழித்துவிட்டு, "சம்மதம்" என்று அக்கா வுக்கு எழுதி விடலாம் என்று நினைத்துக் கடி தத்தைத் தேடினால் அதைக் காணவில்லை. 'லீவு லெட்டர்' தான் மேஜைமேல் கிடந்தது. அப்பொழுதுதான் என் தவறு எனக்குப் புரிந்தது. ஆத்திரத்தில் 'லீவு லெட்டரு'க்குப் பதிலாக அக்காளுக்கு எழுதின கடிதத்தை யல்லவோ காரியாலயத்துக்குக் கொடுத் தனுப்பி விட்டேன்? மானேஜர் அந்தக் கடிதத்தைப் பார்த்து விட்டால் வேறு வினையே வேண்டியதில்லை.

உடனே காரியாலயத்துக்குக் கிளம்பினேன். பஸ்ஸைப் பிடித்துப் போய்ச் சேர்ந்தபோது மணி சரியாகப் பதினொன்று. மானேஜர் அறைக்குள் எப்படி நுழையப் போகிறேன் என்று பயந்தபடியே தலைமைக் குமாஸ்தாவை நெருங்கிச் சென்றேன்.

"என்னப்பா, நாகராஜா! இவ்வளவு அழகாகத் தீபாவளிக்குப் போகும் புது மாப் பிள்ளை போல உன் விருப்பப்படி வருகிறாயே, என்ன சமாசாரம்?" என்று அவர் கேலியாகக் கேட்டார். மற்றக் குமாஸ்தாக்கள் இந்த ஹாஸ்யத்தைக் கேட்டுச்சிரித்தார்கள். அன்று இரண்டாம் தடவையாக எனக்கு அவமானம்.

"மானேஜர் வரவில்லையா, சார்?" என்று பதட்டத்துடன் கேட்டேன்.

"இன்றைக்கு அவர் லீவு" என்று அவர் கூறியதைக் கேட்டதும் தான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. எனக்கு நேர்ந்த அமளியைத் தலைமைக் குமாஸ்தாவிடம் சொன்னேன். "அடடா! இப்பொழுதுதான் தபால்களை யெல்லாம் சேவகன் முனிசாமி மானேஜர் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போனான்" என்றார் அவர்.

உடனே டைபிஸ்டின் சைக்கிளை எடுத்துக் கொண்டு மானேஜர் வீட்டுக்குப் புறப்பட் டேன். வழியெல்லாம் முனிசாமியைத் தேடியபடியே சென்றேன்.

நெற்றியில் வழிந்த வியர்வையைக் கைக் குட்டையால் துடைத்துக் கொண் டேன். அன்று யார் முகத்தில் விழித் தேனோ? எடுத்த காரியமெல்லாம் தோல்வி. சைக்கிளை மானேஜர்வீட்டு வராந்தாச் சுவரில் சாத்திவைத்து விட்டு அங்கேயே நின்றபடி மெதுவாக "சார், சார்" என்று அழைத்தேன்.

"வள், வள்" என்று குரைத்தபடி ஒரு நாய் என்னைத் தேடி வந்தது. அதைத் தொடர்ந்து, "ரோஸி! சும்மாயிரு!" என்ற குரலும் இனிமையாக வந்தது. எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. நாயைப் பின் தொடர்ந்து வந்த பெண் காலையில் என்னைக் கண்டு சிரித்த அதே பெண்தான்!

எனக்கு மட்டும் மூன்றாவது கண் என்று ஒன்று இருந்திருந்தால் ஒரே பார்வையில் அந்தப் பெண்ணையும் நாயையும் சேர்த்து எரித்திருப்பேன். என் தற்போதைய நிலைமையை நினைத்துப் பேசாமலிருந்தேன்.

"ரொம்பப் பயந்து விட்டீர்களோ? இது இப்படிக் குரைக்கிறதே தவிர, கடிக்காது. ரொம்ப சாது" என்று தன் நாயைப் பற்றி விமரிசனம் செய்தாள் அந்தப் பெண்.

"மானேஜர் இருக்கிறாரா?" என்று ஒரே வார்த்தையில் வந்த காரியத்தை மெதுவாக அவளிடம் விளக்கினேன்.

"அவருக்கு உடம்பு சரியில்லை. இலேசாக ஜுரம் அடிக்கிறது. படுத்துக் கொண்டிருக்



கிறார். என்ன வேண்டும்?'' என்று கேட்டாள் அப்பெண்.

''அவர் இன்றையத் தபால்களை யெல்லாம் பிரித்துப் பார்த்து விட்டாரோ?'' என்றேன்.

''ஓ! பார்த்து விட்டாரே. நான்தான் அவருக்கு ஒவ்வொரு கடிதமாகப் பிரித்துப் படித்துக் காண்பித்தேன். நான் அவருடைய மருமகள். அவர் என் மாமா'' என்று கேலியாகப் பேசிச் சிரித்தாள் அந்த யுவதி.

கவலை என்பதே இந்தப் பெண்ணுக்குக் கிடையாதோ என்று தோன்றியது. என் மனநிலையை எப்படி அவளிடம் விவரிப்பது? 'என் அசட்டுக் கடிதத்தை மானேஜரும், போதாததற்கு இந்தப் பெண்ணும், படித்திருப்பார்களோ?' என்று நினைத்ததும் என் முகம் அவமானத்தால் சிறுத்து விட்டது.

''உங்கள் பெயர் நாகராஜன் தானே?'' என்று கேட்டாள் அந்தப் பெண். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்றேன்.

''இன்று மாமாவுக்குக் கடிதங்களைப் படித்துக் காட்டும்போது, 'லட்சுமி அம்மாள்' என்று விலாசமிட்ட ஒரு கடிதமும் இருந்தது. கடிதம் மாறி விட்டிருக்கிறது என்று புரிந்து கொண்டேன். அந்தக் கடிதத்தில் கலியாண விஷயமாக ஏதோ எழுதியிருந்தது. நான் அதை மாமாவுக்குப் படித்துக் காண்பிக்கவே இல்லை. அப்படியே வைத்து விட்டேன். நீங்கள் வந்து விசாரித்ததையும் உங்கள் பரபரப்பையும் கண்டு நீங்கள்தான் நாகராஜனோ என்ற சந்தேகம் வந்தது. அதனால்தான் கேட்டேன்'' என்றாள்.

'அப்பாடா, பிழைத்தோம்!' என்று பெருமூச்சு விட்டேன். அவள் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்ததும், ''என் மானத்தைக் காப்பாற்றிய உங்களுக்கு மிகவும் நன்றி'' என்றேன் குழைவாக.

பிறகு அவளிடம் விடைபெற்றுக் கொண்டு குஷியாகச் சைக்கிளில் ஏறிச் சீட்டி யடித்தபடி 'பெடலை' ஒரு 'மிதி' மிதித்தேன். வழியெல்லாம் அந்தப் பெண்ணின் நினைவு. படித்த பெண் என்றால் படித்த பெண்தான். எவ்வளவு புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு என் மானத்தைக் காப்பாற்றி விட்டாள்? பட்டிக் காட்டுப் பெண்ணாக இருந்தால் விஷயம் தெரியாமல் அதையும் படித்துக் காண்பித்து என் மானத்தை வாங்கியிருப்பாள். எனக்கு முதலில் அவள்மேல் ஏற்பட்ட கோபமெல்லாம் பஞ்சாகப் பறந்து விட்டது. கல்யாணம் செய்து கொள்வதென்றால் இம்மாதிரி பெண்ணையல்லவா செய்து கொள்ள வேண்டும்? ஆனால் அவள் எங்கே? நூறுரூபாய் சம்பளம்வாங்கும்இந்த ஏழைக் குமாஸ்தா எங்கே? முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையாகத்தானே முடியும்?






வெள்ளிக்கிழமை காரியாலயத்துக்குச் சென்றதும் மானேஜர் என்னை அழைத்தார். "பங்களூர் பிராஞ்சுக்கு ஒருவர் போக வேண்டியிருக்கிறது. உன்னை அனுப்பலாம் என்றிருக்கிறேன். உனக்குப் பங்களூர் போக விருப்பமா?" என்று கேட்டார். நான் வயதான தாயைவிட்டு வெளியூர் செல்ல விருப்பமில்லை என்று சொல்லி விட்டேன். என் சக குமாஸ்தா ரங்கநாதன், "என் சித்தப்பா பங்களூரிலேயே இருக்கிறார், சார். நான் போகிறேன்" என்றான். நான் போகாததற்கு முக்கியமான காரணம் மானேஜர் வீட்டில் இருக்கும் பெண்ணை ஏதாவது சாக்கு வைத்துக் கொண்டு போய்ப் பார்க்கலாம் என்கிற எண்ணம்தான். ஆனால் நாம் நினைப்பதெல்லாம் எங்கே நடக்கிறது?

அதற்குப் பிறகு நான் எத்தனையோ தடவைகள் மானேஜர் வீட்டுக்குப் போயும் அவளைக் காணமுடியவில்லை.

அன்று என் தமக்கை பெண்ணிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்திருந்தது.

"நீங்கள் எனக்குப் படிப்பும் போதாது என்று என்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டீர்களாம். போகட்டும். அவரவர்கள் விதிப்படிதானே எதுவும் நடைபெறும்? ஆனால் அம்மாதான் மிகவும் மனம் நொந்து கிடக்கிறாள். எங்கள் பக்கத்து வீட்டில் மங்களம் என்று ஒரு பெண் இருக்கிறாள். அவள் உங்கள் மானேஜரின் மருமகளாம். நீங்கள் எழுதிய கடிதத்தை அவள் படித்து விட்டாளாம். எல்லா விஷயமும் சொன்னாள். அவளுக்குப் போன மாதம் தான் கல்யாணமாயிற்றாம். அடுத்த வாரம் பம்பாய்க்குக் கணவனுடன் போகிறாளாம். நீயும் பம்பாயில் ஒருவரைக் கல்யாணம் செய்து கொண்டு பம்பாய்க்கே வந்து விடேன் என்கிறாள்.

—பத்மா"

இவ்வாறு எழுதியிருந்தாள். கடிதத்தைப் படித்ததும் நான் பிரமித்து விட்டேன். அந்தப் பெண்ணுக்குக் கல்யாணமாகி விட்டதா? இதிலும் ஏமாற்றமா? இது முதலிலேயே தெரியாமல் போயிற்றே? 'சரி, இப்பொழுது அக்காவையும் வருத்தப் படுத்துவானேன்?' என்று அன்றையத் தபாலிலேயே, "சம்மதம். கூடிய சீக்கிரம் முகூர்த்தத்தை வைத்துக் கொள்ளலாம்" என்று ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டேன்.

மாயவரத்தில் கல்யாணம். மணக் கோலத்தில் பத்மாவைப் பார்த்தபோதுதான் அவள் உண்மையிலேயே அழகி என்பது தெரிந்தது.

நலுங்கு நடைபெற்று முடிந்தது. "என்ன இருந்தாலும், வேண்டாம் என்று மறுத்த பெண்ணையே மறுபடியும் வேண்டுமென்று நினைக்கும்படி என்ன மந்திரம் போட்டாய், பத்மா?" என்று கேட்டு விட்டுக் கலீரென்று சிரித்த குரல் எனக்கும் பழகிய குரலாக இருந்தது. திரும்பிப் பார்த்தேன். அவளேதான். அவள் முகத்தில் குறும்புச் சிரிப்பு. பத்மாவின் முகத்திலும் அதே சிரிப்பு.

"வாருங்கள், உங்கள் கணவர் வரவில்லையா?" என்று கேட்டேன்.

"எனக்கு இன்னும் கணவர் வரவில்லை. கல்யாணமே ஆகவில்லை" என்று சிரித்தாள் மங்களம். எனக்குக் கோபம் வந்து விட்டது. பத்மா எனக்குப் பொய்யாகக் கடிதம் எழுதியிருக்கிறாள். ஆனால் அப்பொழுது பேசச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

மாலை ஊர்வலத்தின் போது, "ஏன் எனக்கு இப்படி பொய்க் கடிதம் எழுதினாய்?" என்றேன் பத்மாவிடம்.

"மன்னித்துக் கொள்ளுங்கள். என் சிநேகிதி எல்லா விஷயமும் சொன்னாள். அவள் சொன்னதைக் கேட்டவுடன் உங்களுக்கு அவள் மேல் ஒரு பாசம் விழுந்திருக்குமோ என்று சந்தேகப் பட்டேன். நான் எழுதினது முழுவதும் பொய் இல்லை. அடுத்த மாதம் அவளுக்குக் கல்யாணம். அவளது அத்தான் தான் மாப்பிள்ளையாம். நான் எதிர்பார்த்த படியே என் கடிதத்தைப் பார்த்தவுடன் நீங்களும் பதில் எழுதி விட்டீர்கள். இந்த யோசனையை அவளேதான் எனக்குச் சொன்னாள். என்மேல் கோபமா?" என்றாள் பத்மா அடக்கமாக.

"கோபமில்லை, பத்மா. உனக்குப் படிப்பு அவ்வளவாக இல்லாவிட்டாலும் நல்ல யுக்தி இருக்கிறது. அதுவே போதும்" என்றேன். இதைக் கேட்டுப் பத்மா கலீரென்று சிரித்தாள். பத்மா சிரித்தபொழுதும் எனக்கு மங்களத்தின்சிரிப்புத்தான் நினைவுக்குவந்தது.

# வெற்றிவேலின் வெற்றி

வெற்றிவேலின் சிகையலங்காரக்கூடம் வெற்றிகரமாக நடப்பதற்கு, அதன் சொந்தக் காரனை வெற்றிவேலின் பேச்சுத் திறமையே முக்கிய காரணமாக இருந்தது.

வெற்றிவேல் ஒரு ஜனநாயக வாதி. அதாவது ஒரு கட்சியிலும் சேராமல் பொதுஜனப் பிரதிநிதியாக விளங்குபவன். எந்தக் கட்சிக்கும் மதிப்புக் கொடுக்கும் இன்மொழியாளன். அதனாலேயே எந்தக் கட்சியைச் சேர்ந்தவரானாலும் வெற்றிவேல் சிகையலங்காரக் கூடத்துக்கு விருப்பத்துடன் சென்றார்கள்.

மத விஷயத்தில் அவன் நமது இந்திய அரசாங்கத்தைப் பின்பற்றுகிறவன். ஜாதி மத நிற வேறுபாடற்ற கூடம் அது. வெள்ளை, கறுப்பு, செம்பட்டை ஆகிய எந்த நிற முடியானாலும் வித்தியாசமின்றி வெட்டித் தள்ளி ஒன்றாக்கி விடுவான் வெற்றிவேல்.

முத்துசாமியும் ரங்கநாதனும் அடுத்தடுத்த வீட்டுக்காரர்கள். எனவே இருவரும் விரோதிகள் என்பது சொல்லாமல் விடவேண்டிய விஷயம்.

முத்துசாமி அந்த வீட்டுக்குக் குடிவந்து ஆறுமாதங்கள் வரை இரு வீட்டாரும் அன்யோன்யமாகத் தானிருந்தார்கள். ஒரு சமயம் முத்துசாமியின் வீட்டுக் கன்றுக்குட்டி ரங்கநாதன் வீட்டின் முன் வளர்ந்திருந்த பூச்செடியில் வாய் வைத்து விட்டது. அதுகாரணமாக இருவருக்கும் இலேசாக வாய்ச் சண்டை ஆரம்பித்தது.

ஒருவரைக் கண்டால் மற்றவர் தம் தலையை வேறு பக்கம் திருப்பிக் கொள்வார். முத்துசாமி வீட்டுக் கன்றுக்குட்டி பலத்த கயிற்றினால் கட்டுத்தறியில் கட்டப்பட்டது. ரங்கநாதனின் பூச்செடிகளுக்கு முள்வேலி அமைக்கப் பட்டது.

இருவரும் வெற்றிவேல் சிகையலங்காரக் கூடத்தின் வாடிக்கைக்காரர்கள். முத்துசாமி முப்பது நாட்களுக்கு ஒரு முறையும், ரங்கநாதன் நாற்பது நாட்களுக்கு ஒரு முறையும் முடிதிருத்திக்கொள்வது வழக்கம். ஆனால் இப்பொழுது அவர்களது வருகையில் மாறுதலேற்பட்டது வெற்றிவேலுக்கு வியப்பையளித்தது.

ஒருநாள் காலையில் வெற்றிவேல் முத்துசாமிக்கு முடிவெட்டிக் கொண்டிருந்தபோது ரங்கநாதன் உள்ளே நுழைந்தார். உள்ளே தம் விரோதியின் தலையைக் கண்டதும் காலை வெளியே இழுத்தார் ரங்கநாதன். "என்னங்க? உள்ளே வந்து உட்காருங்க. இதோ வேலை முடிந்து விட்டது. இரண்டே நிமிஷம்தான்" என்று வெற்றிவேல் எவ்வளவோ சொல்லியும் ரங்கநாதன் திரும்பிப் பார்க்காமலே "மாலையில் வருகிறேன்" என்று கூறிவிட்டு வேகமாகப் போய்விட்டார்.

அவர் போனபின்பு வெற்றிவேல் நினைத்துக் கொண்டிருந்தான். எவ்வளவு நேரமானாலும் காத்திருந்து சிகையலங்காரத் திருப்பணியை முடித்துக் கொண்டு சாவகாசமாகப் போகும் ரங்கநாதன் ஏன் அவ்வளவு வேகமாகத் திரும்பி ஓடினார் என்பது அவனுக்கு என்ன யோசித்தும் சிறிதும் விளங்கவில்லை.



இந்நிலையில் முத்துசாமி விளக்கம் கொடுக்க முன் வந்தார். "நீ ஆயிரம் ரூபாய் கொடுத்தாலும் அவர் இப்போது உள்ளே வரமாட்டார், வெற்றிவேல். நான் இருக்கிற பக்கம் தலை நீட்டுவாரா அந்த ரங்கநாதன்!" என்றார் அவர் வெற்றிப் புன்னகையோடு.

"அப்படிச் சொல்லுங்க. இப்பொழுது தான் புரிகிறது. அவர் மிரண்டு ஓடுவதன் காரணம். உங்கள் இரண்டு பேருக்கும் ஏன் விரோதம் ஏற்பட்டது?" என்று குழைந்தான் வெற்றிவேல்.

"நீயே சொல்லு. கன்றுக்குட்டிக்கு 'இது நம்ம வீடு. அது இன்னொருத்தர் வீடு' என்கிறது தெரியுமா?"

"அதுக்கு என்னங்க தெரியும்!"

"இவர் வீட்டுப் பக்கம் வளர்ந்திருந்த புல்லைக் கடிச்சுதாம் நம்ம கன்றுக்குட்டி. அதற்கு இவர் எப்படிப் பேசினார், தெரியுமா? நானும் விட்டேனா? கொடுத்தேன் அவருக்குச் சரியானபடி ஜவாப்பு."

"பதிலுக்குப் பதில் கொடுத்தால் தானுங்க எதிராளிஅடங்குவாரு."

"அது போகட்டும். நம்ம வீட்டுக்கு முன்னால் பத்து வருஷங்களாக நிற்கிறது ஒரு பெரிய முருங்கை மரம்."

"நான் கூடப் பார்த்திருக்கிறேன். காய் நீளம் நீளமாகத் தொங்கும்."

"அந்த மரத்திலே இருந்து பூ உதிர்ந்து அவர் வீட்டு வாசலிலே போய்க் குப்பைசேர்கிறதாம். எப்படி இருக்கு நியாயம்?"

"நியாயம் ஏதுங்க இந்தக் காலத்திலே!"

"நானும் போனால் போகிறதென்று பேசாமல்தான் இருந்தேன், வெற்றிவேல். ஆசாமி நம்மைத் தெரிந்து கொள்ளாமலே, எதற்கெடுத்தாலும் மேலே மேலே உரக்கச் சண்டை பிடிக்கிறதென்று ஆரம்பித்தார். எனக்கு எரிச்சல் தாங்க முடியவில்லை. 'எங்கள் வீட்டுக் கன்றுக்குட்டி அப்படித்தான் மேயும். புல்லு எங்கே இருந்தாலும் அது தின்னத்தான் செய்யும். மரம் என்று இருந்தால் பூ தரையிலேதான் வந்துவிழும். ஆகாயத்திலே போய் விழாது....'' என்று அவர் வாயடைத்துப் போகும்படி பதில் சொல்லி விட்டேன்.

மூடி திருத்தும் பணி முடிந்த பிறகும் அரை மணி நேரம்வரையில் அந்தச் சம்பாஷணை நீடித்தது. தினமும் காலையில் எட்டு வீடுகளுக்குக் கேட்கும்படி ரங்கநாதன் காறி உமிழ்ந்து கால்மணி நேரம் பல் விளக்குவது முதல், அவர் இரவு பத்து மணிக்கு மேல் பாட ஆரம்பிப்பது வரை, குற்றச்சாட்டுகளை முத்துசாமி வெற்றிவேலிடம் கூறி முடித்தார்.

* * *

அன்று மாலை ரங்கநாதன் மூடி திருத்திக் கொள்வதற்காகச் சிகையலங்காரக் கூடத்துக்குள் வந்து அமர்ந்தார். வெற்றிவேல் தன் வேலையை ஆரம்பித்தான். பேச்சு இல்லையானால் அவனுக்கு வேலையே ஓடாது. அவன் பேசுவான்; அல்லது பிறர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருப்பான். இது அவனுடைய நெடுங்காலப் பழக்கம்.

"என்னங்க, காலமே வந்தீங்க, அப்படியே ஓடிப்போய் விட்டீர்களே?" என்று தூண்டிலைப் போட்டான் வெற்றிவேல்.

ரங்கநாதன் சர்வ சாதாரணமாக, "அவர் இருக்கும் போது நானும் உள்ளே வர வேண்டாமென்று எண்ணித்தான் போய் விட்டேன்" என்றார்.

"அவருக்கும் உங்களுக்கும் விரோதம் என்று எனக்கு இதுவரை தெரியாதுங்களே?"

"பக்கத்திலே குடியிருக்கிறவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் வாழவேண்டும் என்கிறது தெரியவில்லைஅவருக்கு. அதனால்தான் தகராறு. மற்றவர்களையெல்லாம் அவர் எவ்வளவு துச்சமாக எண்ணுகிறார் தெரியுமா? 'ஏனய்யா கன்றுக் குட்டியை அவிழ்த்து விட்டு என் வீட்டுச் செடிகளையெல்லாம் பாழடிக்கிறீங்க?' என்று கேட்டால்....

'கன்றுக் குட்டி அப்படித்தான்மேயும்' என்று சொல்லி விருப்பார்.

"ஆமாம்! அவர் இப்படியே தான் சொன்னார், வெற்றிவேல்!"

இப்படியாக முத்துசாமியின் குண விசேஷங்களைப் பற்றி இருவரும் வெகு நேரம் வரை விமர்சனம் செய்தார்கள்.




அடுத்த மாதம் பிறந்ததும் முத்துசாமி சிகையலங்காரத்துக்காகச் சென்றிருந்தார். அங்கு போய் உட்கார்ந்த உடனேயே, "என்னப்பா, வெற்றிவேல், நம்ம பக்கத்து வீட்டுக்காரரிடத்திலே நீ ஏதாவது சொன்னாயா, நாம் அப்போது பேசிக் கொண்டதைப் பற்றி? அன்றைக்கு அவர் உன்னுடைய சிகையலங்காரக் கூடத்திலிருந்து வருகிற போது என்னை ஏறிட்டு முறைத்துப் பார்த்தாரே!" என்றார்.

"நான் வேறே ஒன்றும் சொல்லவில்லீங்க. கன்றுக்குட்டி விஷயத்தைத்தான் இலேசாக விசாரித்தேன். அதற்கு அவராலே சரியானபடி பதில் சொல்ல முடியவில்லை. யாரோ பலாப்பழத்தை உங்கள் வீட்டிலே கொடுத்து, வைத்திருக்கச் சொன்னாராம். மறு நாள் அந்த ஆள் வந்து திரும்ப வாங்கிக் கொண்டு போகிறபோது அதனுள் சுளையே இல்லையாம், அப்படிங்களா?"

"அட பாவி! அவர் எவ்வளவு பெரிய பொய் சொல்லி யிருக்கிறார், பார்த்தாயா!"

"ஏனுங்க? அந்த மாதிரி பலாப்பழ விஷயம் ஒன்றுமே நடக்க வில்லையா?"

"பலாப்பழம் கொடுத்து வைத்திருந்தது வாஸ்தவம். வீட்டிலே உள்ள எலிகள் அதைக் குடைந்து கொஞ்சம் தின்று விட்டன. அதை இந்த மனுஷன் இப்படிக் கயிறு திரித்துக் கூறியிருக்கிறாரே, உன்னிடத்திலே வந்து. இதை நான் அவரிடத்திலே கேட்காமல் விடப் போகிறதில்லே, ஆமாம்!"

"அப்படியே விட்டுத் தள்ளுங்க, ஐயா! அவர்தான் எதையும் தெளிவாகப் பார்க்காமலே பேசுகிறவராயிற்றே!"

"அவருடைய வண்ட வாளமெல்லாம் எனக்குத் தெரியாதென்று அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார். வெற்றிவேல்! அவர் தம்முடைய மாமனாரிடம்வாங்கின கடன் நானூறு ரூபாயையும் கொடுக்காமல் ஏமாற்றிவது எனக்குத் தெரியாதா? அவருடைய கதைகளை யெல்லாம் வெளியே சொன்னால் வெட்கக்கேடு, வெற்றிவேல்!" என்று அவனை வேலை செய்ய வொட்டாமல் முன்னும் பின்னும் திரும்பி ரங்நாதனின் வண்டவாளங்கள்பலவற்றை விவரமாகச் சொல்லி முடித்தார் முத்துசாமி.



* * *

அடுத்த தடவை ரங்கநாதன் சிகைஅலங்காரக் கூடத்தில் முடி திருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் போது வெற்றிவேல் ஒரு புன்னகையுடன் பேச்சைத் துவக்கினான். வாங்கிய கடனைக் கொடுக்காமல் மாமனாரை ஏமாற்றுவதை வெற்றிவேல் எடுத்துச் சொல்லவே, ரங்கநாதன் துள்ளிக் குதித்துவிட்டார்.

"இப்பவே நான் அவரிடத்திலே போய் இதைக் கேட்டு அவரை என்ன செய்கிறேன் என்று பார்!" என்று வெளியே கிளம்பினார்.

"இன்னும் முடிதிருத்தும் வேலை முடியவில்லையே. அதற்குள்ளே நீங்கள் எப்படி வெளியே போக முடியும்? தயவுசெய்து உட்காருங்கள்!" என்று நல்ல வார்த்தைகள் சொல்லி அவரைப் பழையபடி நாற்காலியில் அமர்த்தினான் வெற்றிவேல்.

"இவர் பேசுகிறதெல்லாம் பொய்யும் புரட்டும். செய்கிறதெல்லாம்மோசடி. என்னை வந்து மோசக்காரன் என்று சொல்கிறார். இவருடைய ஆபீஸில் கேட்டால் அல்லவா தெரியும், இவர் அங்கே போய் வீண்பொழுது போக்குகிறதும், நாலு நாளைக்கொரு தடவை ஜுரமென்று 'லீவு லெட்டர்' எழுதி அனுப்புகிறதும்.....தண்டச் சம்பளம் வாங்குகிறார்..." என்று யோசித்து யோசித்து முத்துசாமியின் மோசடிகளை யெல்லாம் எடுத்து விளாசிக் கொண்டிருந்தார். வெற்றிவேல் வாயை மூடிக்கொண்டு அவர் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தான். பாதி வேலை நடந்து கொண்டிருக்கையில் அவர் எழுந்து ஓடிப்போய் விடுவாரோ என்று அவனுக்குப் பயம். வேலை முடிந்ததும், பொங்கி எழுந்த கோபத்துடனும், சிவந்து எரிந்த முகத்துடனும் 'ஜிவ்'வென்று வெளியேறினார் ரங்கநாதன்.

* * *

வெற்றிவேலின் தூண்டுதல் காரணமாக முத்துசாமி-ரங்கநாதன் மனஸ்தாபம்நாளுக்கு நாள் முற்றிப் பெரும் அடிதடியில் வந்துவிடும் போலாகி விட்டது.

இதைக் கண்ட வெற்றிவேலின் மனச்சாட்சி அவனை உறுத்தத் தொடங்கியது. தன்னால் அவ்விருவரும் அடித்துக் கொண்டால் என்ன செய்வது என்ற பீதியும்பரிதாபமும் ஒருங்கே அவன்மனத்தில் வேதனையை உண்டுபண்ணின.

அடுத்த தடவை ரங்கநாதன் வந்தபோது வெற்றிவேல் தன் விபரீத நாடகத்தின் இறுதிக்கட்டம் சுபமாக முடிவதற்கான முயற்சியில் ஈடுபட்டான்.

"முத்துசாமி உங்களைப் பற்றிச் சில அந்தரங்கமான விஷயங்களை என்னிடத்திலே சொல்லியிருக்கிறார். அதைக் கேட்டால் நீங்கள் அசந்து போவீர்கள்" என்று ஒருசரடு திரித்தான் வெற்றிவேல்.

"என்னைப் பற்றி என்ன அந்தரங்கம் சொன்னான் அந்த அயோக்கியன்?" என்று நாற்காலியை விட்டுக் கீழே வேகமாக குதித்தார் ரங்கநாதன்.

"அந்த வீட்டுக்குக் குடி புகுந்தபுதிதில் அவருக்கு நீங்கள் எவ்வளவோ உதவிகள் செய்தீர்களாம்."

"உதவிகளா அதெல்லாம்? தியாகமென்று சொல்லவேண்டும்! பன்னிரண்டு மணிக்கு, அர்த்தராத்திரி வேளையிலே அவருடைய நோயாளிக் குழந்தையைத் தோளிலே தூக்கிக் கொண்டு இரண்டு மைல் நடந்திருக்கிறேன், ஆஸ்பத்திரிக்கு. அந்த நன்றி விசுவாசம் கொஞ்சங்கூட இல்லையே அவரிடத்திலே."

"இல்லாமல் என்னங்க! ரொம்ப நன்றியறிதலோடேதான் அவர் இதைப் பற்றிச் சொல்லி வருத்தப்பட்டார். இப்பேர்ப்பட்ட உபகாரியை நான் விரோதியாக்கிக் கொண்டேன், வெற்றிவேல்! அப்படின்னு மனசைத் திறந்து சொன்னாருங்க."

"நிஜமாக அவர் உணர்ந்து சொன்னாரா? பின்னே ஏன் அப்படியெல்லாம் என்னைப்பற்றி இல்லாததும் பொல்லாததும் உன்னிடத்திலே சொல்லி என் கோபத்தைக் கிளப்பினார்?"

"விரோதம் என்று ஏற்பட்டால் குறைகள் தானே ஒன்றுக்குப்பத்தாக வெளியிலே வரும்? இன்று விரோதம் ஏற்பட்டதனாலே பழைய உதவிகளை மறந்துவிடமுடியுமா, அவராலே?"

"அவ்வளவாவது நன்றியறிதலோடு இருக்கிறாரே! அதுவே போதும். அவர் இயற்கையிலே நல்லவர்தான். ஆனால் கொஞ்சம் முன்

அதிசப்படியான எஞ்சின் சக்தி பெற!

# சக்தி அதிகரிக்கப்பட்ட கால்டெக்ஸ் ஐஸி-ப்ளஸ் பெட்ரோல்

உபயோகியுங்கள்

— இன்றே டாங்கை ஒருதரம் நிரப்புங்கள்

எல்லா கால்டெக்ஸ் ஸ்டேஷன்களிலும் கிடைக்கும்

CALTEX

M 58



ஸ்ரீ எஸ். பி. ஆதித்தன், எம். ஏ., பார்-அட்-லா அவர்கள் குமாரி சௌ. சரஸ்வதிக்கும் ஸ்ரீ எஸ். கே. பெருமாள் நாடார் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி கே. பி. கந்தசாமி அவர்களுக்கும், சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. வாழ்க, மணமக்கள் !

---

கோபி. அதைப் புரிந்து கொள்ளாமல்தான் நான் அவரோடு வீணுகச் சண்டை போட்டேன். விரோதம் வளர்ந்து விட்டது.''

''நீங்கள் சொல்றது நூற்றுக்கு நூறு உண்மை. முன் கோபம் நீங்கின பிறகு பார்த்தால் அவரிடம் அன்பு நிறைந்திருக்கும்.''

''சந்தேகமென்ன அதிலே? ஒரு வீட்டுக்காக ஏழெட்டுப்பேர்கள் தீவிரமாக முயற்சி பண்ணிக்கொண்டிருக்கிறபோது இவர்போய்ச் சிபார்சு பண்ணி அமர்த்திக் கொடுத்தார். இந்தக் காலத்திலே எவன் செய்வான் அந்த மாதிரி உதவி? எப்பேர்ப்பட்ட அன்பு என்னிடத்திலே !'' என்று முத்துசாமி தமக்குச் செய்த உதவிகளையும், தம்மிடம் காட்டிய அன்பையும் சரமாரியாக ஒன்றுகூட விடாமல் வெளியிட்டார் ரங்கநாதன்.

* * *

மறுநாள் காலையில், முத்துசாமி முன் வேலி அமைப்பதற்காகத் தம் வீட்டுவாசலில் கோடுகள் கீறிக் கொண்டிருக்கையில் ரங்கநாதனின் ஐந்து வயதுப் பெண் நீலா, ஒரு கூடையில் ஏழெட்டு மாம்பழங்களைக் கொண்டுவந்து, ''எங்க ஊரிலே இருந்து வந்திச்சு. எங்கப்பா உங்களிடம் கொடுத்துட்டு வரச்சொன்னாங்க'' என்றாள்.

முத்துசாமிக்கு ஒன்றுமே புரியவில்லை. கடைக்கண்ணால் அந்த வீட்டு வாசலைப் பார்த்தார். சிரித்துக் கொண்டே திரும்பி ஓடிவந்த நீலாவை ஆவலோடு வரவேற்றுக் கொண்டிருந்தார் ரங்கநாதன். தமது முன் வேலித் திட்டத்தை ஆரம்பக் கட்டத்திலேயே நிறுத்தி விட்டு மாம்பழக் கூடையுடன் வீட்டுக்குள் போனார் முத்துசாமி.

அவர் எவ்வளவோ யோசனை பண்ணியும், ரங்கநாதனின் கடுமையான பார்வை திடீரென்று கனிவான பார்வையாக மாறி விருப்பதன் காரணம் அவருக்கு விளங்கவில்லை.

அடுத்த தடவை முத்துசாமி சிகைபலங்காரக் கூடத்துக்குப் போனவுடனேயே, ''எப்படிங்க இருக்கிறார் உங்க விரோதி?'' என்று கேலியாகக் கேட்டான் வெற்றிவேல். அவனுக்குத் தெரியும், அப்பொழுது இருவருக்கு மிடையே சமாதானச் சூழ்நிலை ஏற்பட்டிருக்க வேண்டும் என்று.

'' நீதானப்பா சொல்ல வேண்டும் ரங்கநாதன் இப்படி அன்பின் உருவமாக மாறி விட்டதன் காரணத்தை !'' என்று ஆவலோடு கேட்டார் முத்துசாமி.

'' கண்ணீர் விட்டாருங்க உங்களைப் பற்றி அவர் சொன்ன போது. அவருக்கு அந்த வீட்டை வாடகைக்கு வாங்கிக் கொடுக்கிறதுக்காக நீங்கள் கால் தேய அலைந்ததைச் சொல்லிக் கண்ணாலே அழுதாருங்க.''

'' நானும் எத்தனையோ பேர்களோடு சிநேகம் பண்ணியிருக்கிறேன், வெற்றிவேல். ஆனால் இந்த மனிதர் மாதிரி ஆருயிர் நண்பர் கிடைக்கிறதே அபூர்வம்''என்றார்முத்துசாமி.

அன்று காலையில் வெற்றிவேல் சிகைபலங்காரக் கூடம் திறந்தவுடன் முதல் வாடிக்கைக்காரராக நாற்காலியில் வந்து அமர்ந்தார் முத்துசாமி ! அவர் மட்டும் தனியாக வந்திருப்பதைக் கண்டதும் வெற்றிவேலின் முகத்தில் ஒரு ஏக்கக் குறி தோன்றியது. முத்துசாமியிடமே இதை நேரடியாகக் கேட்டு விடுவது என்று தீர்மானித்து, ''நீங்கள் இன்றைக்கு உங்கள் நண்பரோடு வரவில்லையே !'' என்று ஏக்கத்துடன் கேட்டான். அவன் அவ்வாறு கேட்டு முடிப்பதற்குள்ளே ரங்கநாதனே கூடத்துக்குள் நுழைந்து விட்டார். அவரைக் கண்டதும் எழுந்து, ''இதோ வந்துவிட்டாரே !'' என்றார் முத்துசாமி ஒரு புது மலர்ச்சி ஆரவாரத்தோடு.

''நான் உங்களுக்கு முன்னாடியே இங்கே வர வேண்டுமென்று அவசரம் அவசரமாகப் புறப்பட்டேன். அதற்குள் நீங்கள் இங்கே வந்து உட்கார்ந்து விட்டீர்களே? அதிருக்கட்டும். நீங்கள் என்னைப் பற்றி வெற்றிவேலிடத்திலே ஓரேயடியாகப் புகழ்ந்து என்னவெல்லாமோ சொல்லி யிருக்கிறீர்களே?''

'' பொய்யா அது? நீங்கள்தானய்யா என்னைப் பற்றி ரொம்ப தூரத்துக்கு உயர்வாகச் சரடு திரித்திருக்கிறீர்கள்'' என்றார் முத்துசாமி உணர்ச்சிப் பெருக்குடன்.

இவர் புகழ்ந்ததை அவர் மறுத்தார். அவர் புகழ்ந்ததை இவர் மறுத்தார். சுமார் ஒரு மணி நேரமாகச் சீப்பையும் கத்திரிக்கோலையும் பிடித்தபடியே சும்மா நின்று கொண்டிருந்தான் வெற்றிவேல். '' நாங்கள் இரண்டு பேரும் இப்போ முடி வெட்டிக் கொள்ளவில்லை, வெற்றிவேல்! நாளைக்கு வருகிறோம்'' என்று ஏகமனதாகச் சொல்லி விட்டு இருவரும் கைகோத்த வண்ணம் தங்கள் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

வெற்றிவேல், கத்திரிக்கோலைக் கீழே வைத்து விட்டு, நண்பர் இருவரும் உற்சாகமாகப் பேசிக் கொண்டு போவதை வெற்றிக் களிப்போடு பார்த்துக்கொண்டு நின்றான்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

Registered No. M. 6393
Registered as a Newspaper in Ceylon